ஆயிருக்கிறதென்று ஸஹஸ்ரநாமத்திலே வருகிறது. அங்கே வகிட்டுக் குங்குமத்தை ''ஸீமந்த ஸிந்தூரீ''என்றே சொல்லியிருக்கிறது. வகிட்டிலே தான் குங்குமம்; நெற்றியில் - அதாவது, திலகமிட்டுக் கொள்ளும் புருவ மத்தியில் - கஸ்தூரிப்பொட்டு என்பதாக அம்பாள் வைத்துக் கொண்டிருப்பதாக ஸஹஸ்ரநாமத்திலிருந்து ஏற்படுகிறது. ''முக சந்த்ர களங்காப ம்ருக நாபி விசேஷகா'' என்று அதில் நாமா வருகிறது. சந்திரனுக்கு மத்தியில் களங்கத் திட்டு மாதிரி அம்பாள் முகத்தில் கஸ்தூரிப் பொட்டு என்று அந்த நாமா சொல்கிறது. நெற்றியை வர்ணிக்கும் நாமாவுக்கும் புருவத்தை வர்ணிக்கும் நாமாவுக்கும் இடையே இந்த நாமா வருவதால் இது புருவ மத்தியைச் சொல்வதாக ஸ்பஷ்டமாகிறது. வகிட்டில் குங்குமம் - 'ஸீமந்த ஸிந்தூரீ'. இங்கேயும் அம்பாளுடைய வகிட்டுக் குங்குமத்தைத்தான் ஆசாரியாள் ஸிந்தூரம் என்று சொல்லியிருக்கிறார்.

சாஸ்திரப்படி ஸௌமங்கல்யத்துக்கு, ஸௌபாக்யத்துக்கு பெண்கள் குங்குமம் இட்டுக் கொள்ளவேண்டிய இடம் வகிடுதான். நெற்றி நடுவில் இட்டுக் கொள்வது அலங்காரத்துக்குத்தான். மனஸை ஒருமுகப்படுத்தும் ப்ரூமத்தியில் (புருவங்களில் நடுவில்) பரமாத்மாவை கன்ஸென்ட்ரேட் பண்ணுவதாலேயே அங்கே சந்தனம். விபூதி இட்டுக் கொள்கிறது போல குங்குமமும் அங்கே இட்டுக் கொள்ளப்படுவதாகவும் சொல்லலாம். அப்படியானாலும் ஸுமங்கலித்தன்மை என்பதற்கு இதிலே விசேஷம் இல்லை! பழைய நாளில் ஸுமங்கலிகள் முதலில் வகிட்டிலேயே குங்கும் இட்டுக்கொண்டு அப்புறம்தான் அதை நெற்றியிலும் வைத்துக் கொள்வார்கள்.

'பாக்யலக்ஷ்மி' என்றே சொல்லப்படும் மஹாலக்ஷ்மியின் ஸாந்நித்யத்தை பெற அவளுடைய வாஸஸ்தானமான வகிட்டிலேயேதான் குங்குமம் இட்டுக்கொள்ள வேண்டும். வகிடு பூராவும் அப்பிக் கொள்கிறவர்கள் இருக்கிறார்கள். அப்படியில்லாவிட்டாலும் நெற்றிக்கு மேலே வகிடு பிரிகிறதே, அந்த ஆரம்பத்தில் குங்குமத்தை இட்டுக் கொள்ள வேண்டும்.

அம்பிகையோ வகிடு பூராவும் இட்டுக் கொண்டிருக்கிறாள்: ''வஹந்தீ ஸிந்தூரம்.. ஸீமந்த ஸரணி:'' - 'குங்குமத்தைத் தரிப்பதான வகிட்டுப்பாதை', வகிடு பூராவும் இட்டுக் கொண்டிருந்தால்தான் ஸிந்தூர குங்குமம் 'ஸரணி' என்னும்படியான நேர்பாதை ரூபத்தில் இருக்கும். ஆரம்பத்தில் மட்டும் இருந்தால் வட்டமாக ஒரு பொட்டாகத்தான் இருக்கும். ஆசார்யாள் மேற்கொண்டு சொல்வதிலிருந்து - அதுதான் இந்த ச்லோகத்தின் காவ்ய ரஸத்துக்கும் கல்பனைக்குமே உயிர். நிலையாக இருக்கிற வர்ணனை - அம்பிகை வகிடு ஆரம்பிக்கிற இடத்தில் பெரிய வட்டப் பொட்டாக இட்டுக்கொண்டு, அதையே மேலே வகிட்டோடு வகிடாக, முடிகிறவரை மெல்லிசுக் கோடாக இழுத்துவிட்டுக் கொண்டிருக்கிறாள் என்று தெளிவாகத் தெரிகிறது.

இப்படி அம்பாளின் ஸீமந்தத்தைத் தியானம் பண்ணுவதைக் காட்டிலும் பாக்யம், ஆனந்தம் இல்லை. ஸர்வ மங்களையான தேவியின் திவ்ய ஸ்வரூபத்தில் ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மி வஸிக்கிற ஸ்தானத்துக்குக் குங்குமாலங்காரம் பண்ணியிருக்கிறது.

அம்பாள் ஸந்நிதியில் எப்போதும் ஸகியாக, கிங்கரியாகவே இருப்பவள் லக்ஷ்மீ. பரதேவதைக்கு இரண்டு பக்கத்திலும் லக்ஷ்மியும் ஸரஸ்வதியும் கவரி வீசுகிறார்கள்

*என்று ஸஹஸ்ரநாமத்தில் இருக்கிறது: ஸ சாமர ரமா வாணீ ஸவ்ய தக்ஷிண ஸேவிதா. இப்படிச் சேடிகளாக அவர்களை வைத்துக்கொள்ளாமல் அவர்களைத் தன்னுடைய இரண்டு நேத்ரங்களாகவே அம்பாள் வைத்துக் கொண்டதுதான் காமாக்ஷி என்ற அவஸரம் என்பார்கள் - 'கா' என்றால் ஸரஸ்வதி; 'மா' - லக்ஷ்மி; 'அக்ஷி' என்றால் கண். 'கா'வையும், 'மா'வையும் 'அக்ஷி'யாகக் கொண்டவள் 'காமாக்ஷி'.*

*ஸரஸ்வதியைத் தூக்கித் தன்னுடைய நாக்கு நுனியில் அம்பாள் வைத்துக் கொண்டிருக்கிறாளென்றும் இந்த ஸௌந்தர்யலஹரி பின் ச்லோகமொன்றில் (64) ஆசார்யாள் சொல்கிறார். அம்பாளுக்கு வாக் ப்ரதானம் (வாக்குவன்மை வழங்குதல்) முக்யமென்று முன்னேயே சொல்லியிருக்கிறேனல்லவா? அதனால்தான் நல்ல பண்டிதர்களைப் பற்றிக்கூட 'அவா நாக்கு நுனியிலே ஸரஸ்வதியே நாட்யமாடறா' என்று சொல்கிற ரீதியில் அம்பாளுடைய ஜிஹ்வாக்ரத்திலும் அவள் இருப்பதாகச் சொல்லியிருக்கிறார். ''நாத்திகம் பேசி நாத்தழும்பேறி'' என்பதற்கு மாறாக ஈச்வரனுடைய குணகண லீலைகளை அம்பாள் ஓயாமல் ஜபிக்கிற மாதிரி பேசிப் பேசியே அவளுடைய நாக்கு ரத்தம் கட்டிப்போய் செம்பருத்திப் பூ மாதிரிச் சிவந்துவிடுகிறதாம்! செம்பருத்திக்கு 'ஜபா' என்று பெயர். ஈச்வர கதைகளை 'ஜபம்' பண்ணிப் பண்ணியே நாக்கு 'ஜபா'வாச்சு என்று வார்த்தை விநோதம் பண்ணி இருக்கிறார்! அப்படி அவளுடைய ஜிஹ்வா சிவக்கிற போது அதன் நுனியிலிருக்கிற வெள்ளை ஸரஸ்வதியும் செவேலேன்று ரத்ன விக்ரஹம் மாதிரி ஆகிவிடுகிறாளென்று அங்கே கல்பித்திருக்கிறார். வெள்ளை சிவனை அம்பாள் சிவப்பாக்கினாளென்று பல இடத்தில் சொன்னதற்கேற்க அவருடைய ஸஹோதரியான ஸரஸ்வதியையும் அவள் (சிரித்து) 'ரெவல்யூஷனரி'யாக (புரட்சியாளராக)ப் பண்ணினாளென்கிறார்! அருண ஸரஸ்வதியாக அம்பாளை உபாஸித்து 'ச்ருங்கார லஹரி'யாகக் கவி பாடுகிறவர்களைப் பற்றி முன்னே பார்த்தோம். இங்கேயோ வெள்ளை ஸரஸ்வதியே அருணமானதாகக் கல்பனை!*

*சாமர கைங்கர்யம் பண்ணுபவர்களில் ஒருத்தியைப் பெருமைப்படுத்தி இப்படி நாக்கு நனியில் வைத்துக் கொள்ளும் அம்பாள் இன்னொருத்தியை - மஹாலக்ஷ்மியை - அதற்கு மேலும் பெருமையாக, ''தலைக்கு மேலே தூக்கி வெச்சுண்டு'' என்கிறோமே, வாஸ்தவமாகவே அப்படித் தன்னுடைய ஸீமந்தத்திலே தூக்கி வைத்துக் கொண்டு அவளுக்கு ஸிந்தூர குங்குமாலங்காரம் பண்ணியிருக்கிறாள்!*

*பாக்யலக்ஷ்மியின் வாஸ ஸ்தானமாக எந்த ஸுமங்கலியிடமும் உள்ள ஸீமந்தம் ஸௌபாக்யத்தின் ஜன்ம ஸ்தானமாயுள்ள அம்பாள் விஷயத்தில் இன்னம் எத்தனை உயர்வு பெற்றிருக்கணும்? ஸௌபாக்ய-ஸௌந்தர்யங்களுக்கு அதுவே உச்சி என்று த்யானம் பண்ணவேண்டும். ''உச்சித் திலகம்'' என்று இந்த ஸீமந்த ஸிந்தூரத்தைத்தான் 'அபிராமி அந்தாதி' ஆரம்பத்திலேயே பட்டர் சொல்கிறார். ''உச்சித் திலகம்'' என்று போட்டிருக்கிறார். - கவனிக்கணும்; 'நெற்றித் திலக'மில்லை, 'உச்சித் திலகம்'! ஸுமங்கலிகள் நெற்றிக்கிட்டுக் கொள்வது தவிர அவச்யம் 'உச்சி'யான வகிட்டிலேயும் சிவப்புக் குங்குமம் வைத்துக் கொள்ளணும்.....*

*முந்தின ச்லோகத்திவ் வர்ணித்த கருநெய்தல் காடு மாதிரியான அம்பாளுடைய கேசத்தை நடுமத்தியில் பிளந்து கொண்டு வகிடு ஓடுகிறது. இயற்கையில் வகிடு வெளுப்பாக இருப்பது. ஆனால் வெள்ளை சிவனையும் ஸரஸ்வதியையுமே சிவப்பாகப் பண்ணிவிடும் அம்பாள் ஸிந்தூரத்தைப் பூசித் தன் வெள்ளை வகிட்டையும் சிவப்பாக்கியிருக்கிறாள்! அலை அலையாகக் கன்னங்கரேல் என்று உள்ள அவளுடைய தலைமயிருக்கு நடுவில் செக்கச் செவேலென்று ஸீமந்த ஸரணி ஜ்வலிக்கிறது.*

*நம்மில் பல பேருக்கு இந்த மாதிரி அழகுகளை ரஸிக்கேவ தெரியவில்லை. 'காலக்ஷேப'த்துக்குப் பிரயோஜனமுண்டா என்று* utility *-ஐ மட்டும் பார்த்துக் கொண்டு இதெயெல்லாம் விட்டுவிடுகிறோம். சில பேர் ரஸிக்கிறோம். கவிகளாக இருக்கிறவர்களுக்கோ ஒரு அழகைப் பார்த்தவுடன் அதோடு நின்றுவிடாமல் அதே மாதிரி வேறு அழகுகள் இருப்பதை நினைத்தோ, இல்லாவிட்டால் நூதனமாக - ஆனாலும் பொருத்தமாக - கல்பனை பண்ணியோ பார்த்து இதை விஸ்தாரம் பண்ணி தீர்க்கமாக அநுபவிக்கத் தோன்றுகிறது.*

*கன்னங்கரேலென்று கருநீலக்கடல் அலை வீசுகிற மாதிரி நெளிநெளியாகக் கேசத்தை இழைய வாரிவிட்டுக் கொண்டுள்ள அம்பாளின் சிரஸுக்கு நடுவிலே பிரகாசமாக இந்த ஸீமந்தரேகை செவேல் என்று ஓடுகிறதைப் பார்த்ததும் ஆசார்யாளுக்கு என்ன உவமை தோன்றுகிறது?*

**''............ப்ரபல-கபரீ-பார-திமிர**
**த்விஷாம் ப்ருந்தைர்-பந்தீக்ருதம் இவ நவீநார்க கிரணம்'' ॥**

*'நவீநார்க கிரணம்' - 'அர்க்கன்' என்றால் ஸூர்யன் 'அர்க கிரணம்' - ஸூர்ய கிரணம். 'நவீன' அர்க்கனாம்! 'நவீன' என்றால் 'புதிய', பால 'நவீநார்க கிரணம்' என்றால் உதய ஸூர்ய ரச்மி*

*உதய ஸூர்யன் எப்படி இருக்கிறான்? செக்கச் செவேலென்று இருக்கிறான். அதுதான் ராஜராஜேச்வரியின் நிறம். ''உத்யத் பாநு'' என்று அதை ''ஸஹஸ்ரநாம'த்தில் சொல்லியிருப்பதைத்தான் அபிராமி பட்டர் அந்தாதியின் முதல் வார்த்தையாக ''உதிக்கின்ற செங்கதிர்'' என்று போட்டிருக்கிறார்! உதித்து நாழி ஆக ஆக ஸூர்யனின் சிவப்பு போய் அவன் வெள்ளி நிறமாகிவிடுவான்.*

*உதிக்கும் கதிரவனின் செங்கதிர்களில் ஒன்றாகத்தான் அம்பாளுடைய ஸிந்தூர ஸீமந்தத்தை ஆசார்யாள் பார்க்கிறார். வகிடு ஆரம்பத்தில் அவள் பெரிய பொட்டாக இட்டுக் கொண்டிருக்கிற திலகம் உதய ஸூர்யனைப் போல இருக்கிறது. அதிலிருந்து கிளம்பி மேலே போகிற ஸிந்தூரக் கோடு பால ஸூர்யனிலிருந்து புறப்படும் ஒரு கிரணம் போல இருக்கிறது.*

*''ப்ரபல கபரீ-பார-திமிர-த்விஷாம் ப்ருந்தைர்-பந்தீ க்ருதம்'' என்று என்னவோ பல்லை உடைக்கிற மாதிரிச் சொல்கிறாரே, இதற்கு என்ன அர்த்தம்? ஓசை நயத்தாலேயே - அதாவது அது நயமா இல்லாததாலும்தான்! - பொருளின் நயத்தையோ, கடினத்தையோ ஆசார்யாள் தெரிவித்து விடுகிறவரல்லவா? இங்கே வார்த்தைகளைப் பார்த்தால்*

*சண்டைக்கு வருகிற மாதிரி இருக்கிறதே! யார் யாரிடம் சண்டைக்கு வருகிறார்கள்? ஸீமந்த ஸரணியைத் தானே முக்யமாகச் சொன்னார்? அதோடு யார் குஸ்திக்கு வருவது?*

*''கபரீ-பார-திமிரம்'' என்றால் 'அம்பாளுடைய கேச பாரத்தின் கருமை என்கிற இருட்டு', 'ப்ரபல' என்று அதற்கு முன் அடைமொழி கொடுத்திருக்கிறது. 'ப்ரபலம்' என்றால் 'புகழ் வாய்ந்த,* famous' *என்று நினைக்கிறோம். நேர் அர்த்தம் 'விசேஷ பலம் கொண்ட' என்பதேயாகும். முன்னே சொன்ன கேச பாரத்தின் இருட்டுக்குத்தான் இப்படி விசேஷ பலம் இருப்பதாகச் சொல்கிறார். ஜாஸ்தி பலம் இருந்தால் சண்டை போடத்தானே தோன்றும்? அதனால் அதுதான் சண்டைக்குப் போகிறது. யாரிடம்? இருட்டு யாரிடம் சண்டைக்குப் போகும்? வெளிச்சத்திடம் தானே? ராத்ரியைப் போக்கிப் பகலை உண்டு பண்ண வரும் பால ஸூர்யனைத்தான் ஜன்ம சத்ருவாக நினைத்து இருட்டு சண்டைக்குப் போகும். இங்கே இருட்டு அம்பாளின் கேசமாயிருக்கிறதென்றால் பால ஸூர்யன்தான் ஸிந்தூரமாக வந்திருக்கிறானே! அதுவும், அவள் வேறே எங்கேயோ கையில், காலில் அதை இட்டுக் கொண்டிருந்தாலும் தலைமயிர் அதனிடம் ஒன்றும் பண்ணிக் கொள்ள முடியாது. அவளோ நன்றாக இடம் பார்த்து இந்தக் கேச பாரத்துக்கு வாய்ப்பாகத் தன் சிரஸ் உச்சியிலேயே அல்லவா இந்த பால ஸூர்யனைக் கொண்டு வந்து வைத்துக் கொண்டிருக்கிறாள்? அதனால் இந்த கேச இருட்டு அதோடு சண்டை போட உத்ஸாஹமாகக் கிளம்பி விடுகிறது.*

*''ஒளி கிட்டே வந்தால் இருள் ஓட்டம் பிடிக்க வேண்டியதுதானே? இருட்டாக இருக்கிற இடத்திலே ஒரு தீபத்தைக் கொண்டு வந்தால் உடனே இருட்டு ஓட்டம் பிடிக்க வேண்டியதுதானே? தினம் தினம் ஸூர்யன் வந்தானோ இல்லையோ இருட்டு இருந்த இடம் தெரியாமல் மறைந்துதானே போகிறது? ஞானம் வந்தால் அஞ்ஞானம் மிச்சம் மீதி இல்லாமல் தொலைகிறதற்கே 'ஸூர்யனைக் கண்ட இருள் போலே' என்று த்ருஷ்டாந்தம் கொடுக்கிறார்களே! அப்படியிருக்க ஸூர்யனையாவது, இருட்டு தைரியமாக உத்ஸாஹமாக எதிர்த்துக் கொண்டு வருவதாவது?'' என்றால் - அம்பாள் இருட்டுக்குக் கொடுத்திருக்கிற இடத்தில்தான் இப்போது மாறுதலாக ஏற்பட்டிருக்கிறது. ஒருவர் எதையும் பண்ணலாம் என்று ஸ்வாதீனம் கொடுத்திருந்தால் 'அவனுக்கு ரொம்ப எடம் (இடம்) கொடுத்துட்டே!' என்று சொல்கிறோம். அம்பாள் இந்த இருட்டுக்குத் தன் தலையிலேயே 'இடம் கொடுத்து விட்டாள்! அதற்கு ''கன ஸ்நிக்த ச்லக்ஷ்ணம்'' என்று தினமும் தைலம் போட்டு மேலும் மெருகு கொடுத்து, அதில் தேவ லோக புஷ்பங்களையெல்லாம் சூட்டிக் கொண்டு செல்லம் கொடுக்கிறாள். அவளுடைய பக்க பலத்தில்தான் அதற்கு 'ப்ரபலம்' ஏற்பட்டு தைரியம் கொடுத்து விட்டது!*

*''கருடா ஸுகமா?'' - ''இருக்கிற இடத்தில் இருந்தால் ஸுகம்தான்!'' என்று ஒரு வசனம் சொல்கிறோமே அதுகூட இது போலக் கதைதான்.*

*''கருடா ஸுகமா?'' என்பது ஆதிசேஷ வசனம். ''இருக்கிற இடத்தில் இருந்தால் ஸுகம்'' என்பது அதற்கு கருடனின் பிரதி வசனம் (மறுமொழி)*

*க்ஷீர ஸமுத்ரத்தில் சயனித்துக் கொண்டும், வைகுண்ட ஸதஸில் ராஜ்யபார தர்பார் பண்ணிக் கொண்டும் பெருமாள் இரண்டு விதமாக இருப்பார். அவருடைய க்ஷீராப்தி*

*சயன ஸமயத்தில்தான் அனந்த-கருட-விஷ்வக்ஸேநாதிகள் கூட இருந்து ஸேவிப்பது. இவர்களில் 'அனந்த' என்றதுதான் ஆதிசேஷன். அவர் மேலேதான் பெருமாள் அனந்த சயனமாக, ஆனந்த சயனமாகவும் படுத்துக் கொண்டிருப்பது.*

*அதே ஆதிசேஷனுக்குப் பெருமாளுடைய வைகுண்ட தர்பாருக்குப் போவதற்கே பயம். அங்கே கருடனுக்குத்தான் பிராதான்யம். பாற்கடலில் சயனிக்கிறபோது ஆதிசேஷன் பெருமாளைத் தாங்குகிறார்; தாங்கிக் கொண்டு, இருந்த இடத்திலேயே இருக்கிறார். அப்போது கருடன் ககன வீதியில் நின்று ஸேவிப்பதோடு ஸரி. ஆனால் பெருமாள் படுக்கையை விட்டாரோ இல்லையோ கருடனுக்குத்தான்* importance. *கோவிலுக்குக் கோவில் 'பெரிய திருவடி' என்று அவருக்குத்தான் பெருமாளுக்கு நேரே ஸந்நிதி. அவருடைய சிறப்பான பெருமை அவர் பெருமாளைத் தாங்குவது மட்டுமின்றி, தாங்கிக்கொண்டு ஒரே இடத்தில் ஆதிசேஷனைப்போல இல்லாமல், பறப்பாகப் பறக்கிறார். எந்த லோகத்திலேயோ ஒரு கஜேந்திரன் கதறினால் க்ஷணத்துக்குள் அங்கே பெருமாளைத் தூக்கிக் கொண்டு ஓடுகிறார்.*

*பாம்புக்கும் கருடனுக்கும் ஜன்மப் பகை. எப்போதும் கருடன்தான் ஜயிக்கும். பாம்பை அப்படியே கொத்திக் கீறி பக்ஷணம் பண்ணிவிடும். லோகத்தையெல்லாம் நடுங்க வைக்கிற பாம்புக்கு கருடன் என்றால் மட்டும் நடுக்கம்! யானைக்கு ஸிம்ம ஸ்வப்பனம், எலிக்குப் பூனை மாதிரி.*

*லோகத்தையெல்லாம் தூக்கிக் கொண்டிருக்கும் ஆதிசேஷனுக்கு பெருமாளுடைய வாஹனமாக இருக்கப்பட்ட கருடாழ்வாரிடம் குலை நடுக்கம்தான். அதனால் பெருமாள் வைகுண்ட தர்பார் நடத்துகிற இடத்துக்குப் போகவே பயம்.*

*இப்படித் தொடை நடுங்கிறவர், க்ஷீராப்திக்கு கருடன் வந்து பெருமாளை ஸேவிக்கும்போது அவரைப் பார்த்தார். இங்கே தனக்குத்தான் முக்யத்வம் என்று ஆதிசேஷனுக்குப் பெருமை ஏற்பட்டது. தன் மேலேயே பெருமாள் ரக்ஷையாகப் ''பச்சைமாமலை போல் மேனி'' யைத் தலையோடு கால் நீட்டிப் படுத்துக் கொண்டிருப்பதில் அவருக்கு ஏக தைரியம் வந்துவிட்டது!*

*ஸாதாரணமாக ஸ்தானத்தில், சக்தியில் பெரியவர்களைப் பார்த்தால் நமஸ்காரம் செய்ய வேண்டும்; நமஸ்கார வசனம் சொல்ல வேண்டும். அவர்கள் பெயரைச் சொல்லக் கூடாது. ஸம அந்தஸ்தாக இருந்தால் குசலப் பிரச்னம் - ''ஸௌக்யமா?'' என்று கேட்க வேண்டும். அப்போதும் பேரைச் சொல்லிக் கூப்பிடக் கூடாது. நாம் பெரியவராக இருந்து மற்றவர் சின்னவராக இருந்தால்தான் பேரைச் சொல்லி, ''ஸௌக்யமா?'' என்று கேட்கலாம்.*

*கருடனை எப்போதும் பெரியவராகக் கொண்டு பயப்பட்டு பதுங்கிக் கொண்டிருந்த ஆதிசேஷனுக்கு இப்போது பெருமாள் தன் மேலேயே இருக்கிற தைரியத்தில் தன் ஸ்தானம் உயர்ந்துவிட்டது என்று தோன்றியது. ஜன்மாவில் ஒரு தடவை, இப்போதாவது அவரைக் கொஞ்சம் நாஸூக்காக மட்டம் தட்டிப் பார்க்கலாமே என்று ஆசை உண்டாயிற்று.*

*உடனே அவர் பேரைச் சொல்லிக் கூப்பிட்டு, ''ஏன் கருடா, ஸுகமா?'' என்றார் க்ருதக்காகத்தான் கேட்டார்.*

*கருடனுக்குப் புரிந்து விட்டது. திடீரென்று ஆதிசேஷனுக்கு இவ்வளவு துணிச்சல் எப்படி என்று புரிந்து விட்டது. அவரும் ரொம்ப சாதுர்யமாக ஆதிசேஷனுக்கு உறைக்கிற மாதிரி, ''இருக்கிற இடத்தில் இருந்தால் ஸுகந்தான்'' என்றார்.*

*ஆதிசேஷன் கேட்டது கருடன் ஸுகத்தை. அவருடைய ஸுகத்துக்கு எப்போதுமே குறைச்சவில்லைதான். பயந்தானே பெரிய அஸுகம்? கருடாழ்வாருக்கு ஒருபோதும் பயமேயில்லை. பயப்பட்டு, பயப்பட்டுப் பாதி நாழி ஸுகத்தை இழப்பது ஆதிசேஷன் தான்! பெருமாள் அவரிடத்தில் இருக்கிற மட்டும்தானே அபய நிலையான ஸௌக்யம் அவருக்கு உண்டு? அதனால் அவர் கருடன் ஸுகத்தைக் கேட்க இவரே அவருடைய ஸுகத்தையே குத்திக் காட்டி, இருக்கிற இடத்தில் இருந்தால் ஸுகம்தான்'' என்றார். இப்படி கதை.*

*கிரஹங்கள்கூட ஸ்வக்ஷேத்ரத்தில் (அததன் ஸொந்த வீட்டில்) இருந்தால்தான் 'பவர்' என்கிறார்கள். இருக்கிற இடத்தில் இருக்க வேண்டும்.*

*இருட்டு இருக்கிறதே, அது எங்கேயோ லோகத்தில் திண்டாடிக் கொண்டிருந்தது. அதற்கு நேர் பகை வெளிச்சம். ஆனாலும் அதை இதனால் எதிர்க்க முடியவே இல்லை. பால ஸூர்யன் அதோ அங்கே தலையை எட்டிப் பார்த்தானோ இல்லையோ, சக்தி தாங்க முடியாமல் இது ஓட்டம் பிடிக்க வேண்டியே இருந்தது. நடு மத்யான்ன ஸூரியனைவிட பால ஸூர்யன்தான் இருட்டுக்குக் கடும் பகை. மத்யான்ன ஸூர்யனை அதற்குத் தெரியவே தெரியாது. பால ஸூர்யன் வந்தவுடனேயேதான் அது ஓடி விடுகிறதே! ''ரா முழுக்க லோகம் பூராவையும் நமக்குள்ளே பிடித்து வைத்துக் கொண்டிருந்தோமானாலும், கடைசியில் ஒரு நாளைப்போல, இந்த ஸூர்யக் குஞ்சு அங்கே வரும்போதே இங்கே நாம் ஓடும்படியாகிறதே!'' என்று அதற்கு ரொம்பவும் அவமானம், மாளாத க்ஷாத்ரம். ''இந்த பால ஸூர்யனை எங்கேயாவது, எப்போதாவது நாம் வளைத்துக் கொண்டு இவன் நம்மை ஒன்றும பண்ண முடியாதபடிக் கட்டிப் போடணும்'' என்று அது சபதம் பண்ணிக் கொண்டிருந்தது!*

*இப்போது அம்பாள் லோகத்தில் திண்டாடிக் கொண்டிருந்த இருட்டை அப்படியே வாரித் தன் கேச பாரமாக ஆக்கிக் கொண்டு, அப்புறம் அந்தக் கேசபாரத்தையும் வாரி வகிடெடுத்து அந்த பால ஸூர்யனையே கொண்டு வந்து நேரே இந்தக் கேச மத்தியில் வைத்தாளோ இல்லையோ, இருட்டுக்கு ஒரே குஷி, தைரியம் வந்து விட்டது!*

*அந்த உச்சித்திலக ஸூர்யனை அப்படியே சுற்றிச் சூழ்ந்துகொண்டு அதிலிருந்து பரவும் கிரணங்களையெல்லாமம் முழுங்கிவிட்டது. இருளைத்தான் ஒளி முழுங்கும் என்பதற்கு மாறாக, விசித்ரமாக, இங்கே இருள் ஒளியை முழுங்கி விட்டது. பால ஸூர்யன் மாதிரியான ஸிந்தூர திலகத்தின் பிரகாசம் எப்படி ஸூர்ய ஒளி பரிதி மண்டலத்தைச் சுற்றி எல்லாத் திசையிலுள் வியாபிக்கிறதோ, அப்படி அம்பாளுடைய சிரஸ் முழுக்க வியாபித்து அவளுடைய குந்தளம் முழுவதையும் சிவப்பு ஜ்யோதியாக அல்லவா மாற்றி இருக்க வேண்டும்? அப்படியில்லாமல் ஒரே ஒரு கிரணம் மட்டும் வகிடு*

ரூபத்தில் மேலே செக்கச் செவேலென்று போயிருக்கிறது. பாக்கிக் கிரணமெல்லாம் எழும்ப முடியாதபடி கேசத்தில் புதைந்து போய் அந்தக் கேசம் மட்டும் கருகருவென்று மின்னுகிறது என்றால் - அந்தச் செக்கச் செவேல் ஒளியுடன் இந்தக் கன்னங்கரேல் இருட்டுத்தான சண்டை போட்டு, ஜயித்து அமுக்கிப் பிடித்து வெளியிலே வர முடியாதபடி பண்ணி விட்டது என்றுதானே ஆகிறது?... நன்றாக த்யானம் பண்ணிப் பார்க்கணும்: மஹா ஸுமங்கலியான ஸாக்ஷாத் அம்பாளுடைய வகிடு ஸிந்தூர குங்குமம் அப்பிச் செக்கச் செவேல் ரேகையாயிருக்கிறது: சுற்றிலும் அதை நெருக்கிக் கொண்டு அலை அலையாகக் கன்னங்கரேல் என்று அவளுடைய கேச பாரம்; அந்தக் கறுப்பே இந்தச் சிவப்பைத் தூக்கலாகவும், இந்தச் சிவப்பே அந்தக் கறுப்பைத் தூக்கலாகவும் எடுத்துக் காட்டுகிறது.

குங்குமமான பால ஸூர்யனிடம், ''இப்போது உன் கைவரிசையைக் காட்டேன்!'' என்று கேசபாரமான இருட்டு வந்து 'சாலஞ்ஜ்' பண்ணி அப்படியே அதை நாலா பக்கத்திலும் வளைத்துக்கொண்டு ஒரு ரச்மி தவிர பாக்கி எல்லாவற்றையும் கபளீகாரம் பண்ணியிருப்பதாகத் தெரிகிறது.

ஒரு ரச்மியை மட்டும் ஏன் விட்டு வைத்தது? இதுவும் இல்லாவிட்டால் ஸூர்யனோடு இது சண்டை போட்டதற்கு அடையாளமே இருக்காதே! கிரணமாக ஒளி பரப்பாமல் அநேக சிவப்பு வஸ்துக்கள் இருக்கிறது போல இங்கேயும் (ஸிந்தூரப் பொட்டு) இருக்கிறதாக்கும் என்று தானே நினைப்போம்? ஒரே ஒரு ஸூர்ய கிரணம் மட்டும் இருந்தால்தானே 'இதென்ன ஆச்சரியம்?' என்று பார்ப்போம்; அதற்கப்புறம் பாக்கி கிரணங்களையெல்லாம் இருட்டு ஜயித்துவிட்டது என்று தெரிந்து கொள்வோம்.

''த்விஷாம் ப்ருந்தை:'' - என்றால் 'சத்ருக் கூட்டத்தால்' என்று அர்த்தம். 'த்விஷ்' என்பதிலிருந்துதான் 'த்வேஷம் வந்தது. 'ப்ருந்தம்' - கூட்டம். இருட்டு என்பது அலை அலையான கேச ரூபத்தில் அணி அணியாக வருகிற சத்ருப் படைபோல் இருக்கிறது. இப்படிப் படையெடுத்து வந்து சத்ரு ஸைன்யத்தால், 'பந்தீக்ருதம் இவ'' என்றால் 'ஜெயிலில் போட்டாற் போல்' என்று அர்த்தம். சிறை வைக்கப்பட்டது போல ஸீமந்தஸிந்தூரமாகிய இளம் ஸூர்யன் தோன்றுகிறது.

பாக்கி கிரணங்களை முழுங்கினது மட்டுமில்லை; முழுங்காமல் விட்டு வைத்த இந்த ஒரு கிரணத்துக்காவது ஸ்வயேச்சையாக இருக்க ஸ்வதந்திரமுண்டா என்றால், இல்லை. அது இந்தண்டை அந்தண்டை நகர முடியாதபடி அதை ஜெயிலில் போட்டு அடைத்திருக்கிறது. நேர் வகிடாக சிரஸுக்கு மத்யத்தில்தான் எடுக்க வேண்டும். இந்தப் பக்கம், அந்தப் பக்கம், கோணல் வகிடு என்று அதை இஷ்டப்படி இடம் மாற்றிக் கொண்டே இருக்கக் கூடாது. அப்படிப்பட்ட ஸஞ்சார ஸ்வதந்திரமும் அதற்கில்லை என்பது ''பந்தீக்ருதம்'' என்பதிலிருந்து ஏற்படுகிறது. திவ்ய ஸாந்நித்யம் வேண்டுமென்றால் கோணல் வகிடெல்லாமம் கூடாது. அதே மாதிரி, சுத்த மஞ்சளில் பண்ணிய சிவப்புக் குங்குமந்தான் இட்டுக் கொள்ளணும். மைதா குங்குமம், கலர் கலராகப் பொட்டு ஒட்டிக் கொள்வதெல்லாம் தோஷம்.

'பந்தம்' என்று நாலாவது dha போட்டுச் சொன்னால் அதற்குள்ள பல 'மீனிங்கு'களில் 'கைது செய்வது' என்பதும் ஒன்றாகும். ''பந்தீ'' என்று இங்கேயிருப்பது போல் மூன்றாவது 'தீ' (dee) போட்டால் 'கைதி' என்று அர்த்தம். ''பந்தீக்ருதம் இவ''என்றால் 'கைதியாக்கப்பட்டது போல'.

அம்பாளுடைய ஸிந்தூர ஸீமந்த ரேகையைக் கேச பாரத்தின் மத்தியில் பார்க்கும்போது, இருள் என்ற விரோதிக் கூட்டத்தால் கைதியாக்கப்பட்ட பால ஸூர்ய ரச்மி போலத் தோன்றுகிறது.

''ஸரி, லோகமே கேள்விப்படாதபடி இப்படி இருட்டிடம் தோற்ற சோப்ளாங்கி ஸூரியனாக இருக்கிற வகிட்டுக்கும் ஸாக்ஷாத் பரதேவதையின் பரம க்ஷேமகரமான ஸௌந்தர்ய லஹரிக்கும் என்ன ஸம்பந்தம்?''

தமஸ் என்றே சொல்லப்படும் கறுப்பாலேயே அம்பாள் அஞ்ஞான தமஸைப் போக்குவதாக முன் ச்லோகத்தில் பார்த்தோமல்லவா? அப்படியே, இங்கே ஒரு விதத்தில் தோற்றுப்போன ஸீமந்தத்துக்கு இன்னொரு தினுஸில் உயர்வை உண்டாக்கி அதனாலேயே க்ஷேமங்களை அளிக்கிறாள். லக்ஷ்மீ ஸ்தானமான அது வாஸ்தவத்தில் க்ஷேமங்களுக்கு ஆச்ரயந்தான். அதற்குத் தோல்வி தந்தது பாவனைதான். ''பந்தீக்ருதம் இவ'': 'கைதியானது போல' என்றுதான் சொன்னாரே தவிர நிச்சயமாகக் கைதியாகி விட்டது என்று சொல்லவில்லை.

இப்போது அதன் உயர் நிலையை - இந்த ச்லோகத்தின் உயிர் நிலையைப் - பார்ப்போம். இதை ஆசார்யாள் முதலில் சொல்லிவிட்டு அப்புறம்தான் தோல்வியைப் பற்றிச் சொல்கிறார். நான்தான் தோற்றதோடு முடிக்க வேண்டாம் என்று மாற்றி ஆரம்பித்தேன். முதல் இரண்டு வரிகளில்,

**''தநோது க்ஷேமம் ந: தவ வதந-ஸௌந்தர்ய லஹரீ**
**பரீவாஹ ஸ்ரோத:ஸரணி: இவ ஸீமந்த ஸரணி:'' ।**

என்று இருக்கிறது.

ஸாதாரணமாக மஹாகவிகள் வார்த்தைகளை ரொம்பவும் செட்டும் கட்டுமாகப் போட்டே அர்த்தத்தை த்வனியாக, suggestive -ஆக விட்டுவிடுவார்கள். ஒரே அர்த்தமுள்ள நாலைந்து வார்த்தைகளை, synonym -களைப் போட மாட்டார்கள். ஆனாலும் எங்கேயாவது ரொம்ப மஹத்தாக ஒரு விஷயம் வந்துவிட்டால் அப்போது அந்த மஹிமையை அழுத்திக் காட்டுவதற்காக ஒன்றுக்கு மேல் வார்த்தை போட்டு விடுவார்கள்.

இங்கே 'லஹரீ', 'பரீவாஹம்', 'ஸ்ரோதஸ்', 'ஸரணி' என்று வருகிற நாலு வார்த்தைகளும் கிட்டத்தட்ட ஒரே அர்த்தமுள்ளவை. எல்லாம் பிரவாஹத்தைக் குறிப்பவைதான். அம்பாளின் அழகு எப்படிப்பட்டட மஹாப் பிரவாஹமாக இருக்கிறது என்று தெரிவதற்காக இப்படி ஒன்றில்லை, இரண்டில்லை, நாலு வார்த்தைகளைச் சேர்ந்தாற்போல் போட்டிருக்கிறார்.

*'கிட்டத்தட்ட ஒரே அர்த்தம்' என்று நான் சொன்னதில்* point *இருக்கிறது. முழுக்க ஒரே அர்த்தமில்லை. அப்படிப் போட என்ன இருந்தாலும் ஒரு மஹாகவிக்கு மனஸ் வராது. பொது ஜனங்கள் ஒரே அர்த்தமாக எடுத்துக் கொள்ளும்படி இருந்தாலும் வித்வத் ஜனங்கள் அந்த வார்த்தைகளுக்குள்ளே 'மைன்யூட்' - ஆக வித்யாஸமிருப்பதைப் பார்த்து இந்த* shades of difference *-ஐ (வேறுபாட்டுச் சாயல்களை) ரஸிக்கும்படியாகவே வாக்-கும்பனம் (சொற் தொகுப்பு) செய்வார்.*

*இங்கே அப்படித்தான் நாலு வார்த்தைக்கும் அர்த்தத்தில் உள்ளூர வித்யாஸமுண்டு. 'லஹரீ' என்பது மேலே எழுந்து பொங்கும் நீரோட்டம். 'பரீவாஹம்' என்பதுதான் ப்ரவாஹம் - இது இருக்கிற இடத்திலேயே மேலே பொங்கித் துள்ளாமல், அந்தண்டை அந்தண்டை விஸ்தாரமாகப் பரவிக் கொண்டே போவது. 'ஸ்ரோதஸ்' என்றால் ஆர்ப்பாட்டமாக ஓடவேண்டுமென்பதில்லை; ஓடை மாதிரி ஒடுங்கி ஓடினால்கூட அது ஸ்ரோதஸ்தான். 'ஸரணி' என்பது முன்னேயே 'ஸீமந்த ஸரணி' என்பதில் சொன்னதுபோல நேர்கோடாக ஓடும் நீரோட்டம். இயற்கையாக எந்த ஆறும் நேர்கோடாக ஓடாது. அதனால் இது மநுஷ்யர்களாக ஒரு ஆற்றை வெட்டி உண்டாக்கிச் செய்கிற வாய்க்கால் என்ற ஆகும். ஒரு இடத்தில் பொங்கி எழும் லஹரி', அப்புறம் பல இடங்களில் 'பரீவாஹம்' என்ற பிரவாஹமாகப் பரவ ஆரம்பித்து, 'ஸ்ரோதஸ்' எனப்படும் ஆறாக ஒரு ஒழுங்கு நிலையில் கரைக்குள் ஓடுகிற பிறகு தான் அதை மேலும் ஒழுங்குபடுத்தி 'ஸரணியாக வாய்க்கால் ஆக்குவது.*

*இப்படித்தான் அம்பாளின் ஸௌந்தர்யம் அவளுடைய வதனத்தில் முதலில் லஹரியாகப் பொங்கி அப்புறம் பரீவாஹமாகப் பரவுகிறது. நெற்றி உச்சியைத் தொடுகிறபோது அது ஸ்ரோதஸ்ஸாக ஆறுபோல் ஆகிறது. ஆனாலும் இந்த ஆற்றுக்குக் கேசபாரம் கரையாக ஆகிற போது அந்தக் கரைக்கு இது அடங்க மாட்டேன் என்கிறது. கரைகடந்த அழகாகத்தான் அம்பாள் அழகு இருக்க முடியும். அதற்குக் கரை கட்ட முடிந்துவிட்டால் பெருமையே இல்லை! 'வக்த்ர லக்ஷ்மீ பரீவாஹம்' - 'முக சோபையின் பிரவாஹம்' என்றே ஸஹஸ்ரநாமம் சொல்கிறது. ஆகையால் அது முகவட்டத்துக்குள் அடங்கி ஓடுகிற மாதிரி நெற்றி ஓரத்தில் கொஞ்சம் சாந்தமான ஆறு மாதிரி ஆனாலும், கேசக் கரைக்குள் அடங்காமல் மறுபடிப் பிரவாஹமாகவே வேகத்தோடு பெருக ஆரம்பிக்கிறது. சட்டென்று இந்த முகலாவண்யப் பிரவாஹம் ஒரு இடத்தில் கரையையே உடைத்துக்கொண்டு அந்த வேகத்திலே கீழிருந்து மேலாக எதிர்த்துக்கொண்டு போய் அப்புறம் இரண்டு பக்கமும் இருட்டு நெருக்கியதில் குறுகிக் குறுகி* straight line *-ஆக ஒரு வாய்க்கால் ரூபத்தை எடுத்துக் கொள்கிறது. அந்த வாய்க்கால் (ஸரணி)தான் அம்பாளுடைய வகிட்டுக்கோடு (ஸீமந்த ஸரணி).காருண்யமே உருவான லாவண்யத்தின் ஸாக்ஷாத் ரேகா வடிவந்தான் அம்பாளுடைய ஸீமந்தம். அதற்கு மேலே அதற்கு அந்தண்டை எந்த அவயவமும் இல்லை! அதனால்தான் அம்பாளுடைய அழகிலிருந்து க்ஷேமத்தை ஸகலருக்கும் வேண்டுகிறபோது, அதை 'வதன ஸௌந்தர்ய லஹரீ' என்று முகத்தில் சிறப்பாக அடக்கினாலும், அதிலும் மேலும் குறிப்பாக, முகலாவண்ய வெள்ளம் எதிர்த்துக் கொண்டு ஓடியதால் உண்டான வாய்க்காலாகிற இந்த வகிட்டுக்கு முக்யத்வத்தைக் கொடுத்து விட்டார்!*

*கிருஷ்ண பரமாத்மாவுக்காக யமுனை வெள்ளத்தைக் கிழித்துக்கொண்டு நேராக ஒரு வழி ஏற்பட்டது. அம்பாளுடைய முக லாவண்ய வெள்ளமே யமுனை மாதிரிக் கறுப்பு வெள்ளமாக இருக்கிற அவளுடைய கேசபாரத்தில் ஒரு வழியைக் கிழித்துக் கொண்டிருக்கிறது!*

*''தநோது க்ஷேமம் ந:'' என்று மனஸார நினைத்து இந்த ச்லோகத்தைப் பாராயணம், தியானம் பண்ணிக் கொண்டிருந்தோமானால் அம்பாளுடைய அழகு காமாதி அறுபகைக் கூட்டத்தில் (''த்விஷாம் ப்ருந்தை:'') நாம் சிறை வைக்கப்படாமல் (''பந்தீ க்ருதம்'' ஆகாமல்) ஆத்மக்ஷேமத்தை அடைந்து லோக க்ஷேமத்தை விருத்தி பண்ணுவதற்கான சக்தியை நமக்கு அநுக்ரஹம் பண்ணும்*

**''தநோது க்ஷேமம் நஸ்-தவ-ஸௌந்தர்ய லஹரீ**

**பரீவாஹ-ஸ்ரோத: ஸரணிரிவ ஸீமந்த ஸரணி: ।**

**வஹந்தீ ஸிந்தூரம் ப்ரபல-கபரீ-பார-திமிர-**

**த்விஷாம் ப்ருந்தைர்-பந்தீக்ருதம் இவ நவீநார்க கிரணம்'' ॥ 45**

## ''இடம் மாறிய இரு பாதி சந்திரர்கள்''

*அடுத்த ச்லோகத்திலும் (ச்லோ-45) தலைமயிரைப் பற்றிய வர்ணனை நீடித்தாலும், இங்கே அம்பாளின் முக வர்ணனையே முக்யம். அதன் ஸம்பந்தமாகவே அலகம் என்ற முன்னுச்சி மயிரைப் பற்றி வருகிறது.*

*முகத்தைப் பொதுப்படையாகத் தாமரைக்கு ஒப்பிடுவது வழக்கம். முக கமலம், வதநாரவிந்தம் என்று புஸ்தகங்களில் நிறைய வருகிறது. ஆசார்யாள் இப்படிப் பொதுப் படையாகச் சொல்லாமல்* item, item *-ஆகத் தாமரைக்கும் ஜகன்மாதாவின் முகத்துக்கும் பல ஒப்புவமைகளைக் காட்டியிருக்கிறார்.*

*கொஞ்சங் கொஞ்சமாக இதழ் விரிவது தாமரைக்கு அழகு. அம்பாளுடைய மந்த ஸ்மிதம் (புன்னகை) இப்படிக் கொஞ்சங் கொஞ்சமாக மலர்ந்த அழகைக் காட்டுகிறது. அப்போது உள்ளே தெரிகிற பல்வரிசை தாமரைக்குள் தெரிகிற கிஞ்ஜல்கம் (கேஸரம்) போல இருக்கிறது. தாமரை போலவே அம்பாளின் வதனத்துக்கும் ரம்யமான மணம் இருக்கிறது. தாமரைக்குள்ளே தேனைக் குடித்துக்கொண்டு வண்டு புதைந்து கிடக்கும்; மேலும் பல வண்டுகள் அதைச் சுற்றிலும் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும். வண்டு நாண் கொண்ட மன்மதனை எவன் கண்ணால் எரித்தானோ அந்தப் பரமேச்வரனின் கண் விழிகளே கருவண்டுகளாகி அம்பாளின் முக கமலத்தில் உள்ள மாதுர்யம் என்னும் மதுவைக் குடிக்கின்றன. முகத்தைச் சுற்றிப் புரளும் முன்னுச்சி மயிரைப் பார்த்தால் ஒரு குட்டி வண்டுப் படையே தாமரையைச் சூழ்ந்திருக்கிற மாதிரி இருக்கிறது - என்று இப்படிப் பல* parallel *கள் (இணைகள்) காட்டுகிறார்.*

*முககமலம் என்பது போலவே முகசந்திரன் என்பதும் ஸஹஜமான வர்ணனை. இப்படி ரொம்பவம் ஸஹஜமான ஒன்றிலேயே ஒரு வேடிக்கை பண்ணிப் புதிசாக ஒன்றைக் காட்டினால் அதுதான் ஸ்வாரஸ்யம். அப்படித்தான் அடுத்த ச்லோகத்தை (ச்லோ-46)ப் பண்ணியிருக்கிறார்.*

**''லலாடம் லாவண்ய-த்யுதி விமலம் ஆபாதி தவ யத்**
**த்விதீயம் தந்-மந்யே மகுட-கடிதம் சந்த்ர-சகலம் ।**
**விபர்யாஸ-ந்யாஸாத் உபயம் அபி ஸம்பூய ச மித:**
**ஸுதா-லேப-ஸ்யூதி: பரிணமதி ராகா- ஹிமகர:'' ।।46**

*முகம் பூராவையும் பூர்ணசந்திரனாக உவமிப்பது அநேக கவிகள் கையாண்ட விஷயம். ஆசார்யளே இப்படியும் நிறையச் சொல்லியிருக்கிறார். மூகர், 'ராகா சந்த்ர ஸமாந காந்தி வதநா' என்கிறுர். ''ராகா'' என்றால் பூர்ணிமை. ''ராகா-சசி-வதநே'' என்று இதையே தீக்ஷிதரின் 'கஞ்ஜதளாயதாக்ஷி' பாட்டிலும் சொல்லியிருக்கிறது. நாம் தற்போது எடுத்துக்கொண்டுள்ள ச்லோகங்கூட 'ராகா-ஹிமகர:' என்று பூர்ணசந்திரனைச் சொல்லித்தான் முடிந்திருக்கிறது. ஆனால் இது அம்பாளின் முழுசான முக மண்டலத்துக்கு உவமையாக வரவில்லை. அப்படி வந்திருந்தால் அதில் வேடிக்கை விநோதம் ஒன்றும் இல்லை.*

*ஆசார்யாள் பின்னே என்ன சொல்கிறார்?*

*ஏற்கனவே நான் சலோகங்களைப் பிரித்து அர்த்தம் சொன்னதிலிருந்து உங்களுக்காகவே, 'மகுட-கடிதம் சந்த்ர சகலம்' என்று வந்திருப்பது அம்பாளின் மகுடத்தில் வைத்து இழைத்த பிறைச் சந்திரனைத்தான் சொல்கிறது என்று புரிந்திருக்கலாம். 'லலாடம்' என்றால் நெற்றி என்றும் தெரிந்திருக்கும். ''லாவண்யம்'', ''விமலம்'' - எல்லோருக்கும் புரிகிறதுதான். ''த்யுதி'' - பிரகாசம். ''ஆபாதி'' - ''பிரகாசிப்பது'' என்ற வினைச்சொல், ''த்வத்'' - உன். ''யத்'' - எது. ''தத்'' அது. (''தந் - மன்யே'' என்பது ''தத் - மன்யே'' என்பதே.) ''மன்யே'' - 'நினைக்கிறேன்' என்பதும் முன்னேயே (43-ம் ச்லோகத்தில்) வந்திருக்கிறது. 'அத்வைதம்', 'அத்விதீயம்' என்றால் 'இரண்டாவதாக ஒன்று இல்லாதது' என்று நான் பல தடவை சொல்லியிருக்கிறேன். ''த்விதீயம்'' என்பதற்கு அது* opposite *என்பதால், ச்லோகத்தில் வரும் 'த்விதீயம்' என்ற வார்த்தை 'இரண்டாவது' என்று அர்த்தம் கொடுக்கும் என்று ஊகித்து விடலாம். இப்படிச் சேர்த்துப் பார்த்தால் முதல் இரண்டு வரிக்கு என்ன அர்த்தம்?*

*''அழகான ஒளி-பொருந்தி மாசில்லாமல் எந்த உன் நெற்றி பிரகாசிக்கிறதோ அந்த நெற்றியானது உன் கிரீடத்தில் இழைத்த சந்திர கலையின் இரண்டாவது ரூபம் என்று நினைக்கிறேன்'' என்று அர்த்தமாகும்.*

*நன்றாகப் புரியும்படிச் சொன்னால்; அம்பாளுடைய தலையில் அர்த்த சந்திரன் இருக்கிறது...*

*அம்பாள், ஈச்வரன் இவர்கள் வைத்திருப்பது மூன்றாம் பிறைதான்; அஷ்டமீ சந்திரனில்லை. அஷ்டமியில்தான் அர்த்த சந்திரன். ஆனாலும் விக்ரஹங்களில், சித்ரங்களில் பார்த்தீர்களானால் தெரியும் - மூன்றாம் பிறையின் இரண்டு ஓரங்களிலும் முடிகிற இடம் பூர்ண சந்திர வட்டத்துடைய* diameter *-ன் (விட்டத்தின்) இரு துருவப்புள்ளிகளாக இருக்கும். அஷ்டமி சந்திரனானால் இந்தப் புள்ளிகளைச் சேர்க்கும் விட்டமும் தெரியும்; இந்த விட்டத்துக்குள் முழுதும் அந்தப் பேர் பாதி சந்திரனை*

*அடைந்திருக்கும். மூன்றாம் பிறையில் விட்டம் தெரியாது. அடியிலே மெல்லிசு பரங்கிப் பத்தை மாதிரிக் கொஞ்ச பாகம் போக, அஷ்டமியில் தெரிந்த சந்திரப் பகுதியில் மீதியைத் தோண்டி எடுத்திருக்கும். ஆகாசத்தில் ஸாக்ஷாத்தாக மூன்றாம் பிறையயைப் பார்த்தால்கூட, இந்த விட்டத்தின் துருவப் புள்ளிகள் வரை வெளிக்கோடு போவது தெரியும். (இன்னும் கூர்ந்து பார்த்தால்தான் ரொம்ப லேசாகப் பூர்ண சந்திரனின் அளவுக்கே வெளிக்கோடு போவதும். அதில் உள்ளே மூன்று கலைகளுக்கான பாகம் தவிர பாக்கியைத் தோண்டி எடுத்திருப்பது போலவும் தெரியும்). ஆக அம்பாள் தலைப்பிறை முனைகள் அர்த்த சந்திராகாரம் போலவே முடிந்திருக்கின்றன. ''பாதி மதி நதி போது மணி சடை'' என்று திருப்புகழில் வருகிறது. இன்னம் பல தேவாரப் பாடல்களிலும் ''பாதிமதியனே'' என்று வருகிறது.*

*அம்பாளுடைய அரை வட்டமான நெற்றியைப் பார்த்தால் அதுவும் ஒரு பாதி சந்திரன் போலவே இருக்கிறது. நடுவே தோண்டியெடுத்திருக்கவில்லை. அஸல் அர்த்த சந்திரனாகவே தோன்கிறது. ஸஹஸ்ரநாம வர்ணனையும் அதைத்தான் ''அஷ்டமீ சந்த்ர விப்ராஜதலிக ஸ்தல சோபிதா'' என்று சொல்கிறது.*

*இப்படி மேலே பாதி சந்திரன் பிறை வடிவில், அதன் கீழே பாக்கி பாதி சந்திரன் லலாட வடிவில்* **ஸுதா-லேப-ஸ்யூதி: பரிணமதி ராகா ஹிமகர:॥** *இனிமேலேதான் வேடிக்கை விநோதம் வருகிறது.*

**விபர்யாஸ-ந்யாஸாத் உபயம் அபி ஸம்பூய ச மித: ।**
**ஸுதாலேபஸ்யூதி: பரிணமதி ராகா ஹிமகர: ॥**

*''உபயம் அபி'' - இந்த இரண்டும்; கிரீடத்திலுள்ள பாதி சந்திரன், நெற்றி ரூபத்திலுள்ள பாதி சந்திரன் ஆகிய இரண்டும். ''உபயம்'' - இரண்டு. பெருமாள் ஸ்ரீதேவி - பூதேவிகளோடு இருப்பதை 'உபய' நாச்சியார்களோடு இருப்பதாக பட்டர்கள் சொல்லிக் கேட்டிருக்கலாம்... மேல் பாதி சந்திரன், கீழ் பாதி சந்திரன் இரண்டும், ''மித:'' -"mutual -ஆக, 'ஒன்றோடொன்று'; ''விபர்யாஸ - ந்யாஸாத்'' - இதை ''விபர்யா - ஸந்யா ஸாத்'' என்று விபரீதமாகப் பிரிந்து ஏதோ ஸந்நியாஸி ஸம்பந்தம் என்று நினைத்து விடக்கூடாது. ''விபர்யாஸ'' என்றால்* reverse order. *மேல் கீழாக மாற்றுவது. ''ந்யாஸம்'' சேர்ப்பது.* join *பண்ணுவது என்று இங்கே பொருள் கொடுக்கும்.*

*அதாவது: பாதிப் பாதியாக மேலே உள்ள பிறைச் சந்திரனும், கீழே உள்ள லலாட சந்திரனும் இப்போது எப்படி இருக்கின்றன? மேலே மகுடத்தில் இருப்பது பூர்ண சந்திரனின் கீழ் பாதியாகவும், அதற்குக் கீழே லலாடமாக உள்ள பாதி சந்திரன் பூரண சந்திரனின் மேல் பாதி போன்ற வடிவமைப்பு உள்ளதாகவும் இருக்கின்றன. அதாவது பூர்ண சந்திரனின் கீழேயுள்ள பாதி இங்கே மேலேயும் மேலேயுள்ள பாதி அதற்குக் கீழேயும் இருக்கின்றன. இப்படி இருப்பதைத் தலைகீழாக மாற்றி,* reverse order *-ல்* join *பண்ணி ''ஸம்பூய ச'' - நன்றாக ஒட்டுப் போட்டுவிட்டால்!*

*''அதெப்படி ஒட்டுப் போடுவது? ஒன்றின்மேல் ஒன்றை அப்படியே பொருத்தி வேண்டுமானால் பார்க்கலாமே தவிர, பிரிந்தே போகாதபடி எப்படி ஒட்டுவது? அப்படிப்பட்ட கோந்து எங்கே இருக்கிறது?''*

*இருக்கிறது, இருக்கிறது. வேறே எங்கேயோ தேடிக்கொண்டு போக வேண்டாம். சந்திரனுக்குள்ளேயே இருக்கிறது. சந்திரனில் அமிருதம் இருக்கோல்லியோ? அதுவே நல்ல* paste *தான்: ''ஸுதா-லேப-ஸ்யூதி:'' 'ஸுதா'- அமிருதம்; 'லேப'-* paste, *கோந்து; 'ஸ்யூதி:' - தையல் போடுவது. 'ஸ்யூதி' - இங்கிலீஷ்* "sew' *அதிலிருந்துதான். ஒட்டினால்கூடப் பிய்ந்து போய் விடலாம். இந்த அமிருத கோந்து ஸாதாரணமாக ஒட்டுகிறது போல இல்லை. நன்றாகக் கெட்டித் தையல் போடுகிறது போல இரண்டையும் பிரிக்கவே முடியாமல் சேர்த்துக் கொடுத்து விடும்.*

*இப்படி, அம்பாளின் சிரஸிலுள்ள பாதி மதியையும் நெற்றியான பாதி மதியையும், அது கீழ் இது மேல் என்று மாற்றியமைத்து, சந்திரனிலிருந்தே கசியும் அமிருத கோந்தைப் போட்டு ஒன்றோடொன்று ஒட்டித் தைத்தது போலப் பண்ணிவிட்டால், ராகா ஹிமகர: பரிணமதி - (அவை இரண்டும் சேர்ந்து) பூர்ணிமை சந்திரனாகவே பரிணமித்து விடும்; முழு சந்திர ரூபம் பெற்றுவிடும்.*

*அம்பாளுடைய முழு முகத்தை முழு மதியாகச் சொல்லாமல், நெற்றியைப் பாதி மதியென்று சொல்லி, அவள் சிரஸிலுள்ள பாதி மதியையும் நினைத்துக்கொண்டு அப்புறம் இரண்டையும்* reverse order *பண்ணச் சொல்லி, அமிருதத்தைப் போட்டு ஒட்டுகிற வரையில் விசித்ரமாக ஏகப்பட்ட க்ருத்ரிமக் கல்பனை செய்து முடிவில் முழு மதியாக ''ராகா ஹிமகர:'' என்று ஆக்கிப் பூர்த்தி பண்ணுகிறார்.*

*கடைசியில் பூர்ண சந்திரனைச் சொல்லும்போது, முதலில் அதிலுள்ள அமிருதத்தைச் ''ஸுதா'' என்றவர், அது பெருக்கும் பனியை நினைத்துக்கொண்டு ''ஹிமகர:'' என்று போட்டிருக்கிறார். அதாவது 'ராகா' என்ற பூர்ணிமையைப் பனியோடு ஸம்பந்தப்படுத்தியிருக்கிறார். ஒரே பனியாகக் கொட்டிக் கொண்டிருக்கும் மார்கழி மாதத்துப் பூர்ணிமைக்குத் தனி விசேஷம் உண்டு. அன்றுதான் திருவாதிரை வரும். ஹேமந்த ரிதுவின் குளிர்ச்சியோடு ஹிமகரனுடைய பூர்ண கலையின் குளிர்ச்சியும் சேருகிறபோது அகிலாண்ட ஸ்வரூபமாக இருக்கிற நடராஜ மூர்த்திக்கு விடிய விடிய ராவெல்லாம் குளிரக் குளிரச் சந்தனாதி அபிஷேகங்களைப் பண்ணுவார்கள். 'ஆதிரை' என்பது 'ஆர்த்ரா' என்பதன் திரிபு. 'ஆர்த்ரா' என்றாலே நன்றாக நனைந்திருப்பது என்றுதான் அர்த்தம். அதைத்தான் 'ஆருத்ரா' என்கிறார்கள்!.... இப்படி, அபிஷேகத்தில் ஒரேடியாக நனைந்திருக்கிற நடராஜ மூர்த்தியின் பக்கத்தில் பனிமலைக்கே பெண்ணாகவும் தயையால் ஆர்த்ரையாகவும் (அருளில் நனைந்தவளாயும்) இருக்கிற அம்பாள் இருக்கிறாள் என்று ச்லோகம் இருக்கிறது: ''வாமே பாகே தயா (ஆ)ர்த்ரா ஹிமகிரி துஹிதா''. ஸௌந்தர்ய லஹரி' ஆரம்பத்திலேயே (ச்லோ-42) ''ஹிமகிரி ஸுதே'' என்று கூப்பிட்ட ஆசார்யாள் இங்கே பூர்ணிமையில் ஹிமகரனைச் சேர்த்துப் பேசுவதைப் பார்க்கும்போது திருவாதிரை நடராஜ அபிஷேக நினைவு மனஸில் கழன்று கொண்டே இருந்திருக்குமோ என்று தோன்றுகிறது.*

## புருவ வில், விழி நாண்: சிக்கல் நிறைந்த ச்லோகம்

*அடுத்த (47-வது) ச்லோகம் இதைவிட* complicated *(சிக்கல் நிறைந்தது) அதிலிருக்கிற திரிசமன் எல்லாம் உங்களுக்குப் புரிய வைக்க முடியுமா என்று பார்க்கிறேன். இதுவே அம்பாளுக்குப் பண்ணுகிற பூஜை என்று வைத்துக் கொள்கிறேன். சுற்றிச் சுற்றி அவளை நினைக்கும்படியாகப் பண்ணுகிறது அல்லவா? ஏதோ 'ஈஸி'யான ஸ்தோத்ரமாகப் பண்ணிவிட்டால் அதைச் சட்டென்று புரிந்துகொண்டு சொல்லிவிட்டு வேறே காரியத்துக்குப் போய்விடுவோம். அப்படிப் போகவிடாமல் அம்பாளிடமே நேராக மனஸை நிறுத்துவதென்றால் முடியாது. அதனால் கவிதா ரஸம், சாதுர்யமான அபிப்பிராயம், அதிலே கொஞ்சம் திரிசமன். அதனாலே அதைப்பற்றியே தீர்க்கமாக யோஜிக்கப்பண்ணுகிறது - என்பதற்கெல்லாம் இடம் கொடுத்துக் கொஞ்சம் கஷ்டமான ச்லோகங்களாகவும் சிலது பண்ணி விட்டால் இதிலே நேரத்தை நிறையச் செலவழிக்கிறபோது, நேராக அத்தனை நேரமும் அம்பாளை நினைக்கப் பண்ணாவிட்டாலும், சுற்றிச் சுற்றி, தொட்டுத் தொட்டு ஜாஸ்தி நாழி அவள் நினைப்பிலேயே இருக்கும்படியாகச் செய்யலாம் என்கிற உத்தேசத்திலேயே இப்படிப்பட்ட ச்லோகங்களை ஆசார்யாள் அநுக்ரஹித்திருக்கிறார் போலிருக்கிறது! சிக்கல் இருக்க இருக்க அதை அவிழ்த்துக் கொள்வதில் அம்பாளை அதிகம் தியானிக்க முடிகிறது; ச்லோகத்திலிருக்கிற சிக்கலே வாழ்க்கைச் சிக்கலைத் தீர்த்துக் கொள்ள உதவி செய்கிறது: ச்லோகத்தை சொல்கிறேன்.*

**ப்ருவௌ புக்நே கிஞ்சித் புவந பய-பங்க வ்யஸநிநி**
**த்வதீயே நேத்ராப்யாம் மதுகர-ருசிப்யாம் த்ருத-குணம்।**
**தநுர்-மந்யே ஸவ்யேதர-கர-க்ருஹீதம் ரதிபதே:**
**ப்ரகோஷ்டே முஷ்டௌ ச ஸ்தகயதி நிகூடாந்தரம் உமே ॥47**

*''ப்ருவௌ'' - இரு புருவங்கள். தமிழ் புருவம். இங்கிலீஷ்* brow *இரண்டும் ஸம்ஸ்க்ருத 'ப்ரூ'விலிருந்து வந்ததுதான். அதற்கு இரட்டைப் படை ''ப்ருவௌ''. அம்பாளுடைய இரண்டு புருவங்கள் எபபடி உள்ளன? 'கிஞ்சித் புக்நே' கொஞ்சம் நெரிந்திருக்கின்றன.*

*கோபத்திலே நெரிப்பதுண்டே அப்படியா? இல்லை. ரொம்பவும் யோஜனையாக, சிந்தனையாக இருந்தால் நெரிகிறதே, அப்படித்தான் அம்பாளின் புருவம் நெரிந்திருக்கிறது. கோபத்திலே நெரிந்தால், புருவம் மேலே ஏறிக்கொண்டு, இயற்கையாக அதற்குள்ள வளைவுகூட போய்ப் பிசுபிசு என்ற நேர்க்கோடு மாதிரி ஆகிவிடும். ஆனால் இப்போது அம்பாளின் புருவமோ இயற்கையாயிருப்பதை விடவும் நல்ல வளைசலாகி, ''வில்லா வளைச்சு'' என்பார்களே, அப்படி இருக்கிறது. பய நிவிருத்திக்காக அபய பாவம் காட்டிக் கொண்டு, அதே ஸமயம் 'குழந்தைகள் பயப்படுகிறதுகளே!' என்று விஸனமும் படும்போதுதான் இப்படி வளையும்.*

*''அம்பாளைபப் பார்க்கிறேன். அவள் புருவம் நெரிந்து காண்கிறது. ரொம்பவும்*

*யோஜனையா இருக்கிறாள் என்று தோன்றுகிறது. அவளுடைய பொதுவான முகபாவத்தைப் பார்த்தால் இது உறுதிப்படுகிறது. முக பாவம் அவளை எப்படித் தெரிவிக்கிறது? ''வ்யஸநிநி''யாகத் தெரிவிக்கிறது.''*

*''வ்யஸனம் (விசனம்) என்றால் வருத்தம், விசாரம் என்றல்லவா அர்த்தம்! அம்பாள் எப்படி விசனப்படும் 'வ்யஸநிநி'யாக இருக்கிறாள்? 'ஆனந்த லஹரீ', 'சிதானந்த லஹரீ' என்றெல்லாம் அவளைச் சொல்லிவிட்டு இப்போது, வருத்தப்படுகிறாள்; அதனால் புருவத்தை நெரித்துக் கொண்டு ஒரே யோஜனையாக இருக்கிறாள்' என்றால் என்ன ஸ்வாமீ அர்த்தம்?''*

*ஆமாம். அவள் உள்ளூர ஆனந்த லஹரிதான். ஆனால் அவள் லோகங்களுக்கெல்லாம் மாதாவோ இல்லியோ? உலகத்து ஜனங்களெல்லாம் ஸம்ஸார பயத்தில் சிக்கிக் கொண்டு தவிக்கிறதுகளே! அதிலிருந்து மீள இவள் பல வழிகளைக் காட்டியும் கவனிக்காமல் கஷ்டப்படுகிறதுகளே! எதற்காவது பயப்பட்டபடி இருக்கிறதுகளே! புவனங்களின் இந்த பயத்தைப் போக்க வேண்டும் என்பதில்தான் அவள் கவலைப்பட்டுக்கொண்டு வ்யஸநிநியாக இருக்கிறாள் - ''புவந பய பங்க வ்யஸநிநி.'' ''பய-பங்க'' - பயத்தை உடைத்து விடுவாள். 'தநுர் பங்கம்' என்றால் தநுஸை உடைப்பது தானே? அப்படி பயத்தை உடைத்துவிடுவாள். அவ்வப்போது யோஜித்துப் புதுப்புது மார்க்கங்கள், ஆசார்யர்கள் என்று காட்டி ஜனங்களுடைய பயத்தைப் போக்கிவிடுவாள். அதற்காகவே வளைந்த தநுஸ் மாதிரி புருவத்தை நெரித்துக் கொண்டிருக்கிறாள்.*

*''க்ஷண சலிதயோ: ப்ரூ லதிகயோ:'' என்று முன்னே (ச்லோ-24) சொன்னபடி இந்தப் புருவத்தின் க்ஷணகால நெரிப்பாலேயே பஞ்ச கிருத்ய மூர்த்திகளை பிரபஞ்ச ஸ்ருஷ்டியாதிகளில் ஏவிய ஸர்வ சக்தியாகவும், ஸர்வானந்த மயியுமாக இருக்கப்பட்ட பரதேவதையே மாத்ரு பாவத்தில் இருக்கும்போது புல், பூண்டு, புழு, பூச்சி, மநுஷ்யாள், தேவாள் எல்லாம் அவள் குழுந்தைகள்தானே, அந்தக் குழந்தைகள் விஷயத்தில், ஸாதாரணமாக ஒரு அம்மாக்காரி தன் பசங்களைப்பற்றி எப்படிக் கவலைப்படுவாளோ, அப்படி வரக்கூடாதே! கஷ்டப்படுகிறதுகளே, பயப்படுகிறதுகளே! என்று பரம கருணையினால் வ்யஸனப்பட்டுக் கொண்டு புருவத்தை நெரிதது யோஜித்து கொண்டிருக்கிறாள்:*

**ப்ருவெள புக்நே கிஞ்சித் புவந பய பங்க வ்யஸநிநி**

*மனஸ் புருவத்திலே தெரியும். அதை நுட்பமாகக் கவனித்து ஆசார்யாள் இதைப் பண்ணியிருக்கிறார். ''நம் குழந்தைகளுக்கு பயம் வரப்படாதே! ஆனால் வந்து விட்டதே'' என்று யோஜனை பண்ணுகிறாள். விசாரத்திலேதான் புருவத்தை வளைத்துக்கொண்டாள் என்று* explicit *ஆக (வெளிப்படையாக) சொல்லவில்லை. ஒரு வேளை ''யாரங்கே, என் குழந்தைகளுக்குக் கெடுதல் பண்ண வருகிறது?'' என்றுதான் புருவத்தை நெரிக்கிறாளோ? இந்த மிரட்டல் பாவம், அதட்டல் வார்த்தை வரும்போதும் புருவம் நெரியும். அல்லது ஒருத்தருக்கு ஒரு கவலையை நாம் போக்கி உத்ஸாஹத்தை*

*உண்டுபண்ணும் போதுகூட இன்னொரு விதமாகப் புருவ வளைசல் ஏற்படும். ''புவந பய பங்க வ்யஸனினி''யாக அவள் ஜனங்களின் பயத்தை நிவ்ருத்தி செய்துவிட்டதிலும் இப்படிக் கொஞ்சம் புருவம் வளைந்திருக்கலாம்.*

*அபய ரக்ஷையைக் கடமையாகக் கொண்ட அம்பிகை பயம் வந்த அப்புறம் போக்குவாளா, முன் ஜாக்ரதையாக* preventive *-ஆகவே தடுப்பாளா? முன் ஜாக்கிரதையாகத் தடுத்தாலே தாய்க்கு விசேஷம் என்று தோன்றுகிறது. ஆனால் அப்போது 'புவந-பய-பங்க' என்பது பொருந்தாதே! இல்லை, இல்லை. முன் ஜாக்ரதையாக பயமேவராமல் தடுத்துவிட்டால் விசேஷமில்லை. அப்போது அம்பாளைப் பற்றி நினைத்து நினைத்து அவளுடைய காருண்ய ரக்ஷணையில் நாம் உருகப் பிரமேயமே வராதே! பயம் என்று ஒன்று ஏற்பட்டு, அப்புறம் அதை இவள் பங்கம் பண்ணும்போது, பயம் தெளிந்து. அவளைப் போய்ப் பிடித்துக் கொள்வதில்தானே ஆனந்தம் இருக்கிறது!*

*இப்படி இந்த ச்லோகங்களிலே சொல்லிலும் பொருளிலும் அழகு அழகு என்று நான் சொல்வதெல்லாம் அழகே இல்லை; இன்னமும் சொல்லத் தெரியாமல் அதில் என்னென்னவோ இருக்கின்றன. அதிலேதான் வாஸ்தவமான அழகு இருக்கிறது! சொல்ல முடியாததாக எனக்குத் தோன்றுகிறதற்கு மேலேயும் அதைவிட அழகாக இருக்கிற ஸாரம் இன்னம் ரஸிகர்களாக பக்தர்களாக இருக்கப்பட்டவர்களுக்குத் தெரியலாம்...*

*விசனத்தில், கோபத்தில் புருவம் நெரிந்தால் அதைப் பார்த்து ரஸித்துக்கொண்டு நிற்க முடியாது. ஆசார்யாளோ இங்கே ஒரேடியாக ரஸித்துக்கொண்டு நிற்கிறார்.*

*கண்டவுடன் அந்த இடத்திலேயே தன்னை மறந்து அப்படியே நின்று அந்தப் புருவத்தையே பார்க்கும்படியாகப் பண்ணிவிடுகிறதே! அப்படியானால் இது ஸாதாரணமான ஏதோ ஒரு சின்ன ரோம வரிசையாக இருக்க முடியாது. இது ஏதோ பெரிய விஷயமாக இருக்க வேண்டும். அதைக் கண்டு பிடித்து ஆசார்யாள் அடுத்த மூன்று வரிகளில் சொல்கிறார். மொத்தத்தில் மூன்றாம் வரி ஆரம்பத்தில் சொல்கிறபடி,*

*''தநுர்-மந்யே''*

*- ''இந்த இரு புருவங்களையும் வில் என்று நினைக்கிறேன்.'' ('மந்யே' என்றால் 'நினைக்கிறேன்'.)*

*''வில் என்பது வளைந்துதான் இருக்கும். புருவம் ஒவ்வொன்றும் வளைந்திருக்கிறது. 'வில்லுப் புருவம் என்பது எல்லாக் கவிகளும் சொல்வதுதானே? அதைத்தானே ஆசார்யாள் 'ரிபீட்' பண்ணுகிறார்?'' என்று நினைத்துவிடக்கூடாது. முன்னேயே சொன்னாற்போல ஏற்கனவே கவிகள் கண்டதிலேயே ஆசார்யாள் வித்யாஸமாக ஒரு ஸூக்ஷ்ம திருஷ்டியோடு பார்த்து நூதனமாக ஒன்றைக் கல்பித்து விடுவார்!*

*இங்கேயும் அப்படித்தான். இரண்டு புருவத்தையும் அவர் இரண்டு தனித் தனி வில்லாகப் பார்க்கிறார். ஒரே வில் அடியிலிருந்து நுனிவரை ஒரே 'ஆர்க்'காக*

*வளைந்தில்லாமல், ஒவ்வொரு பாதியும் ஒரு தனி 'ஆர்க்'காக வளைந்தாற்போலவும் பண்ணுவதுண்டல்லவா? இப்படிப் பட்ட வளைசல் கொண்ட ஒரே வில்லின் இரண்டு பாதிகளாவே அம்பாளுடைய இரண்டு புருவங்களையும் ஆசார்யாள் நினைக்கிறார். இரு புருவங்களின் வளைவுகளும் ஒரே தநுஸின் இரண்டு நெரிப்பு ஒரு வில்லைத் தேர்ந்த வில்லாளியொருவன் நாண் பூட்டி விடப் போகிற போது ஏற்படுகிற* tension *-ன் பிகுவில் அதிலே எப்படி அலை மாதிரி* vibration *பரவுமோ அப்படி இருக்கிறது!*

*ஆக இரண்டு புருவமும் சேர்ந்து ஒரே வில்லு - ''தநுர்மன்யே''.*

*ஆனால் சேரவில்லையே! புருவ மத்தியில், அதாவது நாஸி ஆரம்பிக்கும் இடத்துக்கு மேலே இரண்டு புருவங்களும் சேராமல் துண்டித்துத்தானே இருக்கிறது? அங்கே புருவமாகிற ரோமம் இல்லை. அந்த இடத்தில் ரோமம் இருந்தால் அது உத்தம ஸ்திரீகளுக்கு ஸாமுத்ரிகா லக்ஷணமாகாது. ''கூடின புருவம் குடியைக் கெடுக்கும்' என்பார்கள். அம்பாளுடைய புருவ மத்தியில் ரோமமில்லாததுதான் உத்தம ஸ்திரீ லக்ஷணம்! அவளுக்கு உகந்ததும் பொருத்தமும் அப்படியிருப்பதுதான். ஆனால் கவி கல்பனையில் இது காலை வாரிவிடுகிறதே! புருவத்தை வில்லாக உவமிக்கிறபோது அந்த வில்லுக்கு நடு பாகத்தில் கொஞ்சம் தூரம் விட்டுப்போய்,* gap *விழுகிறதே! ஆனாலும் இப்படித் துண்டித்துப்போன வில்லு விழாமல் நிற்கிறது என்றால் அபத்தக் கல்பனையாகிவிடும்.*

*இந்த* gap, *துண்டிப்பு வில்லுடைய தண்டம் என்ற வளைந்த பகுதியில் இருப்பது மட்டுமில்லை. அந்த தண்டத்தின் இரண்டு கோடிகளையும் சேர்த்துக் கட்டும் நாணும் இருந்தால்தானே வில்லு வில்லாகும்? அம்பாளுடைய வண்டு முழிகளின் ஓட்டமும் ப்ரகாசமுமே புருவ வில்லுக்குக் கறுப்பு நாணாகிறது என்றும் ச்லோகத்தில் சொல்லப் போகிறார். அந்த நாணும் அம்பாளுடைய நாஸாதண்டம் (மூக்குத்தண்டு) குறுக்கிடும் இடத்தில் துண்டித்துத்தான் இருக்கிறது. ஆனாலும் அதுவும் அறுந்து விழவில்லை என்றால் கல்பனை இரட்டிப்பு அபத்தமாக அல்லவா ஆகும்?*

*இப்படி ஒரு இடைஞ்சலைக் கொண்டு வந்து அதை நிவிருத்தி பண்ணுவதில்தான் ஆசார்யாளின் கவித்திறமை இருக்கிறது. இதற்காகவேதான் அவர் இரட்டை வில்லாகச் சொல்லக்கூடிய புருவங்களை ஒற்றை வில்லாக்கி உபத்ரவத்தை. வலிய வாங்கிக் கொண்டிருக்கிறார்! வில்லுக்கு இடையிலே ஏற்பட்ட ஊனம் மாதிரி* gap *ஏற்பட்டிருப்பது ஊனமே இல்லை என்பதற்கு இப்போது அவர் நூதன கல்பனையாகக் காரணம் சொல்ல ஆரம்பிக்கிறார்.*

*இது மன்மதனின் வில் என்கிறார். ''ரதிபதே:'' என்று வருகிறதல்லவா? ரதியின் பதி மன்மதன். ''ரதிபதே: தநு:மன்யே'' - 'மன்மதனின் தநுஸ் என்று நினைக்கிறேன்'.*

*''இப்படி நினைப்பதற்கு ஆதாரம் காட்டுவீர்களா?''*

*''ஊம்! காட்ட முடியும்: த்வதீயே நேத்ராப்யாம் மதுகர ருசிப்யாம் த்ருத குணம். இதுதான் காரணம்.''*

*''எங்களுக்கு ஸம்ஸ்கிருதத்தில் பதில் சொன்னால் புரியவில்லையே! எங்கள்*

தேசத்தில் பிரதேசத்துக்குப் பிரதேசம் அந்தந்த பாஷைகளைச் சொல்லிக்கொண்டு அதுகளையும் முறைப்படி படிக்காமல், வளர்க்காமல், ஒன்று தீர்மானமாக ஸாதித்துவிட்டோம் - அதாவது ஸம்ஸ்கிருதத்தை ஒரு மாதிரி 'க்ளோஸ்' செய்துவிட்டோம். அதனால் தமிழிலே சொல்லுங்கோ!''

''த்வதீயே'' - 'உன்னுடைய': ''மதுகர ருசிப்யாம்'' - 'வண்டுகளாகப் பிரகாசிக்கிற'; ''நேத்ராப்யாம்'' - 'இரண்டு கண்களால்'; 'த்ருத - குணம்' - (இந்த வில்) நாண் உடையதாக இருக்கிறது'. 'குணம்' என்று நாணுக்குப் பெயர். அம்பாளுடைய இட-வலக் கண்கள் (நெற்றிக் கண்ணைச் சேர்க்காமல், dual -ஆகவே சொல்லியிருக்கிறது) கரு வண்டு பளபளக்கிற மாதிரியான விழிகளோடு இருக்கிறது. நெற்றிக் கண் சிவப்பு அதைக் கருவண்டாகச் சொல்ல முடியாது. அதன் ஸமாசாரம் அடுத்த ச்லோகத்தில் வரும். (இப்படிச் சொல்லி, விட்டுவிட்டால், அடுத்த ச்லோகத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் உங்களுக்கு இப்பவே ஆர்வம் உண்டாகும்!) இரண்டு கரு வண்டுக் கண்ணிலிருந்து புறப்படும் தீக்ஷ்ணமான பார்வை எல்லாப் பக்கமும், ஸமஸ்த ஜீவராசிகளையும் கடாக்ஷிப்பதற்காக, கிறுகிறு என்று ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிற வேகத்தில் அந்த இரண்டு வண்டுகளே ஏராளமான வண்டுகளின் வரிசை மாதிரித் தெரிகிறது! ஸ்டில்ஸ் என்று அசலனப் பேரோடு இருக்கிற படங்களையே ஒரே வேகத்தில் 'மோஷன் பிக்சர்' என்று விட்டால் அந்த வேக சலனமே துண்டு துண்டான படங்களை ஒரு தொடர்ச்சியான தாரையாகக் காட்டுகிறதல்லவா? அப்படி, இரண்டே வண்டுக் கண்ணானாலும் அதுகள் சுழலுகிற சுழற்சி வேகத்திலேயும், அதோடு அந்தப் பளபளப்பு கதிராக flash பண்ணுவதிலேயும் அநேக வண்டுகள் சேர்ந்த ஒரு தொடர் வரிசை மாதிரித் தெரிகிறது. ஒரு வண்டு வரிசை இந்தக் கண்கோடிக்கு அந்தக் கண்கோடி ஓடுகிறது போன்ற ப்ரமை உண்டாகிவிடுகிறது. அது வண்டுகளால் ஆன ஒரு நாண்கயிறு போலவே தோன்றுகிறது. மேலேயோ ஒரு தனுஸ் பொருத்தமாக அதற்குப் பக்கத்தில் இப்படி நாண் வரிசை. வண்டு நாண் மன்மதனுக்குத்தானே உண்டு? 'மௌர்வீ மதுகரமயீ' என்று ஆரம்ப ச்லோகம் ஒன்றிலேயே (ச்லோ-6) சொல்லியிருக்கிறேனே! அதனால்தான் இது மன்மதன் வில் என்று நினைக்கிறேன்.''

''ஸரி. இது பொருத்தமாகத்தான் இருக்கிறது. அம்பாள் புருவத்தைப் பார்த்துத் தன்னை மறந்து நீங்கள் நின்றதற்கும் இதுதான் காரணம். அது மன்மதனுடைய வில்லான கரும்பு அல்லவா? லோக மாதாவின் புருவத்தில் கருணை கருப்பஞ்சாறாகத் தித்திக்க ஓடுகிறது. அதுதான் அப்படி வைத்த கண் வாங்காமல் பார்க்கும்படி செய்திருக்கிறது. ஸரி, மன்மதன் இந்த வில்லை வளைத்து யாரை ஜயிக்க போகிறான்?''

''வேறே யார்? பரமேச்வரனைத்தான். அவர் எந்த நிமிஷமும் தக்ஷிணாமூர்த்தியாகப் போய் ஏகாந்தத்தில் உட்கார்ந்துவிடாமல் இந்த ஜனனியோடு ஜனகனாக அநுக்ரஹம் பண்ணிக் கொண்டேயிருப்பதற்காகத்தான் மன்மதன் எப்போதும் ஸித்தமாக வில்லை. நாண்பூட்டி வைத்துக் கொண்டிருக்கிறான். அம்பாள் கொடுத்த சக்தி, அவள் போட்ட பிச்சையில்தான் இவனுக்கு இந்த அதிகாரம் இருக்கிறது. அவளுடைய கருவி மாத்திரம்தான் இவன். அதனால், அதைக் காட்டவே, அம்பாளுடைய புருவம், விழிகள் இவற்றையே தன் கருவிகளாக - கரு விழிகளையே கருவியாக - காட்டுகிறான்!''

*ச்லோகத்தின் சிக்கல் அவிழ்த்துவிட்டதா என்று கேட்டீர்களானால் - அதுதான் இல்லை! இன்னம் அந்தச் சிக்கலுக்கு, திரிசமனுக்கு நான் வரவேயில்லை. 'வில் ஏன் ஐயா நடுவில் துண்டித்திருந்தாலும் விழாமலிருக்கிறது?' என்ற கேள்விக்கு நான் இன்னம் ஸமாதானம் சொல்லவில்லையே! அதில்தான்* complication. *இப்போதுதான் அதைச் சொல்லப் போகிறேன். ஆசார்யாளும் அதைக் கொண்டு போய்க் கடைசி வரியில்தான் வைத்திருக்கிறார்:* **ப்ரகோஷ்டே முஷ்டௌ ச ஸ்தகயதி நிகூடாந்தரம் உமே.**

*கடைசிக்கு முன் வரியில் வரும் ''ஸவ்ய இதர கரக்ருஹீதம்'' என்பதையும் இதோடு சேர்த்துக் கொள்ள வேண்டும். அதில்தான் 'வபை' இருக்கிறது!*

*''உமே என்று (ச்லோகம்) முடிவது அம்பாளை ''உமையே!'' என்று கூப்பிடுவதுதான். அதிலே ஒன்றும் சிக்கல் சிடுக்கல் இல்லை. பாக்கியைப் பார்ப்போம்.*

*''ப்ரகோஷ்டே'' - 'கையின் மணிக்கட்டாலும்': ''முஷ்டௌ ச'' - முஷ்டியிலும்', அதாவது குஸ்தி போடுகிறவர்கள் கை விரல்களை மடக்கி மூடிக் கொள்கிற போது ஏற்படும் முத்திரையாலும்.... இப்படிச் சொல்லும் போது புறங்கைப் பக்கத்தைத்தான் சொல்வது. உள்ளங்கைப் பக்கத்தையல்ல. புறங்கையும் அதில் விரல்களின் முதல் கணுவரை மடிந்தும் இருக்கிற முத்ரைதான் முஷ்டி. கையை இப்படி மூடிக்கொள்ளும்போது மறுபக்கம் அந்த விரல்களின் இரண்டு கணுக்கள் மடங்கி உள்ளங்கையை அழுத்தும். இந்த உள்ளங்கைப் பக்கத்தை முஷ்டி என்பதில்லை. தமிழில் முட்டி என்பது ''முஷ்டி'தான். 'முட்டிப் பார்ப்பான்' என்பார்கள். அக்ரஹாரத்தில் ஒரு வீட்டிலும் முஷ்டியளவுக்குப் பிடித்துப் போடுகிற அரிசிக்கு அதிகமாக யாசகம் வாங்குவதில்லை என்ற வ்ரதத்தோடு பூர்வகத்தில் அநேகம் ப்ராம்மணர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களை வைத்துத்தான் 'முட்டிப் பார்ப்பான்' என்று பெயர் ஏற்பட்டிருந்தது. இப்போதோ ஒரு இடம் பாக்கியில்லாமல் எங்கே பணம், ஸௌகர்யம் கிடைக்கிறதென்று 'முட்டி முட்டிப் பார்ப்பவனாக' இருப்பதால் 'முட்டிப் பார்ப்பா'னாயிருக்கிறான்!...*

*மணிக்கட்டும், முட்டியும் என்று இரண்டைச் சேர்த்துச் சொல்வதற்குத்தான் ''ப்ரகோஷ்டே முஷ்டௌ ச'' என்று 'ச' போட்டிருக்கிறார். ''ஸ்தகயதி நிகூடாந்தரம்'' என்று வருவதில் ''நிகூட அந்தரம்'' என்றால் தெரியாமலிருக்கும் இடைப்பகுதி என்று அர்த்தம். ''ஸ்தகயதி'' என்றால் 'மறைத்து வைத்திருப்பது'.*

*இந்த எல்லா வார்த்தைகளையும் கோத்து நாலாம்வரிக்கு அர்த்தம், 'மன்மதனின் மணிக்கட்டும் முட்டியும் சேர்ந்து வில், நாண் ஆகியவற்றின் மத்யபாகம் நமக்குத் தெரியாதபடி மறைந்திருக்கின்றன' என்பது.*

*ஒரு வில்லாளி வில்லுடைய தண்டின் நடுவில்தான் முஷ்டியால் அதைப் பிடித்திருப்பபான். அப்போது அந்த (நடு) பாகம் தெரியாமல் போய்விடும். அதேபோல் அந்த ஸமயத்தில் வில்லுடைய நாணுக்கு எதிர்க்கே (எதிரில்) அவனுடைய மணிக்கட்டு வருமாதலால் நாணின் நடுபாகமும் தெரியாமல் மறைந்து போய்விடும். சட்டென்று பார்த்தால் ஒரு தநுஸுு அதன் தண்டம், நாண் இரண்டுமே நட்ட நடுப்புற ஒரு சின்ன இடைவெளி விட்டு அப்படியே துண்டித்துப்போய், ஆனாலும் அதிசயமாக அந்தத்*

*துண்டங்கள் சிதறி விழாமல் நிற்பதாகத் தோன்றும். அப்புறம் கவனித்தாலதான், 'துண்டிக்கவில்லை; வில்லாளியுடைய முட்டியும் மணிகட்டுந்தான் அந்த பாகங்களை மறைத்திருக்கிறது' என்று புரியும். 'அம்பாளுடைவய புருவ வில்லுக்கு நடுவில் ரோமமில்லாத ப்ரூமத்தியும், முழிகளான நாணுக்கு நடுவில் நாஸா தண்டமும் குறுக்கிட்டு அதுகளைத் துண்டித்த மாதிரித் தெரிந்ததே, அது இப்படித்தான். துண்டிக்கவுமில்லை. ஒன்றுமில்லை. அதைப் பிடித்துப் கொண்டிருக்கும் மன்மதனுடைய முஷ்டி, ப்ரகோஷ்டங்கள்தான் இரண்டு மத்ய பாகங்களையும் மறைத்து இப்படிப்பட்ட ப்ரமையை உண்டாக்கி விட்டன' என்று ஆசார்யாள் சாதுர்யமாகக் காரணம் காட்டுகிறார். இது கடைசி வரி.*

*எந்தக் கை அப்படி மறைக்கிறது, வலதா, இடதா என்பதை முந்தின வரியில் ''ஸவ்ய இதர கரக்ருஹீதம்'' என்பதால் தெரிவித்திருக்கிறார். ''ஸவ்ய'' - வலது; ''ஸவ்ய - இதரகர'' என்றால் 'வலதுக்கு வேறேயாக இருக்கிற கை'. அதாவது இடது கை ''க்ருஹீதம்'' - 'பிடிக்கப்பட்ட'. மன்மதனின் இடதுகையால் பிடிக்கப்பட்ட தநுஸாக அம்பாளின் புருவங்களைச் சொல்கிறார்.*

*''ஸவ்ய'' என்றால் 'இடது' என்றும் சொல்வதுண்டு. ஸம்ஸ்க்ருதத்தில் இப்படிச் சில வார்த்தைகள்: ஒரே வார்த்தையே ஒரு அர்த்தமும், அதற்கு நேரெதிர் அர்த்தமும் கொடுக்கும். ''சாயா'' என்றால் 'நிழல்', 'ஒளி' என்ற இரண்டு அர்த்தமும் உண்டு ''ஸிதி'' என்றால் 'வெளுப்பு', 'கறுப்பு' என்ற அர்த்தமும் உண்டு. அகோரம் என்றுல் கோரமாயில்லாதது என்றும் கோரமாயிருப்பது என்றும் அர்த்தம் ''ந்யாஸம்'', ''ஸந்ந்யாஸம்'' (சந்நியாசம்) என்ற வார்த்தைகளுக்குச் 'சேர்ந்திருப்பது' என்றும் அர்த்தம்; 'விட்டுவிடுவது', 'துறப்பது' என்றும் அர்த்தம். அப்படி இந்த 'ஸவ்ய'மும் ஒன்று - வலது, இடது என்று இரு பொருளும் கொடுக்கும். ஸஹஸ்ர நாமத்தில் அம்பாளுக்கு இடப்பக்கம் லக்ஷ்மியும், வலப்பக்கம் ஸரஸ்வதியும் சாமரம் போடுவதாக நாமா சொல்கிறபோது ''ஸ சாமர ரமா வாணீ ஸவ்ய தக்ஷிண ஸேவிதா'' என்று இருக்கிறது, 'தக்ஷிணம்' என்றால் வலது. அதைப்பற்றி ஸந்தேஹமே கிடையாது. அதனால் இங்கே 'ஸவ்யம்', என்பது இடதாகத்தான் இருந்தாகணும் என்றும் ஸந்தேஹமில்லாமல் ஆகிறது. ஆனாலும் பொதுவிலே 'ஸவ்யம்' என்பதை 'வலது' என்றே எடுத்துக் கொள்வது. வலதுதான் 'சோத்துக்' கை. இடது 'என்னமோ' கை என்கிற ரீதியில் எப்போதும் வலதுக்குத்தான் ஏற்றம் சொல்வது. 'ஸவ்ய'மான வலதாக இல்லாதது 'அபஸவ்யம்', அதாவது இடது தப்பாக விபரீதமாக, அமங்களமாக, அஸங்கியமாக இருப்பதை 'அபஸவ்யம்' என்றே சொல்வார்கள். இங்கிலீஷ் படியும் வலது* right *என்றால், இடது* wrong *தானே?*

*இங்கே ஆசார்சயாளும் வலதையே ஸவ்யம் என்கிறார். அடுத்த ச்லோகத்திலேயே அம்பாளுடைய வலது கண் ஸூர்யன், இடது கண் சந்திரன் என்னும்போது வலது கண்ணை ''ஸவ்யம் தவ நயனம்'' என்று சொல்லியிருக்கிறா ராகையால் இங்கேயும் அந்த அர்த்தந்தான் பொருந்தும். ''ஸரி, இந்த எக்ஸ்ப்ளஷேன் - லாம் எதுக்கு? வலதோ இடதோ ஏதா ஒரு கையாலே மன்மதன் அம்பாளோட புருவ வில்லை பிடிச்சுண்டிருக்கான்னு வெச்சுண்டா போறாதா?''*

*போதாது. வில்லுத் தண்டினுடைய நடு பாகமும். அதே போலவே நாணின் நடு பாகமும் மறைப்பட்டிருக்கிறதே! இவை இப்படி இருப்பதற்கு வில்லாளி எந்தக்கையால் வில்லைப் பிடித்திருக்கிறான் என்று தெளிவாகக் காட்டினால்தான் பதில் கிடைக்கும். இல்லாமலா ஆசார்யாள் - வார்த்தைகளை 'எகானமைஸ்' பண்ணுவதற்கே பேரெடுத்தவர்; ஸாமான்களை வீண் பண்ணாமல் ஒழுங்காகக் குடித்தனம் பண்ணுபவர்கள் செட்டும் கட்டுமாக யூஸ் பண்ணுவது போல வார்த்தைகளைப் போடுகிற அவர் - வெறுமே ''கர க்ருஹீதம்'' என்று சொல்லாமல் மெனக்கிட்டுக் கொண்டு ''ஸவ்ய இதர கர க்ருஹீதம்'' என்று போட்டிருக்கிறார்?*

*'இடது' என்பதற்கும் நேராக அதற்கே உள்ள 'வாமம்' என்ற வார்த்தையைப் போடாமல் 'ஸவ்யேதரம்', அதாவது 'ஸவ்ய இதரம் (வலதுக்கு மாறானது) என்று அவர் போட்டது ரொம்பவும் காரணத் தோடுதான். பொதுவாக எந்த வில்லாளியுமே வில்லை இப்படி இடது கையால்தான் பிடித்துக் கொள்வான். பிடித்துக்கொண்டு வலது கையால் அதில் அம்பு தொடுத்து விடுவான். வில்லைப் பிடித்துக் கொள்வதைவிட பாண ப்ரயோகந்தானே முக்யம்? வலது கையால்தான் எந்த வேலையும் வாகாக,* facile *-ஆகப் பண்ண முடியும். அதிஸாமர்த்யசாலிதான் இடது கையாலும் பண்ணத் தேர்ச்சி ஸம்பாதித்துக் கொள்வது. அந்த மாதிரித் தேர்ச்சி இந்த மன்மதனே ஸம்பாதித்துக் கொண்டவன்தான். அதாவது அவன் வலது கையால், 'ஸவ்ய கர'த்தாலேயே இங்கே சொல்லியிருக்கிறுர் போல, ஸவ்யேதர கரத்தால் இல்லே- ஸவ்ய கரத்தாலேயே - வில்லைப் பிடித்துக்கொண்டு முக்யமான கார்யமாகிய பாண ப்ரயோகத்தை 'ஸவ்ய இதர'மான இடது கையால் செய்யவல்ல மஹா வில்லாளியாவான். இம்மாதிரி வலக்கையால் வில்லைப் பிடித்துக் கொள்ளும் ஸாமர்த்யசாலிகளுக்கு 'ஸவ்யஸாசீ என்றே பெயர் கொடுத்துச் சிறப்பித்திருக்கிறது.*

*அர்ஜுனனுக்கு அந்தப் பேர் உண்டு. கீதையிலேயே பகவான், நிமித்த மாத்ரம் பவ ஸவ்யஸாசின்'' என்கிறார். - அந்த அர்ஜுனனின் கைக் கருவியாக மட்டுமே தநுஸு இருந்து கொண்டு அவன் பண்ணுவிப்பதையே பண்ணுகிறமாதிரி, தம்முடைய உத்தேசப்படியே பண்ணும் கருவி மாத்ரமாக அவன் இருக்க வேண்டும் என்று உபதேசிக்கிறபோது இப்படிச் சொல்லியிருக்கிறார். ''நீ பெரிய ஸவ்யஸாசியாக உன்னுடைய காண்டீவ தநுஸை இழுக்கிற இழுப்புக்கு இழுத்தாலும், நீயும் உன்னையே தநுஸாக்கிக் கொண்டு நான் இழுக்கிற இழுப்புக்கு இழுபட வேண்டியதுதான்! ஸவ்யஸாசிக்கும் நான் ஸவ்யஸாசி!'' என்ற தத்வத்தை அப்படியே 'கண்டென்ஸ் பண்ணி நாலே வார்த்தையில் போட்டு விட்டார்!*

*இடி இந்த்ரனுடைய வஜ்ராயுதம். மழைக்கு தேவதையே அவன்தான். அர்ஜுனன் இந்த்ர குமாரன். ஆனபடியால் இடி விழாமல் இருப்பதற்கு ப்ராத்தனையாக அர்ஜுனனின் பத்துப் பேர்களை ஒரு ச்லோகமாகக் கொடுத்திருக்கிறது. அங்கேயும் 'ஸவ்யஸாசீ' வருகிறது.*

**அர்ஜுந: பல்குந: பார்த்த: கிரீடீ ச்வேதவாஹந:।**
**பீபத்ஸு: விஜய: க்ருஷ்ண: ஸவ்யஸாசீ தநஞ்ஜய:॥**

*''அர்ஜுனன் ஸமாசாரம் இருக்கட்டும். அதுக்கு இப்போ என்ன வந்தது? மன்மதனும் அவனாட்டமா ஸவ்யஸாசி; அப்படியிருந்தும் இங்கே அவன் ஸவ்யமில்லாத கையாலேயே புருவ வில்லைப் பிடிச்சுண்டிருக்கறதா ஆசார்யாள்* pointed *-ஆகக் காட்டியிருக்கார்-ங்கறேள். என்ன* point? *அதைச் சொல்லுங்கோ?*

*சொல்கிறேன். ஒரு வில்லாளி வில்லை அதன் மத்ய பாகத்தில் கையாலே பிடித்துக் கொள்ளும்போது நாம் அவனுக்கு எந்தப் பக்கத்திலே இருந்து கொண்டு பார்க்கிறோம் என்பதைப் பொறுத்தே அதனுடைய நாணின் மத்ய பாகமும் மறைபட்டோ, மறைபடாமலோ இருக்கும்.*

*இப்போது நன்றாக, சித்ரமாகக் கல்பனை பண்ணிக் கொண்டு பாருங்கள். அம்பாளுடைய புருவத்தை மன்மதன் வில்லாக வளைப்பதாக வைத்துக் கொள்கிறபோது நாம் அவனுக்கு எந்தப் பக்கத்தில் இருக்கிறோம்? இடது பக்கத்தில்தான். அவனுடைய வலது பக்கத்தில் அம்பாளுடைய முகம், பின்னந்தலைதான் வரும். நன்றாகச் சித்ரம் பண்ணிப் பாருங்கள்! அம்பாள் ஸ்வாமிக்கு இடது பக்கத்தில்தான் இருப்பாள். அந்த அம்பாள் முகம் நெடுக்கு வாட்டாக இருக்கிறதென்றால், அதிலே குறுக்குவாட்டாக இந்தப் புருவ வில் இருக்கிறது. அதனால் அதைப் பிடித்துக் கொண்டிருப்பவனும் அப்படித்தான் இருக்கணும். அவனுக்கு வலது பக்கத்திலே அவளுடைய முகமே வந்து பார்க்கவே முடியாது. இடது பக்கம் மட்டுந்தான் நாம் நின்று பார்க்கும்படி* free *யாக இருப்பது.*

*இப்படி நாம் பார்க்கும்போது, அவன் வலது கையால் வில்லைப் பிடித்துக் கொண்டிருக்கிறானென்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது நாலு விரல் உள்ளங்கையில் மடிந்து வில்லுத் தண்டின் மத்தியைப் பிடித்துக் கொண்டிருப்பதாகப் பார்ப்போம். அதாவது 'முஷ்டி' என்று ஆசார்யாள் சொல்லும் புறங்கை முட்டாக இல்லாமல், உள்ளங்கைப் பக்கந்தான் தெரியும். இதுவுங்கூட அந்த மத்ய பாகத்தை மறைக்கத்தான் செய்யுமென்றாலும், விரல்களைச் சேர்த்து மடக்கி அழுத்துவதை* tight *-ஆகப் பண்ணாவிட்டால் இடுக்கு விட்டுக்கொண்டு வில்லுடைய மத்ய பாகமும் கொஞ்சமோ நஞ்சமோ தெரியவே செய்யும். பரிபூர்ணமாக மறைபட்டிராது. விரல்களை நாம் சேர்தது மடக்கும்போது முதல் கணுவரை அதை நன்றாக ஒட்டிக் கொண்டு சேர்க்கிற அளவுக்குப் பின் இரண்டு கணுவில் இருக்குமென்று சொல்ல முடியாது. பிடி கொஞ்சம் தளர்ந்தாலும் உள்ளேயிருப்பது - இங்கே தநுர் தண்டத்தின் மத்தி - தெரிய ஆரம்பித்துவிடும்.*

*ஆனால் 'முஷ்டி' என்ற புறங்கைப் பக்கத்தை எடுத்துக் கொண்டால் அது தனித்தனியாயுள்ள நாலுவிரலை நம் ப்ரயாஸையில் நாம் சேர்ப்பதுபோல இல்லாமல் பகவானே ஒன்றாகச் சேர்த்து வைத்த ஏக பாகமாக இருக்கிறது. இதுவே முக்யமாகத் தெரிந்து இதோடு கூடிய அளவு நெருக்கமாகவே ஒட்டிக்கொண்டுள்ள விரல்களின் ஆரம்பக் கணுப் பாகமும் அந்தப் பக்கம் கொஞ்சூண்டு தெரிகிறது. அதாவது அதுதான் இடுக்கே விடாத நல்ல மறைப்பாக உள்ள பக்கமாயிருக்கிறது.*

*ஆனால் மன்மதன் வலது கையால் புருவ வில்லைப் பிடித்துக் கொண்டிருந்தானால் அவனுக்கு இடது பக்கமே இருக்கக் கூடியவர்களான நமக்கு அந்த நல் மறைப்பான முஷ்டிப் பக்கம் தெரியமுடியாது!*

*இதைவிட முக்யம், நாண் ஸமாசாரம். வில்லாளியின் 'ப்ரகோஷ்டம் என்பதான மணிக்கட்டு நாண் மத்தியை மறைப்பதாக முதலிடம் கொடுத்துச் சொன்ன பிறகுதான், 'முஷ்டௌ ச' என்று முட்டியும் வில்லுத் தண்டின் மத்தியை மறைப்பதை ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். நாண் மாதிரியுள்ள விழியொளியின்* continuity *(தொடர்ச்சி) அம்பாளுடைய மூக்குத்தண்டால் மத்தியில் துண்டித்துப் போனதாகத் தெரிகிறதல்லவா? இப்படியொரு துண்டிப்பு அப்போது (மன்மதன் வலக்கையால் வில்லைப் பிடித்திழுக்கும்போது அவனுக்கு இடப்பக்கம் உள்ள) நம்* angle *-ல் தெரியவே முடியாது. நம்முடைய பார்வையில் அவனுடைய அந்தக் கை நாணுக்கு அந்தண்டைப் பக்கத்திலேயே இருக்குமாதாலால், அவனுடைய மணிக்கட்டினால் நாண் மத்தி மறை படாமல் முழுசாகவே தெரிந்துவிடும்.*

*(அப்போது) உபமானம் தப்பிப்போய்விடும். வில்லாளியின் மணிக்கட்டால் மறைக்கப்பட்ட நாணின் நடு பாகம் மாதிரி அம்பாளின் கருவிழியின் தொடர்ச்சி நாஸியால் மறைக்கப் பட்டிருக்கிறது என்று உவமை காட்ட முடியாது.*

*அதுவே இடது கையால் அவன் வில்லைப் பிடித்துக் கொண்டிருப்பதாக வைத்துக்கொண்டு பாருங்கள். 'பேஷ் பேஷ்' போடும்படியாக எல்லாம் ஸரியாகிவிடுகின்றன - முஷ்டி, அதுதான் புறங்கைப் பக்கக் குத்துச் சண்டை முத்திரை, அதுவே தநுர் மத்தியைப் பிடித்துக்கொண்டு இரண்டு இடுக்கு இல்லாமல் நன்றாக மறைக்கிறது; ப்ரகோஷ்டமும் நாணின் மத்தியை மாதிரி நம் பார்வையிலிருந்து அடியோடு மறைத்துவிடுகிறது.*

*ஒரு மாதிரி சிக்கலை விடுவித்துவிட்டேனென்று நினைக்கிறேன். அல்லது, இப்பத்தான் தலையைச் சுற்றிக் கொண்டு வருகிறதோ என்னவோ? ஆனாலும் சொல்ல மாட்டீர்கள்; சொன்னால் மறுபடி* clarify *பண்ணுகிறனென்று ஆரம்பித்து விடுவேனோ என்று! அதனால் அடுத்த ச்லோகத்திற்குப் போவோம்.*

*(சிறிது பொழுது மௌனமாக இருந்து இச் சுலோக விஷயமாகவே தொடர்கிறார்கள்:)*

*ஸாரம் என்னவென்றால்: அம்பாள் மஹிமையே ஈச்வரன் எரித்துச் சாம்பலாக்கின மன்மதனை உயிர்ப்பித்ததுதான். ஸ்ருஷ்டி லீலைக்காக இப்படிப் பண்ணினாள். அப்புறம், 'ஸ்ருஷ்டியில் ஜனங்கள் கெட்டுப் போகிறார்களே! அவர்களைக் காப்பாற்ற நம் ஒருத்தியாலேயே முடியும் என்றாலும் ஜனக-ஜனனியா, தாயும் தந்தையுமாகப் போனால்தானே அவர்களுக்கு ரொம்பவும் பிடித்த மாதிரி இருக்கும்? அப்படி அநுக்ரஹிக்க வராமல் இவர் ஏகாந்தமாகப் போய் உட்கார்ந்துவிடப் போகிறாரே! என்று புருவத்தை நெரித்துக்கொண்டு கவலைப்பட்டாள். அப்போது, இவளால் உயிர்ப்பிச்சை பெற்றவன் அந்த நெரிப்பையே பிரயோஜனப்படுத்திக்கொண்டு, அம்பாளுடைய புருவத்தையே தநுஸாக்கிக்கொண்டு, 'நான் உன் உதவிக்கு வரேன் அம்மா! இந்த*

வில்லை நான் ஆயத்தமாகத் தூக்கிப் பிடித்துக்கொண்டே இருந்தேனானால். அவர் கொஞ்சம் வைராக்கியமாகிறபோதே பாணத்தைப் போட்டு அவரைத் திருப்பிவிடலாம். முன்னே ஏதோ கரும்பு வில்லை வைத்துக்கொண்டு 'நான்' பண்ண முடியும் என்று மார் தட்டிக் கொண்டு போனதால் பஸ்மமானேன். இப்போது ஸாக்ஷாத் உன் முகத்தில் நான் குடி புகுந்து, உன்னுடைய புருவ - நேத்ரங்களையே தநுஸ்-நாணாக்கிக் கொண்டிருப்பதால் அப்படி ஆகாது; வெற்றியைப் பற்றி ஸந்தேஹமே இல்லை' என்று சொல்கிறான்.

அந்தப் புருவ நெரிப்புக்கு அடங்கி ஒடுங்கித்தான் பிரம்மாவிலிந்து ஸதாசிவன்வரை மஹா பெரிய தேவர்களும் தொழிற்படுகிறார்களாதலால், நாமும் அதை தியானித்து சரண் அடைந்தோமானால் மன்மதனும் அதற்கு அடங்கி ஒடுநகி நம்மிடம் வராமல் ஓடிவிடுவான்!

## முக்கண்-முக்குண முக்கியம்

கிரீடம், கேசபாரம், வகிடு, முன்னுச்சி மயிர், லலாடம், புருவம் என்று மேலிருந்து கீழே வரிசையாகச் சொல்லிக் கொண்டு வரும்போது, அடுத்தபடியாக நேத்ரத்துக்கு வருகிறார். யாருக்குமே கண்தான் விசேஷம். ''கண்ணே, கண்மணியே!'' என்று சீராட்டுகிறோமே தவிர, ''காதே!'', ''மூக்கே!'' என்பதில்லை. க்ருபா கடாக்ஷப் பிரபாவத்துக்குப் பேர்போன தேவிக்குக் கண்களை வைத்தே பேர்கள், திவ்ய நாமாக்கள் அநேகம் - காமாக்ஷி, மீநாக்ஷி, விசாலாக்ஷி, நீலாயதாக்ஷி, அஞ்ஜநாக்ஷி, தமிழிலே வடுவகிர் கண்ணம்மை, வேற்கண்ணியம்மை, வேனெடுங் கண்ணியம்மை என்றெல்லாம் ஏற்பட்டிருக்கின்றன.

போன (ச்லோ-47) ச்லோகத்திலேயே இரண்டு கண்களைப் பற்றி passing -ஆக, போகிற போக்கில், அவை கருவண்டு மாதிரி இருப்பதாகச் சொல்லிவிட்டார். ஆனாலும் அங்கே பிராதான்யம் புருவத்துக்குத்தான். அங்கே அவளுக்கு விசேஷமான நெற்றிக் கண்ணைப் பற்றி அடியோடு ஒன்றும் சொல்லவில்லை. இங்கே (ச்லோ-48) மூன்று நேத்ரங்களைப் பற்றியும் சொல்கிறார்.

**அஹ: ஸூதே ஸவ்யம் தவ நயநம் அர்காத்மகதயா**
**த்ரியாமாம் வாமம் தே ஸ்ருஜதி ரஜநீ-நாயகதயா।**
**த்ருதீயா தே த்ருஷ்டி: தர-தளித-ஹேமாம்புஜருசி:**
**ஸமாதத்தே ஸந்த்யாம் திவஸ-நிசயோ: அந்தரசரீம் ॥ 48**

அம்பாளின் வல-இடக் கண்கள் நீலோத்பலங்கள் போல, கருவண்டு மாதிரியான விழியோடு பிரகாசிப்பவை. இரண்டு கண்ணுக்கும் நடுவே உள்ள லலாட நேத்ரம் இதற்கு வித்யாஸமாக உருக்கிவிட்ட தங்கம் போன்ற சிவப்பாக இருப்பது. அது அக்னி நேத்ரம். ஈச்வரன் அந்தக் கண்ணைத் திறந்தாலே ஜ்வாலை என்று படித்திருக்கிறோமே! தீயாகச் சிவந்த நெற்றிக்கண்.

*கரு கரு என்று விழிகள் மற்ற இரண்டில் ஓடினாலும் இந்த இட-வல நயனங்களே சந்திர-ஸூரிய ஸ்வரூபமாகும். 'புருஷ ஸூக்த'த்தில் மாத்திரம் பரமபுருஷனின் மனஸிலிருந்து சந்திரனும், கண்ணிலிருந்து ஸூர்யனும் (ஸூர்யன் மட்டுந்தான்), வாயிலிருந்து அக்னியும் உண்டானதாகச் சொல்லியிருந்தாலும், மீதி எல்லா சாஸ்திர-புராணங்களிலும் பரமாத்மாவின் வலது கண்-ஸூரியன், இடது கண்-சந்திரன், லலாட நேத்ரம் - அக்னி என்றுதான் வருகிறது.*

*ஸூர்யன் உள்ளபோது பகல் வேளை உண்டாகிறது. இதைத்தான் (இந்த ச்லோகத்தின்) முதல் வரியில் 'உன் வலது கண்-''தவ ஸவ்யம் நயனம்''- (போன ச்லோகத்தின் சொன்ன ''ஸவ்யம்'' என்ற வார்த்தையே இங்கே 'வலது' என்பதற்கு வந்திருக்கிறது) ஸூர்யனாக இருக்கும் தன்மையால் ('அர்க' - ஸூர்யன்; 'ஆத்மகதயா' - அவனுடைய தன்மையைக் கொண்டிருப்பதால்): 'அஹ:' - பகலை; 'ஸூதே' - பிறப்பிக்கிறது' என்று சொல்லியிருக்கிறது. 'அஹஸ்' என்றால் பகல்,* day time. *'அஹர்நிசம்', 'அஹோராத்ரம்' என்றால் 'பகலிரவு பூராவும்' என்று அர்த்தம். ''உன் வலது நயனம் ஸூர்யாத்மகமாக இருப்பதால் பகலைப் பிறப்பிக்கிறது.''*

*இரண்டாம் வரியில் 'தே வாமம்' என்பதோடும் 'நயனம்' என்பதைத் தருவித்துக் கொண்டு 'உன்னுடைய இடது நயனம்' என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். அது. 'ரஜநீ-நாயகதயா'': ரஜனி என்கிற இரவுக்கு நாயகனான சந்திரனாக இருக்கும் தன்மையால்': ''த்ரியாமாம் ஸ்ருஜதி'': 'இரவை ஸ்ருஷ்டிக்கிறது'. ஒரு நாளுக்கு எட்டு யாமம். 'எட்டு ஜாமம்' என்பது இதைத்தான். அதிலே பகல், உஷ:காலம், ஸந்த்யாகாலம் போக நல்ல இருட்டு வேளையாக இருப்பது மூன்று யாமங்கள் - ஒன்பது மணிநேரம்தான். அதனால் ராத்ரி வேளைக்கு 'த்ரி-யாமா' என்று பேர். 'உன் இடது நயனம் சந்திராத்மகமாக இருப்பதால் இரவைப் பிறப்பிக்கிறது.'' இரவிலே சந்திரனுக்குத்தானே ஆட்சி?*

*''த்ருதீயா தே த்ருஷ்டி:'' - 'மூன்றாவதாக உனக்கு உள்ள நேத்ரம்', இடது, வலது தவிர நெற்றிக்குக் குறுக்கே இருக்கிறதே, அந்த நேத்ரம் - அது எப்படி இருக்கிறது? ''தர தளித'' - 'இப்போதுதான் கொஞ்சம் கொஞ்சமாக வாயைத் திறந்து மலர்ந்து கொண்டிருக்கிற பூவின் அழகோடு இருக்கிறது'. அதற்கு வேறென்ன விசேஷ லக்ஷணம்? ''ஹேமாம்புஜ ருசி:'' - செம்பொற்றாமரை போல் ஜ்வலிக்கிறது. ஹேம அம்புஜம் - பொன் தாமரை. மீநாக்ஷி ஆலயத்தில் பொற்றாமரைக்குளம் இருக்கிறது. ஸ்வர்ணபுஷ்கரணி', என்று அதைச் சொல்வார்கள். அம்பாளுடைய லலாட நயனமே பொற்றாமரையாகத் தானிருக்கிறது. 'மூஸா கோல்ட்' என்கிற மஞ்சள் பொன் அல்ல; நல்ல ரோஸ் மெருகு ஏற்றிய ஸவரனான செம்பொன்!*

*பரமாத்மாவின் வல-இடக் கண்கள் முறையே பகல் வேளை, ரா வேளைகளை உண்டு பண்ணுவதாகப் பலபேர் சொல்லியிருக்கிறார்கள். நம் ஆசார்யாள் அதோடு புதிதாக ஒன்று சொல்லியாக வேண்டுமே! மற்றவர்கள் லலாட நேத்ரததுக்கு ஒரு வேளையும் சொல்லாமல் விட்டு விட்டார்கள். அதைத்தான் ஆசார்யாள் நூதனமாகச் சொல்லிவிடுகிறார்.*

*இந்தச் சிவந்த நெற்றிக் கண்ணானது, ''திவஸ நிசயோ:'' - பகலுக்கும் இரவுக்கும்:' ''அந்தர சரீம்'' - 'நடுவிலே வருவதான': ''ஸந்த்யாம்' - ஸந்தியா காலத்தை'; ''ஸமாதத்தே'' - அழகாக உண்டாக்குகிறது!*

*'திவஸம்' என்றால் பகல். ஆனால் பொதுவாகவே இரவை விட்டு விட்டுப் பகலுக்கு மாத்திரமேயான வார்த்தைகளான 'தினம்', 'திவஸம்', தமிழ் 'நாள்' இங்கிலீஷ்* "day' *ஆகிய எல்லாம் இரவும் சேர்ந்த ஒரு முழு நாளையே (24 மணி நேரத்தை)க் குறிப்பிடுவதாகிவிட்டன. பகலிலேதான் நமக்கு வியாபாரம், ராத்ரி ஒன்றும் தெரியாமல் தூங்கிப் போய்விடுகிறோமென்பதால் இப்படி விசேஷம் ஏற்பட்டிருக்கிறது. 'தெவசம்' என்கிறோமே அது 'திவஸம்'தான்; பித்ருக்களுக்கான 'தினம்' என்று அர்த்தம்.*

*பகலையும் ராவையும் சொல்லிவிட்டு ஸந்த்யா காலத்தை விடலாமா? பகலிலும் மரணம் கூடாது, ராவிலும் கூடாது' என்று வரம் கேட்ட ஹிரண்யகசிபுவை 'ஸந்த்யா காலம்' என்று ஒன்று இருப்பதை ஸாமர்த்தியமாகப் பிரயோஜனப்படுத்திக்கொண்டுதானே பகவான் தீர்த்துக் கட்டினான்? ரா முடிந்து பகல் வருமுன் ஒரு ஸந்தி, பகல் முடிந்து ரா வருமுன் ஒரு ஸந்தி என்று இரண்டு முறை வருகிற இந்த 'ப்ராதஸ் ஸந்த்யா', 'ஸாயம் ஸந்த்யா' காலங்கள்தானே இயற்கையாகவே மனஸைப் பரமாத்மாவிடம் லயிக்கப் பண்ணுகின்றன? ''ஸந்த்யா வந்தனம்'' தானே நம்முடைய மதாநுஷ்டானங்களுக்கு* back-bone *-ஆக இருக்கிறது? அந்த காலத்தை விடலாமா? அம்பாளுடைய வலது, இடது நேத்ரங்கள் பகலையும் இரவையும் உண்டாக்கினால் இந்த நேத்திரங்களுக்கு மத்தியிலுள்ள நெற்றிக்கண் இந்த இரண்டு வேளைகளுக்கு மத்தியில் உள்ள ஸந்த்யா காலத்தை ஸ்ருஷ்டிக்கத்தானே வேண்டும்? அந்தி-ஸந்தி ஆகாசத்தின் சிவப்பு மாதிரியே நெற்றிக் கண்ணின் கலரும் பொற்சிகப்பாக இருப்பதால் அதுதான் ஸந்தியா காலத்தைப் பிறப்பிக்கிறது என்பதில் ஸந்தேஹமில்லை.*

*அம்பாள் கால ஸ்வரூபிணி என்பதை இந்த ச்லோகத்தில் அவள் கண்களைக் கொண்டே விளக்கியிருக்கிறார்.*

*ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பொழுதை ஸ்ருஷ்டிப்பதோடு அம்பாளுடைய கண்கள் நின்றுவிடவில்லை. லோகத்தின் ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரங்களைச் செய்யும் திரிமூர்த்திகளையே அவைதான் ஸ்ருஷ்டிக்கின்றன என்று இன்னொரு ச்லோகத்தில் (ச்லோ-53) சொல்கிறார். அங்கே சிவப்புக் கண் என்று ஒன்றைத் தனியே பிரிக்காமல், எல்லாக் கண்களிலும் பொதுவாக உள்ள செவ்வரிகள், வெள்ளை விழி, கறுப்பு விழி என்கிறவைகளின் மூன்று வர்ணங்கள் முறையே ரஜஸ், ஸத்வம், தமஸ் என்ற மூன்று குணங்களுக்கு ஆச்ரயமாக இருப்பதாகவும், இவற்றிலிருந்தே பிரளயத்துக்குப் பிற்பாடு மறுபடி பிரபஞ்ச வியாபாரம் ஏற்படுவதற்காக அவள் ரஜோமய பிரம்மா, ஸத்வப் பிரதானமான விஷ்ணு, தமோ மூர்த்தியான ருத்ரன் மூவரையும் படைத்து, அவர்களால் படைப்பு, காப்பு, அழிப்பு முதலியவற்றைச் செய்வதாகவும் சொல்கிறார்.*

*இங்கே அழிப்பு வேலையைச் சொன்னாலும் இன்னோரிடத்தில் (ச்லோ-55) ஸாக்ஷாத் தாயாக இருக்கப்பட்ட அம்பாள் ஸம்ஹாரத்தை, பிரளயத்தை உண்டாக்குவதாகச் சொல்வதா என்று அவருக்குத் தோன்றி விடுகிறது. அதனால், ''நீ*

*கண்ணை மூடினால் லோகம் அழியும்; திறந்தால் மறுபடி உதயமாகிவிடும். இப்போது உதயமாயுள்ள லோகம் அழியக்கூடாது என்று உன் தாயுள்ளம் நினைக்கிறது. அதனால் நீ கண்ணைக் கொட்டாமலே இருக்கிறாய்'' என்கிறார். தேவர்கள் கண் கொட்ட மாட்டார்கள் என்பது ப்ரஸித்தம். நளன் மாதிரியே இந்த்ரன் முதலான தேவர்கள் வேஷம் போட்டுக்கொண்டு ஸ்வயம்வரத்துக்கு வந்தபோது, நிஜ நளன் மட்டும் கண்ணைக் கொட்டியதாலும், அவன் கால் மட்டும் பூமியில் பட்டதாலுந்தான் தமயந்தி அவனை அடையாளம் கண்டு கொண்டு மாலைபோட்டாள் என்று கதை! அம்பாளுக்கு இமைக் கொட்டு இல்லாததற்குக் காரணம், ''கொட்டினா, லோகம் அழிந்துவிடுமே!'' என்று அவள் நினைப்பதுதான் என்று ஆசார்யாள் ரொம்பவும் அழகாக, மாத்ரு ஹ்ருதயத்தை ரஸித்துச் சொல்கிறார்.*

*முக்குண ஆச்ரயமாக அம்பாளின் கண்களில் உள்ள மூன்று வர்ணங்களைப் பற்றி இன்னொரு விதமாக வேறே ஒரு ச்லோகத்தில் (ச்லோ-54) வர்ணனை செய்கிறார். கங்கை வெளுப்பான நதி. வெள்ளை சிவனின் முடியிலிருந்து வருகிற வெள்ளை நதி! யமுனை கறுப்பான நதி. 'காளம்' என்றால் கறுப்பு - 'காளமேகம்' என்கிற மாதிரி. யமுனைக்குக் காளிந்தி என்று பெயர். கிருஷ்ண ஸம்பந்தம் உள்ளது அது. 'கிருஷ்ணன்' என்றால் 'கருப்பன்' என்றே அர்த்தம். இந்த இரண்டோடு ஸரஸ்வதி என்பதாகக் கண்ணுக்குத் தெரியாமல் அந்தர்வாஹினியாக* - under-ground current -*ஆக - ஒரு நதி சேர்ந்து பிரயாகையில் 'த்ரிவேணி' என்கிறோம். ஆசார்யாள் ஸரஸ்வதியை விட்டு விட்டு சோணா என்ற நதியைச் சேர்த்துக் கொள்கிறார். காரணம் அதுதான் சிவப்பு நதியாக இருப்பது. 'சோணம்' என்றாலே சிவப்பு. அருணச் சிவப்புக்கு சோணம் என்றும் பெயர். கங்கை-சிவன், யமுனை-விஷ்ணு, என்றால் சோணம்-அம்பாள் என்று சொல்லலாம். அம்பாளின் செல்லப் பிள்ளை விக்நேச்வரன். சோணா நதியில் விக்நேச்வர ஸ்வரூபமான சிவப்பு சோண பத்ரக்கல் கிடைக்கிறது. 'ஸோன' என்று சொல்கிற இந்த சோணா நதியில் நானே முழுகி நிறைய சோணபத்ரம் எடுத்திருக்கிறேன். அம்பாளின் கண்ணில் வெள்ளை முழி, கறுப்பு முழி, செவ்வரி என்று மூன்று இருப்பது கங்கை, யமுனை, சோணை என்கிற மூன்று புண்ய நீர்த்தங்களின் ஸங்கமமாயிருக்கிறது. அதனால் பாபமே இல்லாமல் ''அநக''மாக இருக்கிறது. ('அகம்'பாபம்; 'அநகம்'-பாபமே இல்லாத பரம நிர்மலம்.) இப்படிப்பட்ட ஸங்கமத்தைக் கொண்டதான அம்பாளின் திருஷ்டி நம் பாபத்தைப் போக்கி நம்மை பவித்ரப்படுத்தட்டும் என்று வேண்டிக் கொள்கிறார். ''பவித்ரீ கர்தும் ந:'' என்று இங்கேயும் வழக்கம் போல ந:'' போட்டு, 'நம்மைப் பவித்ரமாகட்டும்' என்று எல்லாருக்காகவும்* universal prayer -*ஆகப் பண்ணுகிறார் பரம பவித்ரரான நம்முடைய ஆசார்யாள்.*

## நேத்ரமும் க்ஷேத்ரமும்

*''க்ஷேத்திரக் கோவை'' என்று பல ஸ்தலங்களின் பேர்களைக் கோத்து அப்பர் ஸ்வாமிகள் ஒரு திருத்தாண்டகம் அருளியிருக்கிறார். அந்த மாதிரி, அதோடு 'இருசொல் அலங்கார'மும் சேர்த்து ஆசார்யாளும் நம்முடைய ஸ்தோத்ரத்திலே பண்ணியிருக்கிறார். (ச்லோ-49)*

**விசாலா, கல்யாணீ, ஸ்புடருசிரயோத்யா (ஸ்புடருசி: அயோத்யா) குவலயை:**
**க்ருபாதாரா (ஆ)தாரா, கிமபி மதுரா, போகவதிகா।**
**அவந்தீ த்ருஷ்டிஸ்-தே பஹு-நகர-விஸ்தார விஜயா**
**த்ருவம் தத்-தந்-நாம-வ்யவஹரண-யோக்யா விஜயதே ॥ 49**

*(தே) உனது (த்ருஷ்டி) பார்வை (விசாலா) விசாலமாகவும் (கல்யாணீ) மங்களமாகவும், (ஸ்புட ருசி:) விளக்கமுற்ற ஒளியழகில் (குவலயை:) குவளை மலரால் (அயோத்யா) வெல்லவொண்ணாததாகவும், (க்ருபாதாரா ஆதாரா) அருள்தாரைக்கு ஆதாரமாகவும், (கிமபி மதுரா) வர்ணிக்கவொண்ணா இனிமையுள்ளதாகவும், (போக வதிகா) இன்பமாக அநுபவிக்கத்தக்கதாகவும், (அவந்தீ) ரக்ஷிப்பதாகவும், (பஹு நகர விஸ்தார விஜயா) பல பட்டணங்களில் பரப்பப்பட்ட வெற்றியை உடையதாகவும் (தத் தத் நாம வ்யவஹரண யோக்யா) அந்தப் பட்டணங்கள் ஒவ்வொன்றின் பெயராலும் குறிப்பிடப்படும் தகுதி வாய்ந்ததாக (விஜயதே) விளங்குகிறது. (த்ருவம்) இது திண்ணம்.)*

*இதிலே 'அயோத்யா' போஜனின் ராஜதானியான 'தாரா', 'மதுரா', 'அவந்தி' (உஜ்ஜயினியும் அதுதான்) - ஆகியவை ஊர்ப் பெயர்கள் என்று அநேகமாக எல்லாருக்கும் தெரிந்திருக்கும். 'விசாலா' என்று முதல் வார்த்தையாக வருவதும் ஒரு ஊர்ப் பெயர்தான். பதரிநாத்துக்கு அப்படியும் ஒரு பெயர். ''ஜெய் பத்ரி விசால்!'' என்றே கோஷம் போடுவார்கள். ராமாயணத்திலே விச்வாமித்ரர் ராம லக்ஷ்மணர்களோடு கங்கையைத் தாண்டின அப்புறம் மிதிலைக்குப் போகிற வழியிலே 'விசாலா' என்று ஒரு ஊர் வந்ததாக இருக்கிறது. 'கல்யாணீ' என்ற பேரிலும் ஊர் உண்டு. 'கல்யாண்' என்று பம்பாய்க்கு வடக்கே இருக்கிறது. கன்னட தேசத்தில் பீடார் ஜில்லாவில் 'கல்யாணி' என்றே இருக்கிறது. ஆசார்யாள் நாளில் குந்தள தேசமென்று பெயர் வழங்கிய அந்த ப்ரதேசத்திற்குக் கல்யாணியே தலைநகர். பிற்பாடு ஒரு காலத்தில் வாதாபிச் சாளுக்ய வம்சம் படுத்துப்போய் அப்புறம் மறுபடி தலைதூக்கினபோது 'கல்யாணி சாளுக்யன் டைனாஸ்டி' என்று இந்த ஊரிலிருந்துதான் ஆட்சி பண்ணினார்கள்.*

*'போகவதி என்பது இன்னொரு நகரம். கம்பத் என்று குஜராத்திலிருக்கிற இடத்துக்கே போகவதி என்று பேர் இருந்ததாகத் தெரிகிறது. 'காம்பே' என்று வெள்ளைக்காரர்கள் சொன்னது இந்தக் 'கம்பத்'தான். அந்தப் பக்கத்தில் அரபிக் கடலுக்கு* Gulf of Cambay *என்று பேர். ஒரு பெரிய ஸமுத்ரம் நிலப் பகுதிக்குள்ளே அரித்தெடுத்துக்கொண்டு பெருகி அந்தப் பகுதி மட்டும் தனி ஜலாசயம் (நீர் நிலை) மாதிரித் தெரியும்போது அதற்கு* gulf, bay *என்று இரண்டு விதமாகப் பேர் தந்தார்கள்.* Bay *என்பது விஸ்தாரமாக இருப்பது;* gulf *அவ்வளவு விஸ்தாரமில்லாதது.* Bay of Bangal *விஸ்தாரமாக இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் நடுவே இருக்கிறது.* Gulf of Mannar *சின்னதாக இந்தியாவுக்கும் லங்கைக்கும் நடுவே இருக்கிறது. (சிரித்து)* Gulf of Cambay *என்கிறபோது* Cambay *-ல்* "bay' *வந்தாலும் அது* gulf *-தான்! விஸ்தாரமாக, விரிவாக இருப்பதை 'விரிகுடா' என்றும், சின்னதாக ஒரு வளைசல் அரித்து முடிந்து விடுவதை 'வளைகுடா' என்றும் தமிழில் சொல்கிறார்கள். பூமிப் பிரதேசத்தை ஸமுத்ரம் 'குடைந்து'*

*ஏற்படுத்திய ஜலாசயமானதால் 'குடா' என்பது. காம்பே வளைகுடாவுக்குப் பேர் தந்து, பூர்வ காலத்தில் ப்ரஸித்தமான துறைமுகப் பட்டினமாக இருந்த 'கம்பத்'தான போகவதி என்று தெரிகிறது.*

*'விஜயா' என்றால் கன்னட தேசத்தில் பெல்லாரி ஜில்லாவிலுள்ள ஹம்பி விஜயநகரோ, தெலுங்கு தேசத்தில் ஸ்ரீகாகுளம் ஜில்லாவில் கஜபதி ராஜாக்கள் என்று ப்ரஸித்தியுடன் ஆட்சி நடத்தியவர்களின் ஸம்ஸ்தானமான விஜய நகரமோ இல்லை. வித்யாஸம் தெரிவதற்காக முன்னெல்லாம் ஹம்பி விஜயநகரத்துக்கு "Vijaya' என்றும், தெலுங்கு விஜயநகரத்திற்கு Viziya' என்றும் ஸ்பெல்லிங் போடுவார்கள். இப்போது எப்படியோ? ஹம்பி விஜயநகரந்தான் விஜய நகர ஸாம்ராஜ்யம் என்றே ப்ரஸித்தமாக இருந்த ராஜ்யத்திற்குத் தலைநகராக இருந்தது. அதற்கு ஸ்தாபித்துக் கொடுத்த வித்யாரண்ய ஸ்வாமிகள் பேரில் 'வித்யாநகரம்' என்றே புக்கராயன் பேர் வைத்ததுதான் அப்புறம் 'விஜய நகரம்' என்று மாறிவிட்டது. அந்த நகரம் ஸ்தாபிதமானது பதிநான்காம் நூற்றாண்டு மத்தியில்தான். இன்னொரு விஜயநகரம் ஆந்திராவில் சொன்னேனே, அந்த ஸம்ஸ்தானமும் ஆசார்யாளின் நாளில் இருந்ததாகத் தெரியவில்லை. அதனால் அவர் சொல்வது வேறேதோ ஆதி விஜயநகரம். குருக்ஷேத்ரமாயிருக்கலாம். கீதை முடிவிலே, ''எங்கே கிருஷ்ணனும், அர்ஜுனனும் இருக்கிறார்களோ அங்கே விஜயம் (வெற்றி) என்று வருகிறது. குருக்ஷேத்ரத்தில் தானே அவர் அவனுக்கு உபதேசித்ததும், 'விஜயன்' என்றே ஒரு பேர் படைத்த அவனுக்கு யுத்தத்தில் விஜயத்தை அநுக்ரஹித்ததும் ?*

*இப்படி எட்டு ஊர்களின் லிஸ்ட் கொடுத்திருப்பதில் - ஸாதாரண ஊர்களில்லை, ப்ரஸித்தி பெற்ற பெரிய அம்பாள் ஸம்பந்தம் என்னவென்றால்; அவளுடைய த்ருஷ்டி ஸமஸ்த ப்ரபஞ்சத்தையும் தழுவுவது. அப்போது எல்லாப் பெரிய நகரங்களின் மேலேயும் அது விழுந்து அங்கே வஸிக்கிற ஜனங்களையெல்லாம் கருணையால் வெல்கிறது. ராஜா ஆயுதத்தைக் காட்டிப் படையெடுத்துப் போய் நகரங்களை ஜயிப்பான். அம்பாளோ காருண்ய த்ருஷ்டியாலேயே நகரம் நகரமாகத் தன் ராஜ்யத்தை விஸ்தரித்துக்கொண்டு போகிறாள்! அந்த த்ருஷ்டியைத்தான் ''பஹு நகர விஸ்தார விஜயா'' என்கிறார். அப்படி அநேக நகரங்களை - பஹு நகரங்களை - வெற்றி கொண்டாலும் அதில் எட்டில் அவளுடைய த்ருஷ்டி விசேஷம் கூடுதலாக ஏற்பட்டு அந்த எட்டும் ரொம்பவும் சிறப்புப் பெற்றிருந்திருக்கின்றன. அவற்றின் பேர்களைத்தான் ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார். இதிலே விசேஷம் என்னவென்றால் அந்த ஊர்களின் பெயருக்கு என்ன அர்த்தமோ அது அம்பாளுடைய த்ருஷ்டிக்கும் பொருந்தும் ஒரு லக்ஷணமாக இருக்கிறது. அப்படி இரு சொல்லலங்காரம் காட்டி இந்த ச்லோகத்தைச் செய்திருக்கிறார்.*

*'விசாலா', 'கல்யாணி', 'அயோத்யா' என்ற அந்த எட்டுப் பெயர்களையும் த்ருஷ்டியோடு சேர்த்து விசால த்ருஷ்டி என்றாலென்ன, கல்யாண த்ருஷ்டி என்றாலென்ன என்றெல்லாம் பாஷ்யங்களில் அக்யூரேட்டாக டெஃபனிஷன் (திட்ட வட்டமான லக்ஷணை) கொடுத்திருக்கிறது. இப்போது ஞாபகத்திலில்லை. அதனால் ஜெனரலாகத் தெரியும் அர்த்தப்படியே சொல்கிறேன்.*

*அம்பாளுடைய த்ருஷ்டி பரந்து விரிந்து இருப்பதால் 'விசாலா' லோக கல்யாணத்தை உண்டாக்குவதால் 'கல்யாணி'. 'அயோத்யா' என்றால். 'யுத்தத்தில்' வெல்ல முடியாதது' என்று அர்த்தம். இக்ஷ்வாகு வம்ச ராஜாக்கள் அதை சத்ரு எவரும் யுத்தம் பண்ணி வெல்ல முடியாதபடி அவ்வளவு பாதுகாப்பாகவும் ஸ்ட்ராங்காகவும் கோட்டை கொத்தளங்களோடு கட்டியிருந்தார்கள். அல்லது, 'முதலுக்கே எந்த சத்ரு ராஜாவும் அதைப் பிடிக்கத் துணிந்து வந்ததில்லை; ஆகையால் யுத்தம் என்றால் என்னவென்றே தெரியாத 'அயோத்யா'வாக அது இருந்தது' என்றும் சொல்லலாம். இந்தப் பேரை எப்படி அம்பாளுடைய த்ருஷ்டியோடு பொருத்தியிருக்கிறாரென்றால்; த்ருஷ்டி நேத்ரத்திலிருந்து உண்டாவதால் அதையே நேத்ரமாகச் சொல்வதுண்டு. ஸாதாரணமாக 'குவளைக் கண்கள்' 'குவளையை ஒத்த கண்கள்' என்பதாக நேத்ரத்தை குவளை மலருக்கு ஸமமாக ஒப்புவமை சொல்லுவார்கள். இதில் உபமானத்தை உபமேயத்தால் மட்டந்தட்டி 'குவளையைப் பழிக்கும் கண் என்றும் சொல்வதுண்டு. மூன்றாவது, இன்னொன்றும்,* aggressive *-ஆகவே - 'வன்முறை' என்கிறார்களே, அப்படி - சொல்வதுண்டு: 'குவளையை வெல்லும் கண்கள் என்பதாக! இதையே இங்கே ஆசார்யாள் 'குவளையால் வெல்ல முடியாத கண்கள் என்று சொல்லி 'வெல்ல முடியாத' என்பதற்கு ''அயோத்யா'' என்று போட்டிருக்கிறார்: 'அயோத்யா குவலயை:'*

*அம்பாளுடைய த்ருஷ்டியே க்ருபா வர்ஷத்திற்கு ஆதாரமாக இருப்பதால் ''க்ருபா - தாரா ஆதாரா'' என்று சொல்லி தாரா நகரத்தின் பேரை ஒட்டிக்கு இரட்டியாகத் திருப்பியிருக்கிறார். ஒட்டிக்கிரட்டியாக வாரிக் கொடுத்த போஜனுடைய ஊரல்லவா? தாரை தாரையாக க்ருபை கிடைக்கட்டும் என்கிற மாதிரி வார்த்தை விழுந்திருக்கிறது.*

*அம்பாள் மாதுர்யமே ஸ்வரூபம் அவளுடைய த்ருஷ்டி எத்தனை மதுரமாயிருக்கும்? அதனால் அது 'மதுரை'யாகிறது. வட மதுரையை* Mathura *என்று* tha *-காரமாகவே சொல்வது. 'தமிழ் மதுரை' என்று நாம் பெருமை கொள்ளும்படியாக இருக்கும் பாண்டிய ராஜதானியைத் தான்* Madhurai *என்று* dha *போட்டுச் சொல்வது. மீநாம்பிகையின் நித்ய ஸாந்நித்யமுள்ள இந்த 'நம்முடைய மதுரை.' ('நம்மோட' என்று நடு மார்பை அழுத்திக் கொண்டு குழந்தைப் பெருமிதத்துடன் சொல்லியிருப்பதாக வைத்துக் கொள்ளலாம்).*

*போகவதி என்பது ப்ரயாகையில் ஒரு இடமென்று சொல்கிறார்கள். பெரிய ஊர்களான 'நகர'ங்களைப் பற்றியே ஆசார்யாள் இங்கே சொல்வதால் அவர் சொல்லும் 'போகவதி' ப்ரயாகையின் ஒரு பகுதி மட்டுமேயான இடமாக இருப்பதற்கில்லை. பாதாள லோகத்தின் ராஜதானி, அங்கே பாய்கிற கங்கை இரண்டிற்குமே போகவதி என்ற பெயருண்டு. பூலோகத்தில் மட்டுமில்லாமல் தேவலோகம், பாதாள லோகம் ஆகியவற்றிலும் கங்கை பாய்கிறது. தேவ லோகத்தில் அதற்கு மந்தாகினி என்றும், பூலோகத்தில் பாகீரதி என்றும், பாதாளத்தில் போகவதி என்றும் பேர். ஆனால் ஆசார்யாள் இந்த ச்லோகத்தில் பூலோகத்து நகரங்களையே சொல்வதால் பாதாள கங்கையையோ, அந்த ராஜதானியையோ இங்கே பொருள் கொள்வதற்கில்லை. அவர் சொல்லும் போகவதீ தற்போது அந்தப் பெயர் போய்விட்ட கம்பத் க்ஷேத்ரமாவேயிருக்கணும்.*

*அந்தப் பேர் திருஷ்டிக்கு எப்படிப் பொருந்துகிறது? 'போகவதி' என்றால் 'அநுபோகத்திற்கு உரியது' என்று அர்த்தம். அம்பாள் த்ருஷ்டி மட்டும் நம் மேலே பட்டு விட்டால் அதைவிட அநுபவத்திற்கு உரிய பேரின்பமாக ஒன்று இருக்க முடியுமா? அதனால் அது 'போகவதீ' தான்! ஈச்வரனுக்கு போகம் தருவது என்பதாலும் போகவதி.*

*'அவந்தீ' என்றால் ரக்ஷிப்பதாக இருப்பது. 'மாமவ', 'மாமவ' என்று கீர்த்தனங்களில் வருகிறதே அது, 'மாமவ'மாம்+அவ'; என்னை ரக்ஷி' என்று அர்த்தம். 'அவ' என்றால் 'ரக்ஷி''. 'அவநம்' என்றால் ரக்ஷணம். 'அவந்தீ'- ரக்ஷிப்பது. அம்பாளுடைய த்ருஷ்டி பெரிய ரக்ஷையானதால் அவந்தீ! உஜ்ஜயினி என்கிற விக்ரமாதித்ய பட்டணத்திற்கே அவந்தி என்றும் பெயர். ராஜ்யம், ராஜதானி இரண்டிற்குமே அவந்தி என்று பேர் இருந்து, அப்புறம் குழறுபடி இல்லாமலிருப்பதற்காக ராஜ்யத்தை அவந்தி என்றும் ராஜதானியை உஜ்ஜயினி என்றும் வைத்துக் கொண்டார்கள் என்றும் சொல்கிறார்கள். இந்த அவந்தி உஜ்ஜயினிக்கேகூட 'விசாலா' என்ற பேரும் இருந்திருக்கிறது.*

*அயோத்யா, மதுரா (வட மதுரை என்ற வைத்துக் கொண்டால்), அவந்தி ஆகிய மூன்றும் ஸப்த மோக்ஷ புரிகளிலேயே இருப்பவை. விஜயா என்ற ஊரைப் பற்றி முன்னேயே சொன்னேன். நகரம் நகரமாக திக்விஜயம் செய்வதால் அம்பாளுடைய த்ருஷ்டி விஜயாவாக இருக்கிறது: பஹு நகர விஸ்தார விஜயா''.*

*லோகத்திலுள்ள அத்தனை நகரங்களிலுமே அவள் த்ருஷ்டி பட்டாலும் ச்லோகத்தில் சொன்ன எட்டுக்குத் தான் அந்த த்ருஷ்டிக்குள்ள விசாலம், கல்யாணம் முதலிய குணங்களே பெயராக அமையும் பெருமை இருக்கிறது. கவியழகை முன்னிட்டு இதையே மாற்றி, இந்த நகரங்களின் பெயராலேயே குறிப்பிடத்தக்க யோக்யதை அந்த த்ருஷ்டிக்கு இருப்பதாகச் சொல்லி முடிந்திருக்கிறார்: 'தத் தத் நாம வ்யவஹரண யோக்யா விஜயதே''- 'எந்தெந்த நகரங்கள் த்ருஷ்டியின் விஸ்தார திக்விஜயத்தில் வந்தனவோ அதன் பெயரிலும் வியவஹரிக்கத்தக்க தகுதியைப் பெற்றதாக அந்த த்ருஷ்டி விளங்குகிறது' என்று அர்த்தம்.*

*'நயனம்' என்றால் 'அழைத்துப் போவது' கண் வழி காட்டி அழைத்துப் போவதால்தான் நாம் நடக்க முடிகிறது. அதாவது அதுதான் நம் 'லீடர்'! 'நாயகன்' என்று லீடரைச் சொல்வது 'நய' ஸம்பந்தப்பட்டதுதான். 'நேதா' என்றாலும் அப்படி முன்னின்று, முன் சென்று வழிகாட்டுகிறவன். 'நேதாஜி போஸ்' என்கிறார்களல்லவா? 'நேத்ர'மும் 'நேதா'வும் 'நயன'மும் 'நாயக'னும் மாதிரிப் பரஸ்பர ஸம்பந்தமுடையவை. நம்மை ச்ரேயோ மார்க்கத்தில் லீடராக அழைத்துப்போகிற அம்பாளுடைய நேத்ரத்தைத் துணையாகக் கொண்டே - விழிக்கே துணையுண்டு'' என்று 'அபிராமி' அந்தாதி'யிலும் அழுத்திச் சொல்லியிருக்கிறதே: அப்படி நேத்ரத்தைத் துணைகொண்டே - தேசம் பூரா ஒரு க்ஷேத்ராடனம் இந்த ச்லோகத்தின் மூலம் ஆசார்யாள் பண்ணி வைத்து விடுகிறார். நேத்ர விசேஷத்தோடு க்ஷேத்ரப் பேரைப் பொருத்திக் காட்டும் கவித்வ விசேஷம்!*

## கவிதை விரும்பும் கண்கள்

*கவிதையோடேயே அம்பாளுடைய நேத்ரங்களை நேராக ஸம்பந்தப்படுத்தி அடுத்த ச்லோகத்தை (50) செய்திருக்கிறார்.*

**கவீநாம் ஸந்தர்ப-ஸ்தபக-மகரந்தைக-ரஸிகம்**
**கடாக்ஷ-வ்யாக்ஷேப-ப்ரமர-களபௌ கர்ணயுகளம் ।**
**அமுஞ்சந்தௌ த்ருஷ்ட்வா தவ நவ-ரஸாஸ்வாத-தரளௌ**
**அஸூயா ஸம்ஸர்காத் அலிக-நயநம் கிஞ்சித் அருணம் ॥ 50**

*(கவீநாம்) கவிகளுடைய (ஸந்தர்ப ஸ்தபக) ஸாஹித்யப் பூங்கொத்தின் (மகரந்த ஏக ரஸிகம்) தேன் ஒன்றையே சுவைக்கின்ற (தவ) உனது (கர்ண யுகளம்) இருகாதுகளையும் (அமுஞ்சந்தௌ) விடாமல் பற்றிக்கொண்டு (நவ ரஸ ஆஸ்வாத தரளௌ) நவரஸங்களையும் ருசிப்பதற்குத் துடிக்கிற (கடாக்ஷ வ்யாக்ஷேப ப்ரமர களபௌ) கடாக்ஷம் என்ற வியாஜத்தில் (அக் காதுகளைப் போய்ப் பற்றிக் கொள்ளும்) குட்டி வண்டுகளைப் (அஸூயா ஸம்ஸர்காத்) அஸூயையுடன் நன்கு கூடியதாக ஆன (அலிக நயநம்) நெற்றிக் கண் (கிஞ்சித் அருணம்) சிவப்புச் சாயல் (பெற்றிருக்கிறது).*

*''அஸூயா ஸம்ஸர்காத்'' என்று என்னவோ சொல்கிறாரே, யாருக்கு அஸூயை, எதனிடம் அஸூயை? ஸாக்ஷாத் பராசக்தி ஸந்நிதியில் அஸூயை எங்கே வந்தது?''*

*அதுவா? அவளுடைய கண்களுக்குள்ளேயேதான் ஒன்றுக்கு மற்ற இரண்டிடம் அஸூயை! ''அலிகம்'' என்றால் நெற்றி. ''அலிக நயநம்'' - நெற்றிக்கண். அதற்குத் தான் அஸூயை. அதனால் ரத்தம் ஏறிக் கொஞ்சம் சிவந்து விட்டது. ''கிஞ்சித்'' - கொஞ்சம்;'' ''அருணம்'' - சிவப்பு.*

*அந்த கண் ஏன் சிவப்பு என்று யோஜித்துக் கவிகள் சந்த்ர - ஸூர்யாக்னி லோசனையான அம்பாளுக்கு இதுவே அக்னி நேத்ரமானதால் தீ மாதிரிச் சிவந்திருக்கிறது என்று சொல்லி முடித்து விடுகிறார்கள். இது அவ்வளவு ஸரியில்லை. அது அக்னி, அதனால் சிகப்பு என்றால், வலது கண் ஸ்பெஷலாக ஸூர்யனின் sign ஏதேனும், உள்ளதாகவும் இடது கண் அதேபோல சந்திரனின் 'ஸ்பேஷல் ஸைன்' உள்ளதாகவும் இருக்கணுமே? அப்படியொன்றும் காணோமே! தஹிப்பாக தஹிக்க வேண்டிய வலது கண், நிலவாகப் பொழிய வேண்டிய இடது கண் இரண்டும் முழுக்க ஒரே போலத்தானே இருந்துகொண்டு கடாக்ஷாம்ருதத்தை வர்ஷிக்கின்றன? ஆகையால், நெற்றிக்கண் மட்டும் அக்னி ரூபகம் என்பதால் சிவப்பாயிருக்கிறது என்ற காரணத்தை ஒப்புக்கொள்ள முடியாது.*

*மற்ற ஸாமான்ய கவிகள் இதுவரை அப்படிச் சொல்லி வந்ததற்கு இங்கே ஆசார்யாள் வேறே காரணம் சொல்கிறார். என்ன சொல்கிறார்?*

*''ஆதியில் மூன்று கண்களும் ஒரே கலராகத்தான் கருங்குவளைப் புஷ்பம் போல இருந்தன. இப்போது பார்த்தால் லலாட நேத்ரம் மட்டும் சிகப்பாக மாறியிருக்கிறது! அஸூயை, பொறாமை உண்டானால் முகம் சிவக்கிறதோ இல்லியோ! அப்படி இந்த மூன்றாம் கண்ணுக்கு அஸூயை நன்றாக ஏற்பட்டுவிட்டது - அதற்கு அஸூயையுடன் ஸாதாரண ஸர்கம் (சேர்க்கை) இல்லை, 'ஸம்ஸர்கம்' - அழுத்தமான சேர்க்கை' - ஏற்பட்டுவிட்டது. அதனால்தான் சிவந்துவிட்டது'' என்கிறார்.*

''இப்படிச் சொல்லிவிட்டால் ஆச்சா? பரதேவதையின் ஞான சக்ஷுஸுக்கு (ஞானக் கண்ணுக்கு) அஸூயை ஏற்பட்டது என்றால், எதனுடன் ஏற்பட்டது, என்ன காரணத்தினால் ஏற்பட்டது என்றெல்லாம் பாயின்ட்களைக் காட்டி ப்ரூவ் பண்ணினால்தான் ஒப்புக்கொள்ள முடியும்.''

''இவ்வளவுதானே? மற்ற இரண்டு கண்களிடம்தான் இதற்கு அஸூயை. எதனால் ஏற்பட்டதென்றும் ஸுலபமாக ப்ரூவ் பண்ணிவிட முடியும்'' என்ற ச்லோகத்தைச் செய்திருக்கிறார்.

மஹாகவிகள் அம்பாளை அத்புதமாக ஸ்தோத்ரம் பண்ணுவதை அவள் செவி சாய்த்துக் கேட்கிறாள். அவள் பரம ரஸிகையாதலால் அவளுடைய காதே தனியாக ஒரு ஆக்ருதி (சரீரம்) எடுத்துக் கொண்ட மாதிரி இந்த ஸ்துதிகளின் ரஸத்தைப் பானம் பண்ணிக் கொண்டிருக்கிறது.

''கவீநாம் - கவிகளுடைய. 'ஸந்தர்ப' என்றால் பொருத்தமான சூழ்நிலை, circumstance என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். பல அம்சங்கள் ஏர்வையாகச் சேர்ந்திருப்பதுதான் 'ஸந்தர்பம்'. இடம், பொருள், ஏவல் முதலிய பல அம்சங்கள் சீராகக் கூடியிருந்தால் பொருத்தமான சூழ்நிலை உண்டாகும் என்பதால் இப்படிப் பொருள் கொள்கிறோம். ஆனால் தாறுமாறே இல்லாமல் பல அம்சங்களைப் பொருத்தமாகப் பின்னிக் கொடுக்கிற எதுவுமே 'ஸந்தர்பம்' தான். ஆனபடியால் பாத்திரங்கள், ஸம்பவங்கள், நானா பாவங்கள், கல்பனா சக்தி, வார்த்தைகள், மீட்டர் எல்லாவற்றையும் ஏர்வையாக, கோர்வையாகச் சேர்த்துச் சேர்த்துப் பின்னித் தருகிற ஸாஹித்யத்திற்கும் 'ஸந்தர்பம்' என்று பெயர். நம் ச்லோகத்தில் 'ஸந்தர்பம்' என்பது இப்படிப்பட்ட சீரான அமைப்புகொண்ட கவிதைகளைத்தான். கவிகள் இவற்றை ''ஸ்தபக''மாக நெருக்கக் கட்டிக் கொடுக்கிறார்களாம்! 'ஸ்தபகம்' என்றால் கொத்து, பூங்கொத்து. இங்கே வாக்குப் பூக்களைத் தொடுத்த கொத்து. பூங்கொத்து என்றால் அதிலிருந்து மகரந்தம் (தேன்) வரணுமே! அப்படி கவிதைப் பூங்கொத்திலிருந்து நவரஸங்கள் தேனாக வருகின்றன. அம்பாளுடைய காது என்கிற ஆஸாமிக்கு இந்தத் தேன் ஒன்றுதான் ஆஹாரம். வேறே எதையும் அவர் சாப்பிடமாட்டார் ! ''மகரந்தைகரஸிகம் - மகரந்த ஏக ரஸிகம்'' - இந்தத் தேன் ஒன்றையே ரஸித்துப் பருகுவார்.

பூர்வ பாகத்திலே சிவ சக்திகள் ஹம்ஸ தம்பதியாக அநாஹத சக்ரத்தில் இருப்பதைச் சொல்லும்போதும் இதே ''மகரந்தைக ரஸிக''த்தைப் போட்டிருக்கிறார். அவர்கள் 'ஸம்வித்' என்கிற ஞானமாகிற கமலத்தில் ஊறும் தேனை மட்டுமே ரஸித்துச் சாப்பிடுவதாக அங்கே சொல்லியிருக்கிறார்: ''ஸமுந்மீலத் ஸம்வித் கமல மகரந்தைகரஸிகம்''.

இங்கே கவி வாணர்களின் கவிதைத் தேனைக் குடித்து ஸந்தோஷப்படும் இரண்டு காதுகளைத்தான் ''கர்ண யுகளம்'' என்று சொல்லியிருப்பது. கண்ணைப் பற்றிச் சொல்கிற இடத்தில் காதுக்கு என்ன இவ்வளவு முக்யத்வம்? காரணம் இருக்கிறது.

அம்பாளுடைய வலது, இடது ஆகிய இரண்டு கண்களும் எப்படிப்பட்டவை? 'காதளவோடியவை' என்றே அவற்றை வர்ணிப்பது வழக்கம். ஸம்ஸ்கிருதத்தில் இதை 'கர்ணாந்த விச்ராந்த நேத்ரம்' என்பார்கள். பரதேவதையின் நீண்ட நீண்ட இரண்டு கண்களும் காதைப் போய்த் தொட்டு விடுகின்றன. தேன் ரொம்பியிருக்கிற ஒரு கிண்ணத்தைப் போய்த் தொட்டுவிட்டால் அப்புறம் அதைக் குடிப்பதேதானே கார்யமாகிவிடும்? அப்படி, கவித்தேன் ரொம்பியுள்ள அம்பாளின் காதுக் கிண்ணத்தைப் போய்த் தொடுகிற கண்கள் ஒரே கார்யமாக அந்த மதுபானத்திலேயே - கவிதைச் சுவையை ருசிப்பதிலேயே - முழுகிவிடுகின்றன. காதைவிட்டு நகரமாட்டேன் என்று அவை விடாமல் ஒட்டிக்கொண்டிருப்பதைத்தான் ''அமுஞ்சந்தௌ'' என்கிறார். அம்பாளுடைய வலது, இடது நேத்ரங்கள் முழிகளைக் கண்கோடிக்கே அனுப்பி அவற்றின் மூலம், காதிலே ரொம்பியிருக்கும் கவிதா மகரந்த ரஸத்தைக் குடிக்க ஆரம்பித்துவிட்டன. முழிகள் என்பதில் என்ன பொருத்தமென்றால் அவை கருவண்டுக் குட்டிகளாக இருக்கின்றன ! முழிகளாலேயே வண்டு-நாண் உண்டாவதாக முன் ச்லோகமொன்றிலேயும் சொன்னாரே! ''ப்ரமரம்'' - வண்டு. ஸ்ரீசைலத்தில் அம்பாளுக்கு 'ப்ரமராம்பிகை' என்று பெயர். 'வண்டம்மா' என்று அர்த்தம். ஏன் 'வண்டம்மா' என்றால் அங்கே. அப்பா மல்லிகைப் பூவாக இருக்கிறார் - மல்லிகார்ஜுனர்! அந்த மல்லிகையைச் சுற்றிச் சுற்றி வந்து சிவானந்தத் தேனைக் குடிக்கவே அவள் ப்ரமரமாக இருக்கிறாள். ''ப்ரமரகளபௌ'' என்பதில் ''களபம்'' என்றால் குட்டி, யுவா என்று அர்த்தம். சின்ன வயஸில்தான் ஹாவு, ஹாவு எப்பப் பார்த்தாலும் முட்ட முட்டச் சாப்பிட்டுக் கொண்டயிருக்கத் தோன்றும் கவித் தேனைக் குடிப்பதில் அப்படி ஓயாப் பசியாக அம்பாளுடைய கண்கள் இருப்பதாலேயே 'குட்டி வண்டுகள்'.

இதிலே கொஞ்சம் ஏமாற்று வித்தை அம்பாள் பண்ணுகிறாள் ! அவளுக்கு லோகத்தின் தாப-பாபங்களை சமனம் பண்ணவேண்டிய பொறுப்பு இருக்கிறது. இந்த duty -க்கு நடுவேதான் பாவாணர்களின் கவிதைச் சுவை அவளை இழுத்துக் கொண்டேயிருக்கிறது. 'ட்யூடி'யை விட்டு விட்டுப் பாட்டுக் கேட்டுக் கொண்டு உட்கார்ந்தாளானால் அவப் பெயர் உண்டாகும். என்ன செய்யலாம் என்று பார்த்து யுக்தி பண்ணுகிறாள். கொஞ்சம் ஏமாற்று வித்தைதான் பண்ணுகிறாள்! ''நாம் கடாக்ஷிப்பதாகவும் லோகத்துக்கு இருக்கட்டும். அப்போது அந்தக் கடாக்ஷாம்ருதம் தன்னாலேயே லோகத்தின் பாப தாபங்களை சமனம் பண்ணிவிடும். அதே ஸமயத்தில் நாம் 'கவிதா' ரஸ பானமும் பண்ணிவிடலாம்!'' என்று இரண்டையும் ஸாமர்த்தியமாக முடிச்சுப் போட்டு விடுகிறாள்.

''கடாக்ஷ வ்யாக்ஷேப'' - 'வ்யாக்ஷேபம்' என்றால் 'வ்யாஜம்'; சாக்குக் காட்டுவது'. 'கடாக்ஷம்' என்றால் கண்கோடி; கடைக்கண் பார்வை. நேர் பார்வையைவிட இப்படிக் கண்கோடியால் பார்ப்பதற்குத்தான் விசேஷமே! எதையுமே நேராக உடைத்துப் பண்ணுவதைவிட கொஞ்சம் மறைவாக, delicate -ஆகப் பண்ணினால் மதிப்பு ஜாஸ்தி. நேர் பார்வையைவிடக் கண்கோடியால் சாய்த்துப் பார்த்தால்தான் அழகுக்கு அழகு, அருளுக்கு அருள்! 'கடாக்ஷம்' என்றாலே அதுதான் - side-glance என்பது. தமிழிலும் 'கடைக் கண்' என்பதாகக் கண்ணின் கடைப் பாகத்தில் விழி வரும்போது பார்ப்பதைத்தான் வேண்டிக் கொள்கிறோம்.

*''நல்லதாப் போச்சு'' என்று அம்பாள் நினைக்கிறாள். ''விழி வண்டுகள் காதுக்குக் கிட்டே போய் அதைத் தொட்டால்தான் அதில் தேங்கியிருக்கிற 'கவீநாம்-ஸந்தர்ப்ப-ஸ்தபக-மகரந்த'த்தைக் குடிக்க முடியும். அதே சமயம் இப்படி அவை கண்கோடியில் உள்ள காதிடம் போவதால், தான் கடைக் கண்ணால் கடாக்ஷிப்பதாகவும் ஆகிவிட்டும். லோக ரக்ஷணையை விட்டு விட்டுக் கவிதை, பாட்டு கேட்பதாக இல்லாமல், இவற்றைக் கேட்டு ரஸாஸ்வாதம் பண்ணுவதே ரக்ஷணைக்காகக் கடாக்ஷிப்பதாகவும் ஆகிவிடும்'' என்று நினைத்து இரண்டையும் சேர்ந்து முடிச்சுப் போட்டு விடுகிறாள்!*

*கடாக்ஷம் என்ற வியாஜத்தில்* (pretext *ல் - இப்படிச் சொன்னாலே அதில் ஏமாற்றல்,* trick *இருக்கிறதென்று ஆகிறது) அம்பாள் கவிதா ரஸபானம் பண்ணுகிறாள் என்பது கவி ஸ்வாதீனத்தில் கவிதா ரஸத்திற்காக வேடிக்கையாகச் சொன்னது. வாஸ்தவத்தில், நமக்கு அவளுடைய கிருபையைத் தரும் கடாக்ஷத்தைப் பெறத் தகுதியே இல்லாதபோதுகூட, காரணமேயில்லாமல் காருண்யத்தைப் பொழிகிறாள். அவள் ''அவ்யாஜ க்ருபா கடாக்ஷி'' என்பார்கள். இங்கே அவளுடைய உயர்ந்த ரஸிகத்தன்மையைச் சொல்ல வேண்டும் என்பதுதான் நோக்கம் அதற்காக, கவிதை கேட்பதையே கடாக்ஷிப்பதாகவும் சாக்குப் போக்குக் காட்டி விடுகிறாள் என்று தமாஷ் பண்ணியிருக்கிறார்!*

*இதெல்லாம் இருக்கட்டும். த்ரிதீய நேத்ரத்தின் (மூன்றாவது கண்ணின்) அஸூயை ஸமாசாரம் என்ன?*

*வலது-இடது கண்கள்தான் காதளவு ஓடுகிறவை. அதனால் அவற்றின் விழிகள் கடாக்ஷம் என்று சாக்குக் காட்டிக் கொண்டு காதைப் போய்த் தொட்டுக் கவிதா ரஸபானம் பண்ண முடிகிறது. லலாடநேத்ரத்தின் ஸங்கதி? அது குறுக்கே* vertical *-ஆக (மேல் நோக்கியதாக) இருக்கிறது. அதன் விழி புருவமத்தியிலிருந்து ஸீமந்தம் பிரிகிற நெற்றியோரம் வரைதான் ஓட முடியும். காதுக்குப் பக்கத்தில் அது வருகிற சான்ஸே இல்லை; அது அடியோடு முடியாத காரியம்.*

*ஈச்வரபரமான இத்தனை கவிவாணர்களின் ஸ்தோத்திரங்கள் தேன் வெள்ளமாக வந்து காதிலே தேங்கியும், இட-வலக் கண்கள் வண்டுகளான விழிகளால் அவற்றைமொண்டு மொண்டு குடிக்கிறபோது, தான் மட்டும் அதிலே ஒரு சொட்டுக்கூடப் பானம் பண்ண முடியாத 'ஏப்ரேசி'யாக நிற்கிறோம் என்பதில் லலாட நேத்திரத்துக்கு மாளாத குறை! மற்ற இரண்டு கண்களிடம் அஸூயை பொங்குகிறது! இந்த அஸூயையிலே ஏற்பட்ட ஆத்திரத்தில்தான் அது சிவந்துவிட்டது!*

*''அக்னி நேத்ரமுமில்லை, ஒன்றுமில்லை; அஸூயையில்தான் அம்பாளுடைய நெற்றிக் கண் அருண நிறமாக ஆகி இருக்கிறது'' என்று இப்படி ஆசார்யாள் பாயின்ட்களைக் காட்டி ப்ரூவ் பண்ணுகிறார்.*

*''ஈச்வர பரமான'' ஸ்தோத்திரங்களைக் கேட்டு அம்பாள் ரஸிக்கிறாள் என்று நான் சொன்னது - தன் பாட்டுக்கு வாயிலே அப்படி வந்துவிட்டது! - அப்படிச் சொல்ல இந்த ச்லோகத்தில் ஆதாரமில்லை. ஆனால் பிற்பாடு (60; 66 ஆகிய) இரண்டு ச்லோகங்களில்*

*ஸரஸ்வதியின் வீணா வாதனத்தைக் கேட்டு அம்பாள் ரஸிப்பதாக வருகிறபோது அவற்றில் ஒன்றிலே (ச்லோ.66) ''விவிதம் அபதானம் பசுபதே:'' - ''பசுபதியின் விதவிதமான லீலைகளை'' ஸரஸ்வதி பாடி வீணை வாசித்தாள் என்று இருக்கிறதால், இப்படி வாயில் வந்திருக்கிறது! அது தனியாக விஸ்தரித்துச் சொல்லவேண்டிய விஷயம்.*

*ஸரஸ்வதி கானத்தை தேவி ரஸிப்பதாக வருகிற மற்ற ச்லோகம் (ச்லோ. 60) ''ஸரஸ்வத்யா: ஸூக்தீ: அம்ருதலஹரீ கௌசலஹரீ:'' என்று இரண்டு 'லஹரி'களைப் போட்டுக் கொண்டு ஆரம்பிக்கிறது. ஏற்கனவே ஆனந்தலஹரி, ஸௌந்தர்ய லஹரீ, சிதாநந்த லஹரீ, ச்ருங்கார லஹரீ என்றெல்லாம் பார்த்தோம். இங்கே இன்னும் இரண்டு லஹரி சேர்கிறதே என்றால் இதில் 'அம்ருத லஹரி'தான் லஹரி. மற்றதில் வார்த்தை விளையாட்டு* (word-play) *இருக்கிறது. அது 'கௌச லஹரி' அல்ல; ''கௌசல-ஹரீ'. 'கௌச' ஒரு வார்த்தை, 'லஹரி' ஒரு வார்த்தை என்று பிரித்தால் பிசகு. 'கௌசல' ஒரு வார்த்தை, 'ஹரி' ஒரு வார்த்தை என்று பிரிக்கவேண்டும்.*

*'அம்ருத லஹரி' என்றால் அமுதப் பெருக்கு. ஸரஸ்வதியின் ஸூக்தி என்றால் அவளுடைய மதுரவாக்கு என்று அர்த்தம். (ஸூக்தி', 'ஸூக்தம்' என்றால் 'ஸு+உக்தம்': 'அழகாகச் சொல்லப்பட்டது', நல்வாக்கு', 'இன்சொல்'. வேதத்திலுள்ள ஸ்தோத்ரங்களுக்கு ஸூக்தம் என்றே பேர்; புருஷஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம், ருத்ர ஸூக்தம், துர்காஸூக்தம் - இப்படி) ஸரஸ்வதியின் வாக்கு 'அமுதப் பெருக்கின் சிறப்பையும் அபஹரிப்பது'; அதாவது 'அமிருதத்தைவிட மதுரமானது' என்பதே 'அம்ருத-லஹரீ கௌசல-ஹரீ' என்பதன் அர்த்தம். ''கௌசல'' என்றால் 'சாதுர்யம்' அல்லது 'சிறப்பு'. 'ஹரீ' என்றால் 'அபஹரிப்பது'. முன்னே கவிகளின் ஸ்துதி மகரந்தத்தை ரஸிப்பதாகச் சொன்ன காதுகளை இங்கே ஸரஸ்வதியின் ஸூக்திகளைப் பிடித்து வைத்துக்கொள்ளும் 'சுளுக' பாத்திரம். என்கிறுர். சுளுகம் என்றுல் சின்னதான தீர்த்த பாத்திரம். இந்தச் சுளுக ரூபமான காதை இங்கேயும் ஒரு ஆஸாமியாக உருவகப்படுத்துகிறார். ஸரஸ்வதியின் பாட்டைக் கேட்டு ரஸித்து அம்பிகை சிரஃகம்பம் செய்யும் போது காதிலுள்ள குண்டலங்கள் ஜண ஜணவென்று சப்திக்கும் அல்லவா? இதைக் 'காது' என்கிற அந்த ஆஸாமி ஸரஸ்வதியை சிலாகித்துச் சொல்லும் ஆமோதன வார்த்தை என்கிறார்.*

## நயனம்:நவரஸ நிலயம்

*கவிதையின் நவரஸத்தைக் கண்கள் ஆஸ்வாதம் செய்வதைச் சொன்ன பின் அந்தக் கண்களிலேயே எப்படி நவரஸங்களும் வெவ்வேறு ஸந்தர்பங்களில் தாண்டவமாடுகின்றன என்று சொல்கிறார் (ச்லோ. 51)*

**சிவே ச்ருங்காரார்த்ரா தத்-இதர ஜநே குத்ஸந-பரா**
**ஸரோஷா கங்காயாம் கிரிச-சரிதே விஸ்மயவதீ ।**
**ஹராஹிப்யோ பீதா ஸரஸிருஹ-ஸௌபாக்ய-ஜநநீ**
**ஸகீஷு ஸ்மேரா தே மயி ஜநநி த்ருஷ்டி:ஸகருணா ॥ 51**

*கண்ணில்தான் எல்லா ரஸமும் தெரியும்; ஸகல உணர்ச்சிகளையும் பிரதிபலிப்பது அதுதான். காதால் ஒரு பாவத்தையும் காட்ட முடியாது. உதடு ஒரு தினுஸாகத் துடிப்பதிலிருந்து கோபத்தையும், இன்னொரு தினுஸில் துடிக்குமானால் துக்கத்தையும், சிரிப்பிலே நெளிந்தால் ஸந்தோஷத்தையும் தெரிந்து கொள்ளலாம். மூக்கை உறிஞ்சினால் துக்கம் மட்டும் தெரியும். ஸகல பாவங்களையும் தெரிவிப்பது கண்தான். காமமா, கருண ரஸமா, கோபமா, வீரமா, அஸூயையா, அருவருப்பா, பயமா, சாந்தமா? - அத்தனைக்கும் மனஸின் கண்ணாடியாக வெளியில் பாவத்தைக் காட்டுவது கண். நாடக நவரஸங்களில் 'சோகம்' என்ற அர்த்தத்தில் வரும் கருண ரஸம் மட்டுமில்லாமல், பகவானுடைய, அம்பாளுடைய கருணை இருக்கிறதே, அந்த அருளையும் கருணா கடாக்ஷம் என்று விசேஷமாகக் காட்டுவது கண்தான். சைத்ரிகன் உருவங்களைப் போடும் போது மனஸின் பாவத்தைக் காட்டக் கண்ணைத்தான் ஸரியாக கவனமாகப் போட வேண்டும். கொஞ்சம் முழியை மாற்றி விட்டால் பாவமே மாறிவிடும். அதே மாதிரிதான் நாட்யமாடுகிற நடி, நடிகன் ஆகியவர்களும் கண்கள் எப்படி எந்த பாவத்திற்கு இருக்கணுமோ, அதையே முக்யமாக கவனித்து அபிநயிக்கணும்.*

*இங்கே, இந்த லோக நாடகத்தையெல்லாம் பண்ணுகிற ஸாக்ஷாத் பராசக்தியின் கண்களில் நவரஸமும் கொட்டுவதைச் சொல்கிறார்.*

*சிருங்கார ரஸம் அதில் எப்போது நிறைகிறது ? எவருக்கும் தெரியக் கூடியதுதான். - பரமேச்வரனிடத்தில் தான் அம்பாளுக்கு சிருங்காரம்: சிவே ச்ருங்காரார்த்ரா.*

*'ஆர்த்ரா' என்றால் 'நனைந்தவள்'. சிவன் விஷயமாக சிருங்கார ரஸத்தில் ஊறி நனைந்தவள் ''சிவே ச்ருங்கார ஆர்த்ரா''. ஸ்படிக வெளுப்பான அவரைத் தன் அருண காந்தியில் முழுக்கி அவரையே ச்ருங்கார ரஸத்துக்கு மூர்த்தியாக்கி விட்டாள் என்றும் இன்னோரிடத்தில் (ச்லோ-92) சொல்லியிருக்கிறார்.*

*ஒன்றைக் கண்டவுடன் விரும்பிச் சேர்த்துக் கொள்வது சிருங்காரம். இதற்கு நேர் எதிர், ஒன்றைப் பார்த்த மாத்திரத்தில் அருவருத்து விலகுவது. சிருங்காரத்துக்கு* opposite *கோபத்தில் பிறக்கும் ரௌத்ரம் அல்ல. கோபிப்பதற்குக் காரணமுண்டு. ச்ருங்காரத்துக்குக் காரணம் இல்லை. ''காதலுக்குக் கண்ணில்லை'' என்கிறார்கள். இதே மாதிரி, காரணம் இல்லாமலே ஏற்படுவது அருவருப்புதான். ஒரு மரவட்டையைப் பார்த்தவுடன் எங்கேயோ போகிறது என்றாலுங்கூட காரணமேயில்லாமல் உடம்பு கூசுகிறதல்லவா? இதுதான் சிருங்காரத்துக்கு எதிர். இதற்கு 'பீபத்ஸ ரஸம்' என்று பெயர்.*

*''சீ!'' என்ற அருவருத்துத் தள்ளவேண்டிய அசிங்க குணங்கள் நிறைந்த நம்மையும் தாயாகக் கிட்டச் சேர்த்துக் கொள்ளும் அம்பாளுக்கும் பீபத்ஸம் உண்டா? உண்டு. ஒரே ஒரு ஸந்தர்பத்தில் உண்டு. ஈச்வரனுக்கு அந்நியமான மற்ற புருஷர்கள் குழந்தைகளாக அவளிடம் வராமல் வேறே தினுஸில் வந்தால் அவளுக்கு அருவருப்புத் தாங்காது. அப்போது அவள் கண்களில் பீபத்ஸம் தெறிக்கும். அந்த சிவனே இவளை சோதிப்பதற்காக வேறே வேஷம் போட்டுக் கொண்டு வந்து சிவ நிந்தை பண்ணினபோது அம்பாளுக்கு ஏற்பட்ட பீபத்ஸத்தைக் காளிதாஸன் குமார ஸம்பவத்தில் ரஸமாக வர்ணித்திருக்கிறார்.*

*தத் இதர ஜநே குத்ஸந-பரா- ''தத்-இதர'': அந்த சிவனைத் தவிர இதரமான; 'ஜநே'' ஸகல ஜனங்களிடமும்; ''குத்ஸன-பரா'': அருவருப்புக் கொண்டவள். 'குத்ஸனம்' என்பது பீபத்ஸத்தைக் குறிக்கிறது. இம்மாதிரி ஸந்தர்பத்தில் பீபத்ஸம் தொனிக்கப் பார்ப்பாள் - அல்லது பார்வையை மூடிக் கொள்வதாலேயே ரஸத்தைத் தெரிவித்துவிடுவாள்!*

*அம்பாள் கண்ணில் ரௌத்ரம் (கடும் கோபம்) என்ற ரஸம் எப்போது தெரியும்?*

**ஸரோஷா கங்காயாம்**

*ரோஷமும் ரௌத்ரமும் ஒன்றுதான். இன்னொரு ஸ்திரீயை - கங்கையை - ஈச்வரன் தலைக்கு மேல் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறானே! அவளைப் பார்த்தால் தான் இவளுக்கு ரோஷம் - ரௌத்ரம் - பொங்குகிறது. சக்களத்திக் காய்ச்சல்! ('களத்ரம்'என்றால் பெண்டாட்டி 'ஸகளத்ரி' - இன்னொரு பெண்டாட்டி 'ஸகளத்ரி'தான் 'சக்களத்தி'யாகி விட்டது) தனக்கு உடம்பிலே இடது பாதியை மட்டும் கொடுத்துவிட்டு, கங்கையைத் தலையிலேயே வைத்துத் தாங்குகிறானே பதி! இதற்காகப் பதியிடம் கோபம் வரவில்லை. பதிவ்ரதை அல்லவா? கங்கை மேல்தான் கோபம் பொங்குகிறது! மநுஷ்ய பாவத்தில் அம்பாளை வைத்துச் சொல்லி இருக்கிறது!*

*அத்புதம் என்பது ஒரு ரஸம் அதிசயமான விஷயங்களைப் பற்றி உண்டாகிற வியப்புதான் அது. அம்பாளின் நேத்ரத்தில் அத்புத ரஸம் தெரிவது எப்போதென்றால் கிரிச-சரிதே விஸ்மயவதீ. 'விஸ்மயம்' என்றால் வியப்பு 'கிரீசன் என்றும் 'கிரிசன்' என்றும் ஈச்வரனுக்கு இரண்டு பெயர்கள் 'கிரீசன்' என்றால் கைலாஸகிரியின் ராஜாவாயிருப்பவர் என்று அர்த்தம். 'கிரிசன்' என்றால் கைலாஸ கிரியில் இருக்கிறவர் என்று அர்த்தம். கைலாஸநாதனான ஈச்வரனின் சரித்ரங்களை - லீலா விருத்தாந்தங்களை - கேட்கக் கேட்க நினைக்க நினைக்க அவர் செய்திருக்கிற அத்புதங்களில் அம்பாள் அப்படியே விஸ்மய மயமாகி விடுகிறாள். சிவ லீலைகளுக்கு முடிவே இல்லை. ''சிவ லீலார்ணவம்'' என்றே நீலகண்ட தீக்ஷிதர் எழுதியிருக்கிறார். 'அர்ணவம்' என்றால் 'ஸமுத்ரம்'. திரிபுர ஸம்ஹாரம், மன்மத தஹனம், கஜாஸுர வதம், கால ஸம்ஹாரம். அந்தகாஸுர வதம், ஹாலாஹல விஷபானம், பிக்ஷாடனம், நடராஜ தாண்டவம், ஹாலாஸ்ய லீலை என்றே அறுபத்து நாலு - இப்படி எத்தனையோ! இந்த சரித ஸரித்திலிருந்துதான் 'சிவானந்த லஹரி' பெருகுகிறது என்று அந்தப் பெயருள்ள ஸ்தோத்ரத்தில் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். காரியமே இல்லாதவனே இப்படிக் கணக்கு வழக்கில்லாமல் லீலை பண்ணும்படி ஆக்கினவள் அம்பாள் தான் என்றே இந்த 'ஸௌந்தர்ய லஹரி' ஆரம்பித்தது. அவருடைய லீலா காரியத்திலே இருக்கிற அத்புதத்துக்காகவே அம்பாள் வியப்பு அடைந்தாள் என்றால், ஸ்தாணுவான (பட்ட கட்டையான) அவரை இப்படி அவள் செய்த அத்புதம் நமக்கு அதைவிட வியப்பாயிருக்கிறது!*

*அப்புறம் 'பயாநகம்' என்பதான பய ரஸம். அபய ஸ்பரூபம் அம்பாள். பல தினுஸில் பயந்து பயந்து சாகிற நம் அத்தனை பேருக்கும் அவள்தான் புகலிடம். உன் பாதமே அபய வர ப்ரதம்' என்று நம் ஸ்தோத்ர ஆரம்ப ச்லோகம் ஒன்றிலேயே பார்த்தோம். அவளுக்கு மாயவரத்தில் 'அபயாம்பிகை' என்றே பேர். அப்படிப்பட்டவள் பயானகத்திற்கு ஆளாவதுமுண்டா?*

*ஓ, உண்டு! இத்தனை விளையாட்டு மாதிரி அப்படியும் ஒன்று! சிவலிங்கத்தைச் சுற்றிக் கொண்டு 'நாகர்' என்று பாம்பு இருக்கிறதே. அது அம்பாள்தான். ப்ரதி ஜீவனிலும் அவளே குண்டலிநிப் பாம்பாயிருக்கிறாள். அப்படிப்பட்டவள் பரமேச்வரன் மேலே போட்டுக் கொண்டிருக்கிற பாம்புகளைப் பார்த்தலே பயந்து நடுங்குவாளாம்! இப்படியொரு லீலை! ஹராஹிப்யோ பீதா - ''ஹர'' ஈச்வரனுடைய; ''அஹிப்யோ'' - பாம்புகளிடம்; ''பீதா''- பயந்தவள்.*

*அப்புறம் வீர ரஸத்திற்கு வருகிறார். மஹிஷாஸுர, பண்டாஸுராதிகளின் வதத்தில் வீர ரஸ விக்ரஹமாக ஆனவள் அம்பாள். ஆனால் சாகடிக்கிற கொடுமையை அம்பாளோடு சேர்த்துச் சொல்ல ஆசார்யாளுக்கு மனஸு வரவில்லை போலிருக்கிறது! அதனால் தாமரைப்பூவின் சோபையை வெல்வதிலேயே அம்பாளின் நேத்ரம் வீர ரஸம் காட்டுவதாகச் சொல்லியிருக்கிறார். 'வெல்வது' என்பதற்குள் இருக்கிற சண்டையம்சங்கூட வேண்டாமே என்றோ என்னமோ, ''தாமரையின் சோபையை வெல்பவளே!'' என்காமல், ''தாமரையின் சோபையைப் பிறப்பிப்பவளே!'' - ''ஸரஸிருஹ ஸெளபாக்ய ஜனனி'' என்றே சொல்லியிருக்கிறார். 'சிவப்பு நிறமே வீரத்தைக் காட்டுவது. தாமரை சிவப்பு. அதனால் சிவப்பைப் பிறப்பிக்கிறாளென்றாலே வீர ரஸம் பொழிகிறாளென்று அர்த்தம்' என்று பெரியவர்கள் எடுததுக் காட்டியிருக்கிறார்கள்.*

*'ஜனனி' என்பதற்குப் பதில் ஜயினி - 'உஜ்ஜயினி' என்பதில் வருகிற மாதிரி ''ஜயிநி'' என்ற பாடபேதம் இருக்கிறது. இங்கே ''தாமரையின் சோபையை ஜயித்தவளே'' என்று ஸ்பஷ்டமாகவே வ வீரத்தைத் தெரிந்து கொள்ளும் படியாக அர்த்தம் ஏற்படுகிறது.*

*(தாமரையின் சோபையை அம்பிகையின் கண்கள்) உண்டாக்குவதானாலும் ஸரி, ஜயிப்பதானாலும் ஸரி, இது நேராக அந்த நேத்ரங்களே பண்ணுகிற கார்யம் என்ற தனிச் சிறப்பு இருக்கிறது. இதுவரை பார்த்த மற்ற ரஸபாவங்கள் வேறே கார்யத்தை அல்லது விஷயத்தை முன்னிட்டு அம்பாளுடைய நேத்ரத்தில் ஏற்பட்ட 'ரியாக்ஷன்'கள் தான். இங்கேதான், தாமரையின் சோபையை உண்டாக்குவது அல்லது ஜயிப்பது, நேராக அந்த நேத்ரமே பண்ணும் 'டைரக்ட் ஆக்ஷன்'!*

*ஹாஸ்ய ரஸம் வேண்டாமா? 'காமெடி' என்கிறார்களே! வாழ்க்கையே 'ட்ராஜெடியாக இருக்கிற நமக்கு அதுதானே நிறைய வேண்டியிருக்கிறது? அதையும் சொல்கிறார்! ''ஸகீஷு ஸ்மேரா'' ஸகிகளிடத்தில் அம்பாள் சிரித்து பேசி ஹாஸ்யம் பண்ணுகிறாளாம்! அது அவள் கண்ணிலே ப்ரதிபலிக்கிறது. குறும்புப் பார்வை என்ற இதைத்தான் ரொம்பவும் ரஸித்துச் சொல்வது.*

*இதுவரை ச்ருங்காரம், பீபத்ஸம், ரௌத்ரம், அத்புதம், பயாநகம், வீரம், ஹாஸ்யம் என்று ஏழு ரஸம் பார்த்து விட்டோம். நவரஸம் என்றால் இரண்டு பாக்கி. அவை கருண ரஸமான சோகமும், சாந்த ரஸமும் ஆகும்.*

*ஆனந்த ஸ்வரூபிணியான அம்பாள் மற்ற ரஸங்களை 'விளையாட்டுக்கோஸரம்' நடித்துக் காட்டுவதாகச் சொன்ன மாதிரிகூட சோகத்தைக் காட்டினாள் என்று*

*ஆசார்யாளுக்குச் சொல்ல வரவில்லை! தக்ஷ யஜ்ஞத்திலே அவள் ரொம்ப துக்கப்பட்டு குமுறிக் குமுறி அழுதிருக்கிறாள். இன்னம் அநேக புராணக் கதைகளின் பல ஸந்தர்ப்பங்களில் ஈச்வரன் அவளை சபித்ததாகவும், அப்போதெல்லாம் அழுது மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள் என்று இருக்கிறது. ஆனால் பகவத் பாதாளுக்கு அது எதையும் எடுத்துக் கொள்ள மனஸ் வரவில்லை. அதனால் முன்னே (ச்லோ. 47-ல்) அம்பாள். ஜனங்கள் ஸம்ஸாரத்தில் பயப்படுவதைப் பார்த்துத் தானும் விசனப்பட்டு அதைப் போக்கினாள். - ''புவந பய பங்க வ்யஸனினி'' - என்று சொன்னரே, அதாவது அவளுடைய கருணையால் கொஞ்சம் சோகம் அடைந்ததாகச் சொன்னாரே, அப்படியே இங்கேயும் கருணா ரஸத்தைக் கருண ரஸத்துக்குள் சேர்த்துக் காட்டி விடுகிறார். அம்பாள் ஒருத்தனிடம் கருணா ரஸத்தைப் பொழிகிறாள் என்றாலே அதில்* implied *-ஆக (உட்கிடையாக) என்ன இருக்கிறது? அவனைப் பார்த்து, ''ஐயோ பாவம்!'' என்று அநுதாபம் கொண்டு, அவனைத் தூக்கிவிடுகிறாள் என்றுதானே அர்த்தம்? ஒருத்தன் சோகமான 'கருண' நிலையில் திண்டாடுகிறபோது அவனிடம் 'ஸிம்பதி'யால்தான் அவள் 'கருணா' கடாக்ஷம் பொழிகிறாள். இந்த 'ஸிம்பதி'யிலேயே அவளும் அவனுடைய சோகத்தை (கருண ரஸத்தை) 'ஷேர்' பண்ணிக் கொள்கிறாளென்றும் ஏற்பட்டுவிடுகிறது. இப்படி ரொம்ப ஸூக்ஷ்மமாக, கருணா ரஸத்தின் மூலம் அம்பாளின் சோகாநுபத்தைச் சொல்கிறார். அதோடு ரொம்பவம் உருக்கமாகவும் சொல்கிறார். ஆசார்யாளுக்கே தீன ஜனங்களிடம் இருக்கும் 'ஸிம்பதி'யாலும், கருணையாலும் தாமே அவர்களுக்குப் பிரதிநிதியாகி விடுகிறார்! இப்படி ஆகி தம்மை வைத்து எல்லோருக்கும் அம்பாளின் கருணையைப் பிரார்த்திக்கிறார்:*

**தே மயி ஜநநி த்ருஷ்டி: ஸகருணா**

*ஸாக்ஷாத் தாயாக இருக்கிற ஜனனீ! பல ரஸங்களைக் காட்டும் உன் திருஷ்டி என் விஷயத்தில் கருணை நிறைந்ததாக இருக்கிறது'' என்று அர்த்தம்.*

*முன்னேயெல்லாம் 'ந:'', ''ந:'' - ''எங்களுக்கு'', ''எங்களுக்கு'' என்று எல்லோருக்காகவும் பிரார்த்தித்த ஆசார்யாள் இங்கே தைன்யமாக (தீனநிலையில்) அம்பாளின் கருணையைப் பெறுவதில் மட்டும், ''மயி'' 'எனக்கு' என்று தம் ஒருவருக்கு மாத்திரம் அதை ஸொத்தாக்கிக் கொள்வதில் ஆழ்ந்த உள்ளார்த்தம் இருக்கிறது. இங்கே அவரே அத்தனை பேருக்குந்தான், இந்த சுலோகத்தைச் சொல்கிற அத்தனை ஜன ஸமூஹத்திற்கும் ப்ரதிநிதியாகி இருக்கிறார்! அதனால் 'அவரொருத்தருக்கு' என்பதே அத்தனை பேரையும் இதே ப்ரார்த்தனையைப் பண்ண வைத்து அம்பாளுடைய கருணா கடாக்ஷத்துக்கு 'ஸ்பெஷல் ரைட்' உள்ளவர்களாகச் செய்துவிடுகிறார்! மற்ற ரஸங்கள் யார் யாரையோ குறித்து அம்பாளுக்கு ஏற்பட, இந்தக் கருணை ஒன்றுதானே ''மயி'' (என்னிடம்) என்று பிராத்திக்கிறவன் விஷயமாகவே ஏற்படுகிறது?*

*ஸரி, சாந்த ரஸத்தைச் சொல்லாமலே எட்டு ரஸத்தோடு ச்லோகம் முடிந்துவிட்டதே! நவரஸம் இல்லையே!*

*இந்த எட்டு ரஸங்களையும் ரஸித்துத் தன்மயமாகும் போது ஏற்படும் நிலை இருக்கிறதே, அதுவே சாந்த ரஸம்!* Basic *-ஆக (அடிப்படையில்) அம்பாளே அதுதான்!*

*சிவமாக அவள் இருக்கிற நிலை அதுவே. இதைத்தான் (இந்த ச்லோகத்தில்) முதல் வார்த்தை ''சிவே'' என்று இருப்பதே குறிக்கிறது என்று சொல்லலாம். ஸ்தோத்ர ஆரம்பத்தில் சிவன் சக்தியில்லாவிட்டால் அசையாமல் சாந்தனாயிருக்கணும் என்று சொன்னவர், இங்கே 'சிவே' என்று ஆரம்பிப்பதால் அந்த சாந்த நிலைதான் அசைந்து கொடுத்து அப்புறம் சொல்கிற எட்டு ரஸங்களாகவும் பரிணமித்தது என்று பெரிய தத்வம் தெரிவிக்கப்படுகிறது. அவளைக் காரியப் பிரம்மம் என்றே வைத்து ஸ்தோத்திரம் முழுதும் பண்ணிக்கொண்டு போயிருப்பதால் இப்படி சாந்தத்தை நாஸுக்காகக் கோடி காட்டி விட்டுவிடலாம் என்று ஆசார்யாள் நினைத்திருப்பார் போலிருக்கிறது.*

*விசேஷம் என்னவென்றால், ஸ்தோத்ரத்தின் முதல் ச்லோகம் 'சிவ' என்று ஆரம்பித்திருக்கிறதென்றால் 'சிவே' என்று ஆரம்பிக்கிற இந்த ச்லோகம் ஸரியாகப் பேர் பாதி முடிந்து வருகிற 51-வது ச்லோகமாக இருக்கிறது! நாலு வேதங்களின் நடு மத்தியில் நடுநாயகமாக 'சிவ' நாமம் வருகிறாற்போலவே இந்த ஸௌந்தர்ய லஹரியிலும் வைத்து ஆசார்யாள் அநுக்ரஹித்திருக்கிறார்.*

*''ரஸம் எட்டுத்தான். சாந்தம் ரஸமே இல்லை. அநுபவிக்கிறவன், அநுபவம், அதன் உணர்ச்சி, கிளர்ச்சி, இதுகளைத் தூண்டிவிடுகிற விஷயங்கள் எல்லாம் சேர்ந்தால்தான் ரஸம். இதெல்லாம் ஒன்றுமில்லாமல் அப்படியே அடங்கி ஒடுங்கி, மௌனமாகக் கிடக்கும் சாந்தம் பெரிய அநுபவமாகவே இருந்தாலும் அதை ரஸம் என்று எப்படிச் சொல்வது? என்று ஆலங்காரிகர்களில் (அலங்கார சாஸ்திரக்காரர்களில்) சில பேர் ஆக்ஷேபித்திருக்கிறார்கள். இதற்கெதிராக அவர்களிலேயே சிலர் மற்ற ரஸங்களுக்கு உள்ளது போலவே சாந்தத்தை உண்டாக்குகிற ஸந்தர்ப்பம்,* background *(பின்னணி) முதலியவை இன்னின்ன, அதை மேலும் தூண்டிவிடுகிறவை இன்னின்ன, இந்த பாவத்துக்கு அறிகுறிகளாக இன்னின்ன இருக்கின்றன, இந்த மூல பாவத்துக்கு துணையாக இன்னின்ன உப-பாவங்கள் இருக்கின்றன என்றெல்லாம் ஸவிஸ்தாரமாகச் சொல்லி, ''இதுவும் ரஸந்தான். இதுதான் ரஸங்களுக்கெல்லாம் ரஸம்'' என்கிறார்கள். இப்படி இரண்டு ஸ்கூல்கள் (மரபுகள்)*

*போன ச்லோகத்தில்தான் பார்த்தோம், ஆசார்யாள் ''நவரஸாஸ்வாத தரளௌ'' என்றதை! அடுத்தே இந்த ச்லோகம் அம்பாளுடைய கண்களில் நாடக ரஸங்கள் வெளியாவதைப் பற்றிச் செய்திருக்கிறாரென்றால் இங்கேயும் நவரஸமாக சாந்தத்தையும் சேர்த்துத்தானே, சொல்லியிருப்பார்? இன்னொரு கன்ஃபர்மேஷன்கூட இதற்கடுத்த ச்லோகத்திலிருந்தே கிடைக்கிறது. அங்கே (ச்லோ. 52-ல்) மன்மதன் தன்னுடைய பாணமாக அம்பாளுடைய பார்வையையே ஆக்கிப் பரமசிவன் மேலே போட்டு அவருடைய சாந்த ரஸத்தை விரட்டியடிக்கிறான் என்கிறார். ''புராம் பேத்து: சித்த ப்ரசம ரஸ வித்ராவண'' - 'புராரியான சிவனின் மனஸிலுள்ள ப்ரசம ரஸத்தை விரட்டி என்கிறார். 'சமம்' என்றால் மன அடக்கம். அதிலிருந்துதான் 'சாந்தி' என்ற வார்த்தையே வந்தது. 'சாந்தி' என்பதைச் சிறப்பித்து 'ப்ரசாந்தி' என்கிறோ மல்லவா? அப்படி 'சம'த்தைச் சொல்வதே 'ப்ரசமம்' ப்ரசம ரஸம் என்றால் சாந்த ரஸமேதான்.*

*முந்தி, மூலாதாரத்தில் ஆனந்தபைரவ பைரவிகள் நடனத்தைச் சொன்னபோதும்*

*(ச்லோ. 41) ''நவரஸ மஹா தாண்டவ'' என்றே ஸ்பஷ்டமாகச் சென்னார். ஆனபடியால் ஆசார்யாள் நவரஸக் கொள்கையை ஒப்புக் கொண்டவரே என்று நிஸ்ஸந்தேஹாமாகத் தெரிகிறது. ஆனாலும் சக்தி என்றே சொல்லப்படுபவள் சாந்தமாகி விட்டாளென்றால் அவளுடைய அசைப்பு அவளுக்கே போய் ஆரம்ப ச்லோகத்து சிவன் மாதிரி அவளும் ஸ்தம்பித்துக் கிடப்பதாகி விடுமேயென்று விஸ்தாரம் பண்ணவில்லை போலிருக்கிறது.*

*சில பேர் எட்டு ரஸம்தான் என்று சொன்னால், வேறு சிலர் சாந்தத்தை மட்டுமின்றி, 'வாத்ஸல்ய'த்தையும் தனி ரஸமாகச் சொல்லத்தக்க கனம் அதற்கு உண்டு என்ற அபிப்பிராயத்தில் அதைப் பத்தாவது ரஸமாகச் சேர்க்கிறார்கள். ''மயி ஜனனி த்ருஷ்டி: ஸகருணா'' என்பதாக ஆசார்யாள் அவளைத் தாய் என்று சொல்லித் தம்மைக் குழந்தையாக்கிக் கொள்வதிலேயே அந்த வாத்ஸல்ய ரஸமும் வந்துவிடுகிறது.*

*ஆக எட்டு ரஸங்களை வெளிப்படையாகவும், இரண்டை ஸூசனையாகவும் ஒரே ச்லோகத்தில் அம்பாளின் ஒரே அவயவ விஷயமாக ஸம்பந்தப்படுத்தி ஆசார்யாள் புலமையைக் காட்டியிருக்கிறார்.*

## ஸூசனையில் மீனலோசனை!

*'ஸௌந்தர்யலஹரி'யில் ஸூசனையாக உள்ள அநேக அழகுகளில் இன்னொன்று மீநாக்ஷியைப் பற்றியது. அதுவும் நேத்ர ஸம்பந்தமானது. மீநாக்ஷி என்றாலே மீனநேத்ரி தானே? 'மீனலோசனி' என்றும் சொல்வது லோகத்துக்கெல்லாம் ப்ரஸித்தமாக, வர ப்ரஸாதினியாக இருக்கப்பட்டவள் மதுரை மீநாம்பிகை. ஆதியிலிருந்து இன்றுவரை மஹிமையோடிருந்து கொண்டிருக்கிற அவள் கண்ணழகை வைத்தே பெயர் பெற்றிருப்பவள். அவளைப் பற்றி தேவீ ஸ்தோத்ரங்களுக்குள் இரண்டு கண்கள் மாதிரி இருக்கும் 'லலிதா ஸஹஸ்ரநாம'த்திலும் ஸௌந்தர்ய லஹரியிலும் சொல்லவில்லை இதை நினைத்துப் பார்க்கும்போது குறையாக ஏமாற்றமாக இருந்தது.*

*ஆனால் நன்றாக கவனித்துப் பார்த்த பிறகு குறை நிறையாயிற்று. இரண்டிலுமே மீநாக்ஷியை நேராகச் சொல்லாவிட்டாலும் ஸூசனையாகச் சொல்லித்தான் இருக்கிறது. உடைத்துச் சொல்லாததாலேயே அவளுக்கு ஜாஸ்தி விசேஷம் என்று தோன்றுகிறது. ஸ்தூலத்தைவிட ஸூக்ஷ்மத்துக்குத்தானே விசேஷம் ஜாஸ்தி?*

*லலிதா ஸஹஸ்ரநாமம் அம்பாளை வர்ணித்துக் கொண்டு வரும்போது ''வக்த்ர-லக்ஷ்மீ-பரீவாஹ-சலந்-மீநாபலோசநா'' என்று ஒரு நாமா சொல்கிறது. 'வக்த்ர லக்ஷ்மீ' என்றால் அம்பாளுடைய முக காந்தி. அது ஒரு பெரிய பிரவாஹமாக (பரீவாஹம்) இருக்கிறது. இப்படி முகதேஜஸ் பெருக்கெடுத்து ஓடுகிறது என்றால் - நீர்ப் பெருக்கில் மீன் இருக்க வேண்டுமே! இந்த காந்தி ஸமுத்ரத்தில் எங்கே மீன்?*

*நீண்டு நீண்டு விளங்கும் அம்பாளுடைய நேத்ரம் இருக்கிறதே அதுதான் மீன். லோசனம் என்றால் கண் என்றுல் பார்ப்பது. பார்க்கப்படுவதால் லோகம்('லோகனம்' என்னுல் பார்ப்பது. பார்க்கப் படுவதால் லோகம்), மீன் மாதிரி வடிவத்தில் இருக்கிற லோசனம் - 'மீநாபலோசனம்'. 'மீநாக்ஷி' என்று அப்பட்டமாகச் சொல்லாமல் 'மீநாபலோசனா' என்று சொல்லியிருக்கிறது. ஒரு குறை தீர்ந்தது.*

*''ஸௌந்தர்ய லஹரி'யில் என்ன வருகிறது? அநேக நகரங்களோடு அவளுடைய நேத்ரத்தை ஸம்பந்தப்படுத்திச் சொன்ன ச்லோகத்தில் 'மதுரா' என்பது தென் மதுரையானால் மீநாக்ஷியின் பேரைச் சொல்லாவிட்டாலும் ஊரைச் சொன்னதாயிற்று! அது தவிர, இதில் அம்பாளின் கண்களை வர்ணிக்கும் அநேக ச்லோகங்களில் ஒன்றில் (ச்லோ. 56) முதலிரண்டு வரிகள்:*

**தவாபர்ணே (தவ-அபர்ணே) கர்ணே ஜப-நயந-பைசுந்ய-சகிதா:**
**நிலீயந்தே தோயே நியதம் அநிமேஷா: சபரிகா: ।**

*''அபர்ணே'' - 'அபர்ணா என்ற பெயருடைய அம்பிகையே!' பர்வதராஜகுமாரியாக அம்பாள் அவதாரம் பண்ணிப் பரமேச்வரன் தன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டுமென்று கடுந் தபஸிலிருந்த காலத்தில் மற்ற ரிஷிகள் மரத்திலிருந்து தானே உதிரும் சருகை மட்டுமாவது சாப்பிட்டார்களென்றால், இவளோ அதைக் கூடச் சாப்பிடாமல் சுத்த உபவாஸமிருந்ததால் 'அபர்ணா' என்ற பேரைப் பெற்றாளென்று காளிதாஸர் சொல்லியிருக்கிறார். 'பர்ணம்' - இலை; இலைகூடச் சாப்பிடாமலிருந்தவள் 'அபர்ணா'. ''தவ'' - உன்; ''கர்ணே'' - காதில், காதிடம்; ''ஜப-நயன'' - பேசுவது போன்ற கண்கள்; ''பைசுன்ய சகிதா:'' - தங்களைப் பற்றிக் கோள் சொல்கின்றன என்று பயமடைந்தவையான; ''சபரிகா:'' - பெண் மீன்கள்; ''அநிமேஷா:''' - கண் மூடாதவையாகி; ''தோயே'' - ஜலத்துக்குள்; ''நிலீயந்தே'' - முழுகி விடுகின்றன என்பது; ''நியதம்'' - நிச்சயம்.*

*மீன் ஏன் எப்போதும் ஜலத்தின் மேல் மட்டத்தில் நீந்தாமல் உள்ளுக்குள்ளேயே நீந்திக் கொண்டிருக்கிறது? இதற்கு இங்கே ஆசார்யாள் ஒரு காரணம் கல்பிக்கிறார். காதளவோடும் அம்பாளின் கண்களை மீன்கள் பார்த்தன. லோகத்தில் ஒரு புல் பூண்டு புழு பூச்சிகூட விட்டுப் போகாமல் ஜகன்மாதா விழிகளை ஸகல திக்குகளிலும் திருப்பிக் கொண்டே இருக்கிறாள். அப்போது ஒவ்வொரு ஸமயம் அவை கண்கோடிக்கு வரும்போது காதைத் தொட்டுவிடும் போலிருக்கிறது. அப்போது அவை காதிடம் ரஹஸ்யம் பேசுகிற மாதிரி மீன்களுக்குத் தோன்றுகிறது. என்ன ரஹஸ்யம்? உருவத்தில் இந்த மீன்கள் அந்தக் கண் மாதிரிதான் இருக்கின்றன. ஸமஸ்த லோகாநுக்ரஹத்துக்காக அந்தக் கண் ஓயாமல் சஞ்சலிப்பதைப் பார்த்துக் 'காப்பி' அடிக்கிறது போலத்தான் இந்த மீன்களும் ஓயாமல் ஒழியாமல் ஜலத்திலே ஸஞ்சரித்துக் கொண்டேயிருக்கின்றன. இதனால் மீன்களுக்கு பயம் பிடித்துக்கொண்டு விடுகிறது! அம்பாளுடைய கண்கள் அவளுடைய காதிடம், 'மீன்கள் என்னோடு போட்டி போடுகின்றன'' என்று ரஹஸ்யமாகக் கோள் சொல்கின்றனவோ என்று பயம்! கண்களுடைய 'பெடிஷனை'க் கேட்டு, மஹா பராசக்தியானவள் இந்த அல்ப ஜந்துக்களான மீன்களில் மேல் 'ஆக்ஷன்' எடுக்க வந்துவிட்டால்? இந்த பயத்தினால்தான் நீர்மட்டத்தின் மேல் பரப்பில் நீந்தாமல் அவை உள்ளுக்குள் மறைவாக முழுகி விடுகின்றன!*

*தோற்றுப்போன துர்யோதனன் மடுவுக்குள் போய் ஒளிந்து கொண்ட மாதிரி, அம்பாளின் கண்ணழகுக்குத் தோற்றுப் போன மீன்கள் ஜலத்தின் உள்மட்டத்துக்குப் போய் விடுகின்றன! சபரிகா: என்றால் பெண் மீன்கள் என்றுஅர்த்தம். பைசுன்ய - என்றால்*

*கோள் சொல்வது. கோழி மூட்டுவது என்கிறோமே அது. 'சகிதர்:' என்றால் பயத்தில் நடுங்கிக் கொண்டிருப்பவை என்று அர்த்தம்.*

*அம்பாளின் கண்ணோடு யுத்தம் செய்தால் வடிவழகு, ஸஞ்சரிக்கும் ஸாமர்த்தியம் இரண்டிலுமே தோற்றுப்போய்விடுவோம் என்றே மத்ஸ்யங்கள் ஜலத்துக்குள், அஜ்ஞாதவாஸம் ஆகிவிடுகின்றன.*

*மதுரை மீநாக்ஷி ஆலயப் பொற்றாமரைக் குளத்தில் மீனே இருப்பதில்லை. காரணம் அவளுடைய கண்ணழகில் வெட்கி அது அங்கே தலைகாட்டுவதில்லை என்று ஒரு பிரஸித்தி ஏற்பட்டிருக்கிறது.*

*அம்பிகையின் நேத்ரங்களுக்கு மத்ஸ்யத்தை ஒப்புவமை சொல்லி, அது ஒளிந்து கொண்டதாகவும் கூறுகிற இந்த 'ஸௌந்தர்ய லஹரி' ச்லோகத்தில் ஆசார்யாள் மீநாக்ஷியைத்தான் ஸூசனையாகக் குறிப்பிடுகிறார்.*

*இரண்டாவது குறையும் தீர்ந்தது!*

*''அநிமேஷா:'' - 'கண்ணைக் கொட்டாமல்' என்று ச்லோகத்தில் மீனைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. (கண் கொட்டுகிற நாழிதான் 'நிமிஷம்' என்பது) அம்பாளும் கண் கொட்டுவதில்லை என்று இதற்கு முன் ச்லோகத்தில்தான் இதே 'நிமேஷ' பத ப்ரயோகம் பண்ணிச் சொல்லி இருக்கிறார். அவள் கண் மூடித் திறப்பதிலேயே லோகத்தின் ஸ்ருஷ்டியும், அழிவும்; திறந்தால் ஸ்ருஷ்டி, மூடினால் அழிவு! அப்படி அழியக் கூடாதே என்றே கண் கொட்டாமலிருக்கிறாள் என்கிறார். தேவ ஜாதியில் எவரும் கண் கொட்டுவதில்லை. அதற்கே அம்பாள் விஷயமாக இப்படி ரக்ஷணக் கருணையைக் காரணமாகக் கல்பித்திருக்கிறார். இன்னொரு காரணமும் தோன்றுகிறது - கண் கொட்டுகிற அந்த* fraction of a second *-ல் (விநாடித் துகளில்) லோகத்துக் குழந்தைகளுக்கெல்லாம் தன் கடாக்ஷாம்ருதம் கிட்டாமல் போய்விடுமே, அப்படி ஆகப்படாதே என்றுதான் அம்பாள் கண்கொட்டாமலிருக்கிறாள் என்று!*

*மீனையும் ஏன் அப்படிச் சொன்னார்? மீன் தூங்குவதில்லை என்று* traditional belief *(மரபு வழி நம்பிக்கை). அதற்கே ஆசார்யாள், கண்ணின் கோழிப் பெடிஷன் காதில் விழுவதைக் கேட்டு அம்பாள் எங்கே தன்னோடு சண்டை போட ஜலத்தின் அடிமட்டத்திற்கும் வந்துவிடுவாளோ என்றுதான் அங்கேயும் மீன் கண் கொட்டாமலே* alert *-ஆக (உஷாராக) இருந்து கொண்டிருக்கிறதென்று காரணம் கல்பிக்கிறார்.*

## ''என்னையும் அருள் நீராட்டிவை, அன்னையே!''

*மீநாக்ஷியை நினைத்ததை அடுத்து, இந்த ஸ்தோத்ரத்திலே ரொம்பவும் நெஞ்சைத் தொடுவதாக உள்ள ச்லோகங்களில் ஒன்று - அம்பிகையின் கடாக்ஷத்தை மனமுருகிப் பிரார்த்திப்பதாக வருகிறது (ச்லோ. 57) அம்பாளுடைய கண்களிலிருந்து பொங்குகிற கடாக்ஷ அம்ருதம் ஆசார்யாளிடம் பூர்ணமாகப் பொலிந்து கொண்டிருக்கும்போது, அவருடைய வாக்கிலிருந்து அம்ருதமாகப் பொங்கி வந்த ச்லோகம் இது. ஆனால் இதில் ''உன் கடாக்ஷம் என்னிடம் பொங்கி வந்து தங்கியிருக்கிறது'' என்காமல் மிகவும் தீனமாக*

*அந்தக் கடைக்கண் தமக்குங்கூடக் கிட்டணும் என்றே வேண்டுகிறார்! தமக்கு'க் கிட்டவேண்டும் என்று மட்டுமில்லை; 'தமக்கும்கூட'க் கிட்டவேண்டும் என்கிறார். ஒரே நைச்சியமாக - பக்தியிலும் ஞானத்திலும் காரிய சக்தியிலும் கவிதா ப்ரதிபையிலும் சிகரமாக இருந்தும் துளிக்கூட அஹம்பாவமே இல்லாத நம் ஆசார்யாள்!*

*வாஸ்தவத்தில் பகவத் தர்சனத்திலும், பகவத் அநுபவத்திலும் திளைத்துக் கொண்டிருந்த அநேக மஹான்கள் - நாயன்மார், ஆழ்வார் போன்றவர்கள் - 'இந்த நாயேனுக்கும் தரிசனம் கிடைக்குமா? என்று நிறையப் புலம்பிப் பாடியிருப்பதைப் பார்க்கிறோம். ஏனிப்படி இருக்கிறதென்றால்: அந்த மாதிரி தர்சனம் கிட்டாத நமக்கு அது கிட்டுவதற்காக எவ்வளவு தாபமாகப் புலம்பணுமோ அப்படிப் பண்ணத் தெரியவில்லை. அதனால், நாம் பாபத்தைக் கழித்துக் கொள்வதற்காக தாபத்தோடு புலம்பினால் அருள் பண்ணுவது என்று வைத்துக் கொண்டிருக்கும் பகவானே, 'இவாளுக்குப் புலம்பவும் தெரியலையே! அதனால் நாமே சொல்லிக் கொடுப்போம்' என்று நினைக்கிறான். நன்றாக அவனை அநுபவித்தவர்கள் மூலமே அவன் தன் அருள் வாக்கை வெளிப்படுத்துவான். ஆதலால் அப்படிப்பட்ட, அவனை அநுபவிக்கிற, மஹான்களின் வாக்கு மூலமே நம்மைப் போன்றவர்கள் புலம்ப வேண்டியதற்கான 'மாடல்' வாக்கைப் பிறப்பிக்கிறான்.*

*இங்கே அப்படித்தான் ஆசார்யாளை அம்பாள் பாட வைத்திருக்கிறாள்.*

**த்ருசா த்ராகீயஸ்யா தர-தளித-நீலோத்பல-ருசா**
**தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாம் அபி சிவே।**
**அநேநாயம் தந்யோ பவதி ந ச தே ஹாநிரியதா**
**வநே வா ஹர்ம்யே வா ஸமகர-நிபாதோ ஹிமகர: ॥ 57**

*''த்ருசா'' என்று ஆரம்பிக்கிற வார்த்தை திருஷ்டியைச் சொல்கிறது. ''கண்ணால்'', ''பார்வையால்'' என்று இரு அர்த்தமும் எடுத்துக்கொள்ளலாம். அம்பாளின் கண்ணை, பார்வையைத்தான் குறிப்பிடுகிறார்.*

*''த்ராகீயஸ்யா'' மற்ற எதையும்விட நீண்டது என்று* comparative degree *-ல் சொல்வது ''த்ராகீயஸ்''. ஒரு இடத்திலிருந்துகொண்டு மற்ற இடத்திற்குப் பரவுவதாக லோகத்திலுள்ள ஸகலத்தோடும் 'கம்பேர்' பண்ணினால், அவை எல்லாவற்றையும்விட தீர்க்கமானது அம்பாளின் பார்வை என்கிறார். ''த்ருசா த்ராகீயஸ்யா'' என்றால் ''ரொம்ப ரொம்ப தூரம் சென்று விழக்கூடிய கடாக்ஷத்தினால்'' எனறு அர்த்தம் நீண்ட கண்களிலிருந்து நீண்ட தூரம் பரவும் கடாக்ஷம். கண் நீண்டிருப்பதை உத்தம ஸ்த்ரீ லக்ஷணமாகச் சொல்வார்கள்.*

*ஒரு அம்மாக்காரிக்குக் குழந்தை எப்போதும் தன் கண் பார்வைக்குள்ளேயே இருக்க வேண்டும் என்று இருக்கும். அடிக்கொருதரம் வந்து வந்து அது தூளியிலிருந்தாலும், வாசலிலிருந்தாலும், கொல்லையிருந்தாலும் பார்த்துக் கொண்டிருப்பாள். அம்பாளுக்குப் பிரபஞ்சத்தில் இருக்கும் எல்லா பிராணிகளும் குழந்தைகள்.*

*கைக்குழந்தைகள்தான். பெரிய பெரிய காரியம் ஸாதித்தவர்கள், அகடவிகடம் செய்கிறவர்கள் எல்லோருங்கூட அவளுக்குப் பச்சைக் குழந்தைகள்தான். ஒரு தாயார்க்காரி பச்சைக் குழந்தையைத் தன் பார்வைக்குள்ளேயே வைத்துக் கொள்வதுபோல ப்ரபஞ்சத்திலுள்ள மிருகங்கள், பக்ஷிகள், புல், பூண்டு என்ற அத்தனை பச்சைக் குழந்தைகளையும் தன் பார்வைக்குள் அவள் வைத்துக் கொண்டிருக்கிறாள். அதாவது அவளுடைய த்ருஷ்டி ப்ரபஞ்சத்தின் கோடிவரை வியாபித்திருக்கிறது. அந்தக் கோடி எங்கே இருக்கிறது? பிரபஞ்சத்துக்கு எல்லையே இல்லை.* Galaxy, nebulae, *அதாவது நக்ஷத்திரக் கூட்டங்கள், நக்ஷத்ரமாகக்கூட ரூபமாகத் தெரியாத மூட்டங்கள் என்று அது பாட்டுக்கு முடிவே சொல்லமுடியாதபடி இருக்கிறது என்று ஸயன்டிஸ்ட்கள் சொல்கிறார்கள். எல்லையற்ற இந்தப் பிரபஞ்சம் அம்பாள் பார்வைக்குள் இருக்கிறது என்றால் அந்தப் பார்வையும் எல்லையில்லாதது என்றுதான் அர்த்தம். அது ரொம்ப ரொம்ப நீ...ண்டு கொண்டேபோய் பிரம்மாண்டத்தின் அத்தனை குழந்தைகள் மேலும் விழுகிறது - ''த்ராகீயஸ்யா.''*

*லோகம் முழுக்க விழுகிறது என்பதால் அது தகுதி பார்க்கவில்லை என்கிறாகிறது.*

*ஸரி,இது அதனுடைய குண விசேஷம், ரூப விசேஷம். ரூப ஸம்பத்து எப்படியிருக்கிறது?*

**தர-தளித-நீலோத்பல ருசா**

*'ருசி' என்றால் நாம் வாய் என்ற இந்திரியத்துக்கான 'டேஸ்ட்' என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். ஸம்ஸ்க்ருதத்தில் இந்த அர்த்தம் இருந்தாலும், முக்யமாகக் கண் என்ற இந்திரியத்துக்கான ஒளியைத்தான் 'ருசி' என்பது குறிக்கிறது. ''ஹேமாம்புஜ ருசி:'' என்று முன்னே (ச்லோ-48) சொன்னபோதும் அம்பாளுடைய லலாட நேத்ரம் தங்கத் தாமரையின் பிரகாசத்தோடு கூடினது என்ற அர்த்தத்திலேயே வந்திருக்கிறது. அங்கே ''தர-தளித ஹேமாம்புஜ ருசி:'' என்று போட்ட மாதிரியே இங்கே ''தர-தளித நீலோத்பல ருசி:' என்கிறார். அக்னியாக ஜ்வலிக்கும் நெற்றிக்கண் ஹேமாம்புஜம். மற்ற இரு கண்களும் நீலோத்பலம்.*

*இரண்டு 'ல' காரங்களுடன் 'நீலோத்பலம்' என்கிற போதே மிருதுவாயும் மதுரமாயும் இருக்கிறது. 'லலிதா' என்கிறபோதும் இப்படியே இரட்டை 'ல'கார விசேஷம் இருக்கிறது. ஒரு நகை செய்கிறபோது சின்னக் கல், பெரிய கல், பச்சைக் கல், சிவப்புக் கல் என்று பார்த்து பார்த்துப் பொறுக்கிப் பொறுக்கி வைத்து இழைப்பதுபோல வார்த்தைகளை அந்தந்த இடத்துக்குப் பொருத்தமாக சப்த விசேஷம், அர்த்த விசேஷம், சப்த விசேஷத்தின் மூலமே அர்த்த விசேஷம் என்று வைத்து இழைப்பதுதான் உத்தம கவி லக்ஷணம்.*

*திருவாரூரில் மூலஸ்தான அம்பாளுக்கு நீலோத்பலாம்பா என்றே பேர். தனி ஸந்நிதியாக அங்கே கமலாம்பாள் விசேஷம். 'கமலம்' தாமரை என்று தெரிந்திருக்கும்.*

*'நீலோத்பலம்' என்பது 'கருங்குவளை'. வெறுமனே 'உத்பலம்' என்றால் 'குவளை மலர்'. நீல என்று சேர்த்தால் கருங்குவளை என்றாகும். பொதுவாக ஸம்ஸ்க்ருதத்தில் 'நீலம்' என்றால்* blue, *க்ருஷ்ண' என்றால் கறுப்பு என்று பிரிக்காமல் 'நீலம்' என்பதே*

*கறுப்பு என்ற அர்த்தத்தில் வரும். இங்கே மாத்திரம் கருங்குவளை என்பது நிஜமாகவே நீல உத்பலமாகத்தான் இருக்கிறது! தமிழில் 'கரும்' என்று வருகிறதுபோலக் கறுப்பாக இல்லை!*

*செந்தாமரையில் பளிச்சென்ற பிரகாச அழகு என்றால் கருங்குவளைக்குக் குளிர்ந்த பிரகாச அழகு அலாதியாயிருக்கிறது. பார்த்தாலே கண்ணுக்கு 'ஜில்' லென்றிருக்கும். அந்த நீலோத்பலம் காற்றிலே ஆடி ஆடிக் கொண்டு ஓடையின் ஜலத் துளிகளோடு சேர்ந்து குளிர்ச்சியாக இருக்கும். கருணையில் நனைந்த அம்பாளுடைய இரண்டு கண்களும் ஜலத்தில் நனைந்த நீலோத்பலம் மாதிரி பரம ஹித சீதளமாக லோகம் பூராவையும் கடாக்ஷிப்பதற்காக ஜகத்தின் ஒரு கோடிக்கு மறுகோடி ஆடியபடி இருக்கின்றன. நீலோத்பலம் போல உருவமைப்பு, அதே நீல நிறமான விழி, நீளமாக இருப்பதோடு அது மாதிரியே நீலமாகவும் இருப்பது, அதிலுள்ளது போலவே குளிர்ச்சி, இப்படியும் அப்படியும் அசைவது - இத்தனை பொருத்தங்கள்! ''ருசா'' - 'ஒளியால்'. இந்த ஒளி கண்ணைப் பறிப்பதல்ல - ஹேமாம்புஜத்தினுடையது போன்றதில்லை. இது கூசின கண்ணுக்கும் மருந்தாக இருக்கிற குளிர்ந்த நீல ஒளி.*

*நீலோத்பலமான வல-இடக் கண் பார்வையைத் தான் பிரார்த்திக்கிறார்; ஹேமாம்புஜமான நெற்றிக் கண்ணுடையதை அல்ல. ஈச்வரன் நெற்றிக் கண்ணைத் திறந்தால் ஏற்படுகிற உத்பாதம் தெரிந்ததுதானே? அம்பாளுக்கும் நெற்றிக்கண் இருந்தாலும், அவள் அதைத் திறந்த விருத்தாந்தம் எதுவும் இல்லை!*

*வெறும் 'நீலோத்பலம்' என்காமல் 'தர-தளித' என்று அடைமொழி கொடுத்திருக்கிறார். 'தளிதம்' என்றால் சின்ன வெடிப்பு விட்டுக்கொண்ட மாதிரித் திறந்திருப்பது. இங்கே 'மலர்ந்த' என்று அர்த்தம். நன்றாகக் கூம்பியுள்ள குவளைமீது சந்திர ரச்மி பட்டவுடன், கூம்பியிருந்த அதைச் சட்டென்று ஒரு வேகம் கொடுத்து வெடிக்கவைத்துத் திறக்கிறதுபோல இதழ் விரிய ஆரம்பிப்பதால் 'தளித'. 'தளித'வுக்கு 'தர' என்று அடைமொழி சேர்ந்து மேலும் நகாஸ் பண்ணியிருக்கிறது - 'தரதளித'. 'தர' என்றால் 'கொஞ்சம்போறம்' (சிறிதளவு) என்று அர்த்தம். 'தரதளித' என்றால் 'கொஞ்சம் கொஞ்சம் மலர்ந்த'.*

*பூர்ணமாக மலர்ந்த நீலோத்பலத்தின் 'ஷேப்' கண் மாதிரி இருக்காது. மொக்காக (மொட்டாகக்) கூம்பி இருக்கும்போதுதான் கண் 'ஷேப்'பில் இருக்கும். முழு மொக்கா என்றால் அப்படியும் இல்லை. கண்களை மூடிக் கொண்டிருந்தால்தான் முழுக்க மொக்கு போல, கூம்பிய குவளை போல் இருக்கும். அம்பாள் கண்ணை மூடுவதேயில்லை என்றுதான் பல தடவை சொல்லிவிட்டாரே! அவள் லோகம் பூராவையும் ஸதாவும் கடாக்ஷிக்கிறாள் என்கிறபோது கண் எப்படி மூடியிருக்கும்?*

*அப்படியானால் முழுக்கத் திறந்து முழித்துப் பார்ப்பதாகச் சொல்லலாமா? ஊஹூம்! அதுவும் ஸரியாய் வாரது. முழி முழுக்கத் தெரிகிறமாதிரி பார்த்தால் அது கருணையாக இருக்காது. கோபத்திலேதான் முழுக்கண்ணையும் திறந்து முழிப்பது! கருணையிலே இமைகள் கொஞ்சம் மூடியும் கொஞ்சம் திறந்தும். உள்ளே இருக்கிற கண் தெரிந்தும் தெரியாமலும் இருக்க வேண்டும். சாந்தத்தில் அப்படியே முழி உள்ளே*

சொருகிக்கொண்டு இழையத்தனைத்தான் வெளியில் தெரியும்; அல்லது பூராவாக மூடிக்கொண்டிருக்கும். கருணையின் பாதி திறந்து, பாதி மூடிக்கொண்டிருக்கும். அம்பாள் பரம கருணையாக திருஷ்டியைச் செலுத்தும்போது இப்படிக் கொஞ்சம் மலர்ந்து, கொஞ்சம் மலராத நீலோத்பலமாக அவள் கண் இருப்பதைத்தான் ''தரதளித நீலோத்பல ருசா'' என்கிறார். இந்த நிலையில்தான் புஷ்பத்துக்கு ஸூக்ஷ்ம அழகு ஜாஸ்தி. உள்ளே என்னமோ இருக்கு; அதைக் காட்டமாட்டேன். காட்டாமலும் அடியோட விட்டுட மாட்டேன். பாதி காட்டியே இன்னம் என்ன இருக்கோன்னு ஆர்வப்படப் பண்ணுவேன்' - என்று புஷ்பம் இருக்கிற ஸ்வாரஸ்யமான, புதிரான நிலை அது. ஒரு கவிதையிலும் கவி இப்படித் தானே கொஞ்சம் சொல்லி, கொஞ்சம் சொல்லாமல் விட்டு ரஸம் உண்டாக்குகிறான்?

நீலோத்பல தளங்களைப் பார்த்தால், அது உள்ளே ஆரம்பிக்கிற இடத்துக்குப் போகப் போக நீலம் குறைந்து வெள்ளையாகத் தெரியும். நல்ல செந்தாமரையில்கூட தளம் தளமாக விழுந்திருப்பதை எடுத்துப் பார்த்தால் ஒரு பாதிக்குக் கீழ் வெளுக்க ஆரம்பித்து, அடியில் சிவப்பே இல்லாமல்தான் இருக்கிறதென்று தெரியும், ஆகையால், ஸில்க் மாதிரி, எண்ணெய் தடவிப் பாலிஷ் போட்ட மாதிரி நல்ல நீலமாக மாத்திரமே ஒரு நீலோத்பலம் தெரிவது அது கொஞ்சம் மலர்ந்த ஸ்திதியில்தான். நன்றாக மலர்ந்து விட்டால் வெளுப்புத் தெரிய ஆரம்பித்துவிடும். அம்பாள் கண்விழியோ பூராவுமே நீலம். அது எங்கேயும் சாயம்போய் வெளுக்கிறதில்லை! இதனாலும் 'தளித' (மலர்ந்த) என்பதற்கு 'தர' (கொஞ்சம்;பூரா இல்லை) என்று அடைமொழி போட்டது யுக்தமாயிருக்கிறது.

'ருசா' - 'ஒளியினால்', 'காந்தியினால்'.

'சிறிதே மலர்ந்த கருங்குவளையின் காந்தியுள்ள உன் தீர்க்கமான திருஷ்டியினால்' என்று முதல் வரிக்கு அர்த்தம்.

தீர்க்க த்ருஷ்டி, தீர்க்க தர்சனம் என்று நாம் சொல்லும்போது time -ல் ரொம்ப தூரம் போய் இறந்தகாலம், வருங்காலம் எல்லாம் அறிவதைக் குறிப்பிடுகிறோம். இங்கே space -ல் ரொம்ப தூரம் போய் பிரபஞ்சம் முழுதையும் அம்பாளின் திருஷ்டி வியாபிப்பதைச் சொல்கிறார்.

அடுத்த வரி: தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி சிவே.

முதல் வரியில் 'த்ருசா', 'த்ராகீயஸ்யா', 'தர', 'தளித' என்ற ஏகப்பட்ட 'த'காரம் வந்ததை அநுஸரிதது 'தவீயாம்ஸம்', 'தீனம்' என்று மேலும் இரண்டு த-வைப்போட்டிருக்கிறார்! 'த்ராகீயஸ்யா', 'தவீயாம்ஸம்' என்ற வார்த்தைகள் ஒரே போல ஒலிக்கின்றன. இதெல்லாம் சொல் நயம். அதைவிட ஆயிரம் மடங்கு உசத்தி பொருள் நயம்தான். பாவம்தான்.

''சிவே!'' - ''மஹாமங்கள ரூபிணியே!'' என்று அம்பாளை அழைக்கிறார்.

''தவீயாம்ஸம்'' என்றால் 'வெகு தூரத்திலிருந்தும்' என்று அர்த்தம். 'த்ராகீயஸ்யா' போலவே இதுவும் comparative degree. மற்ற எல்லாவற்றையும்விட அம்பாளின் திருஷ்டி

*நீளமானது என்றது போலவே, இங்கே மற்ற எல்லோரையும் விட அவளிடமிருந்து வெகு தூரத்திலிருக்கும் யாரையோ பற்றிச் சொல்கிறார். யார் அது?*

*''தீனம்'' - ரொம்பவும் தீன நிலையில் உள்ள ஒருத்தரை. தீனன் என்றால் பரம ஏழை, ரொம்பவும் கஷ்டப்படுகிறவன், பரிதாபத்துக்குரியவன், பயந்தவன், ஒன்றுக்கும் உதவாதவன், நீசமானவன் (தீனனை, ஈனனை' என்று சேர்த்தே சொல்வார்கள்) இத்தனை அர்த்தமும் உண்டு. இப்படிப்பட்ட வார்த்தையைப் பொறுக்கியெடுத்துப் போட்டிருக்கிறார்!*

*இப்படி மற்ற எல்லாரையும்விட அம்பாளிடமிருந்து தள்ளி எங்கேயோ நின்று கொண்டிருக்கிற தீனனையும் ''க்ருபயா'' - 'க்ருபையால்', 'உன்னுடைய பரம கருணையால்', ''ஸ்நபய'' - 'முழுக்காட்டு', நீராட்டு. ''அழுக்குப் படிந்த தீனனைக் குளிப்பாட்டி சுத்தம் பண்ணம்மா''!*

*எதில் குளிப்பாட்டணும்? ஆற்றிலா, குளத்திலா? எதனால் குளிப்பாட்டணும்? வெந்நீரிலா, பச்சை ஜலத்திலா?*

*இந்த எதிலும், எதனாலும் இல்லை. ''த்ருசா'' - 'பார்வையால்'! ''உன் கடாக்ஷாம்ருதத்தினால்தான் குளிப்பாட்டணும், தாயே!'' அந்தக் கடாக்ஷாம்ருதம் ஏதோ துளிபட்டால் போதாது. பிரவாஹமாக முழுக்கடித்துக் குளிப்பாட்டணும்.*

*முதல் வரியைப் பார்த்தால் இப்படிப் பிரார்த்தனை பண்ணவே அவசியமில்லை என்று தோன்றுகிறதே! ''த்ராகீயஸ்யா'' எனறு சொன்னதிலிருந்து, யாரும் கேட்காமலே, யாருடைய தகுதியையும் பார்க்காமலே அவளுடைய கடாக்ஷம் தானாகவே நீண்டு நீண்டுபோய் அத்தனை ஜீவராசிகளையும் நனைக்கிறது என்றுதானே ஆயிற்று? அப்புறம் 'ஸ்நபய க்ருபயா' என்று இவர் வேறு பிராத்திப்பானேன்?*

*'பிரார்த்திப்பானேன்? என்றால், இந்த தீனன்தான் மற்ற ஜீவராசிகள் மாதிரி இல்லையே! அவர்களைவிட அம்பாளுக்கு ரொம்பத் தள்ளியிருக்கிறவனல்லவா இவன்? 'தவீயானல்லவா? எத்தனை தப்பு பண்ணணினவர்களுக்கும் கடாக்ஷம் கிடைக்கும்படி இடம் கொடுத்து வைத்திருக்கிற ப்ரபஞ்சத்திலேயே இவன் சேரவில்லை போலிருக்கிறது! இவனை அதற்கு வெளியிலே banish பண்ணி (கடத்தி) வைத்திருக்கிறது போலிருக்கிறது!*

*பரம தயாளுவாக இருக்கப்பட்ட அம்பாளாலும் இப்படி பிரஷ்டம் பண்ணி வைக்கப்பட்டிருக்கிறவன் என்றால் அவன் மஹாதோஷியாக (தோஷமுள்ளவனாக) அல்லவா இருக்க வேண்டும். யார் அது?*

*இங்கேதான் இந்த ச்லோகத்துக்கும், ஆசார்யாளுடைய கருணா ஹ்ருதயத்துக்கும் விநய குணத்துக்கும் உயிர்நிலையாக இருக்கிற வார்த்தை வருகிறது:*

**மாமபி**

*'மாம் அபி, மாம்' - என்னை; 'அபி' - கூட 'என்னையும்கூட'.*

மற்ற எல்லாரையும் விட அம்பாளிடமிருந்து தள்ளி நிற்கிற பரமதீனன் வேறு யாரோ இல்லை. தானேதான் என்கிறார்!

அம்பாளும் ஈசவரனும் எப்படி வேறு வேறு இல்லையோ அப்படி அந்த இரண்டு பேரொடும் வேறாக இல்லாதவர் நம்முடைய ஸ்ரீ சங்கர பகவத்பாத ஆசார்யாள். அவரை ஸ்மரித்த மாத்திரத்தில் எந்த தோஷமும் ஓடிவிடும். தீனமாக, ஹீனமாக இருக்கிற நம் எல்லாரையுங்கூட, ''நீயும் பரமாத்மாதான் அப்பா'' என்று அத்வைதத்தைக் கொடுத்து உத்ஸாஹப்படுத்தி எழுப்பின பதிதபாவனர் அவர். அப்படிப்பட்டவர்தான் இங்கே தம்மையே மற்ற எல்லாரையும்விட அம்பாளுக்கு தூரத்தில் பஹிஷ்காரம் பண்ணி வைத்திருக்கும் பரம தீனனாகச் சொல்லிக் கொள்கிறார்: ''தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாம் அபி சிவே' - ''எட்டாத் தொலைவிலே நிற்கிற தீனனான என்னையும்கூட உன் கடாக்ஷ தீர்த்தத்தால் முழுக்காட்டு அம்மா!'' என்கிறார்.

''என்னை'' (மாம்) மட்டுமில்லை, ''என்னையும்'' (மாம் அபி) என்று 'அபி' போட்டு தம்மை எளிமையான எல்லாரையும், எல்லாவற்றையும் விட எளிமையாக ஆக்கிக் கொண்டுவிடுகிறார். ''என்னையும்கூடக் கடாக்ஷி'' என்றால் - ''உன் கடாக்ஷம் கிடைக்கிற யோக்யதை அறவே இல்லாததனால்தானே கருணாமூர்த்தியான நீயே என்னை உன் தீர்க்கமான பார்வை படுகிற எல்லையையும் தாண்டி நிறுத்தி வைத்திருக்கிறாய்? இப்படிப்பட்ட என்னையும்கூட'' என்று அர்த்தம். த்ராகீயஸான அவளுடைய த்ருஷ்டியை அம்பாள் மனஸு வைத்தால் இன்னமும் நீட்ட முடியும். அவளால் முடியாதது என்று எதுவுமே இல்லையல்லவா? அதனால், அப்படிப்பண்ணி, ''என்னையுங்கூட ஏதோ லேசாகப் பார்ப்பதென்றில்லாமல் அப்படியே த்ருஷ்டி வர்ஷமாகப் பொழிந்து ஸ்நானமே பண்ணிவையம்மா!'' என்று பரம எளியவராக ப்ரார்த்திக்கிறார்.

சிவ-சக்திகளின் அவதாரமாக இருந்து கொண்டு, அந்த அவதாரத்திலேயும் ராஜா, ப்ரபு என்றில்லாமல் அதற்கும் மேம்பட்டு ஜகதாசார்யர்களாகவே இருந்து கொண்டு, அநுபவத்திலே ரொம்பவம் உசந்த நிலையில் ஸதாவும் இருந்துகொண்டு, வெளிக் காரியத்திலும் ஒரு தனி மநுஷ்யர் முப்பத்திரண்டு வயஸுக்குள் எப்படி இத்தனை ஸாதித்தார்?'' என்று இன்றைக்கும் நாம் பிரமிக்கும்படியாக லோகோத்தாரணம் பண்ணிக்கொண்டு, தன் தலையே வெட்ட வந்த காபாலிகள் உள்பட எல்லாரிடமும் கருணையே பொழிந்து கொண்டு இருந்த ஆசார்யாள் ஏன் இப்படிச் சொல்கிறார்.

முன்னேயே சொன்னேன்: நாம் சொல்ல வேண்டியதைத்தான் அவர் சொல்கிறர்! நாம்தான் மஹா பாபங்களைப் பண்ணிவிட்டு அம்பாளின் கடாக்ஷ ஆனந்த ராஜ்யத்துக்கு எங்கேயோ தள்ளிக் கிடக்கிறோம். அதனால் நாம்தான் இந்த மாதிரிப் பிரார்த்தித்துச் சொல்ல வேண்டும். ஆனால் நமக்கோ சொல்லத் தெரியவில்லை! அதனால் இப்படிச் சொல்லவே வேண்டாதவர் நமக்குச் சொல்லித் தருகிறார்!

ஜீஸஸ் நம் பாபத்தையெல்லாம் தாமே வாங்கிக் கொண்டு சிலுவையில் அறைபட்டார் என்கிறார்கள். ஆசார்யாள் நம் தோஷத்தையெல்லாம் தம் மேல் சுமத்திக் கொண்டு அம்பாளிடம், ''என்னையும் உன் கடாக்ஷப் பிரவாஹத்திலே மூழ்கச் செய்''

*என்கிறார். பாபத்துக்கு மருந்தான கடாக்ஷாம்ருதத்தையும் கொடுத்து ஸரிப்பண்ணி விடுகிறார். அதை (கடாக்ஷாம்ருதத்தை) அவர் இங்கே சொல்லிக் கொடுக்கிறபடி நாம் கேட்டால் அம்பாள் கொடுத்து விடுவாள். கொடுக்காமலிருக்க அவளால் முடியாது. ஏனென்றால் அவள்தானே அவர் வாக்கை அப்படித் தூண்டிவிட்டதே!*

*முன்னே, அம்பாளின் கண்களில் நவரஸமும் வெளியாவதைச் சொல்லும்போது எப்போதும் எல்லோருக்காகவும் பிரார்த்திக்கும் ஆசார்யாள் அம்பாளுடைய கண்களின் கருணா ரஸத்தைச் சொல்கிறபோது மட்டும் ''ந:'' (எங்களுக்கு) என்காமல், ''மயி'' (எனக்கு) என்று சொன்னது நமக்குக் கொஞ்சம் புரியாமலிருந்தல்லவா? அதற்கு 'ஆன்ஸர்' இங்கே ஸ்பஷ்டமாக வருகிறது. அங்கே வந்த காருண்ய கடாக்ஷம்தான் இந்த ச்லோகம் முழுவதற்கும் ஸப்ஜெக்ட், இங்கே என்ன தெரிகிறது? தன்னாலேயே 'த்ராகீயஸ்' - ஆக இருக்கிற அவளுடைய அருட் பார்வை யாரும் பிரார்த்திக்காமலே ஸகலரையும் சென்றடைகிறது. அதனால் ''அதைக் கொடு'' என்று எவரும் வேண்ட வேண்டியதில்லை. 'மற்ற எல்லாரையும்விட தீனனாகத் தள்ளி வைத்திருந்த தாம் ஒருவர்தான் அதை வேண்டிப் பெற்ற நிலையில் இருப்பது' என்று ஆசார்யாள் அதி விநயமாக அபிப்ராயப்பட்டிருக்கிறார். அதனால்தான் அங்கேயும் ''மயி'' (எனக்கு) என்று போட்டிருக்கிறார்.*

*ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய ஸம்பிரதாயக்காரர்கள் - த்வைத பாவ பக்தி ஸம்பிரதாயஸ்தர்கள் அத்தனை பேருமே - நைச்ய பாவத்தை மிகவும் வற்புறுத்திச் சொல்வார்கள். அத்வைதத்தில் ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்று முரசு கொட்டின் பகவத்பாதாள் பக்தராக நிற்கிறபோது நைச்யத்தில், விநயத்தில் அந்த எல்லாரையும் மிஞ்சி விடுகிறார்! ''எல்லாருக்கும் தள்ளி நிற்கும் எனக்குங்கூட உன் கடாக்ஷ ஸ்நானத்தைச் செய்துவையம்மா!'' என்கிறார்!*

*அம்பாள் உடனே, ''அது ஸரி, நீயேதான் சொல்லி விட்டாயே - தானாகவே நான் லோகம் முழுதையும் கடாக்ஷிக்கிறேன்; அப்படியிருந்தும் அடியோடு யோக்யதை இல்லை என்றுதான் உன்னை 'தவீயாம்ஸ'மாகத் தள்ளி வைத்து விட்டேன், என்று! அப்புறம் ஏன் பிரார்த்திக்கிறாய்?'' என்று கேட்டு விட்டால் என்ன பதில் சொல்வது? இவரிடமிருந்து சாதுர்யமான பதில் வரவழைக்கணும். அழகான கவிதை வரவழைக்கணும் என்றே அவள் பொய்க்கோஸரம் அப்படிக் கிண்டல் பண்ணினால்?*

*இதற்குப் பதில் பின் பாதியில் தருகிறார்.*

**அநேந அயம் தந்யோ பவதி ந ச தே ஹாநி: இயதா**
**வநே வா ஹர்ம்யே வா ஸமகர நிபாதோ ஹிமகர:॥**

*''யோக்யதை இல்லை; கேட்கக் கூடாதுதான். இது நீதி சாஸ்திரப்படி ஸரி. ஆனால் கலப்படமில்லாத சுத்த அன்புக்கு நீதி-அநீதிகள் ஏது? நியாய அநியாயங்களைப் பார்க்காமல், தகுதியைக் கொஞ்சங்கூட நினைக்காமல், ஸகலரிடமும் ஸமமாக அன்பு பாராட்டி, ஸகலருக்கும் நல்லதையே செய்கிற வஸ்துக்களும் இருக்கின்றனவே! 'கீதை'யிலே இப்படி எல்லாரையும் ஒருபோல பாவிக்கிற ஸம தரிசனத்தைத் தானே*

*ஞானி லக்ஷணமாகச் சொல்லியிருக்கிறது? இப்படிப் பலபேர் இருந்திருக்கிறார்களே; பல வஸ்துக்கள் இருக்கின்றனவே! குறிப்பாக திருஷ்டாந்தம் சொல்கிறேன்: ''ஹிமகர:'' - சந்திரன்'' இருக்கிறது. அம்பாள் ஸம்பந்தமாக சந்திரனைப் பற்றிப் பேசுகிற போதெல்லாம் அநேகமாக அது ஜில்லென்றுபனியைக் கொட்டுவதை நினைத்து 'ஹிமகர:' என்ற பெயரையே ஆசார்யாள் சொல்வார். அந்த ஹிமகரன் பூர்ணமாக ப்ரகாசிக்கிறான். தன்னுடைய தாவள்யமான பரிசுத்த நிலவு எந்த இடத்தில் விழவேண்டும், இன்ன இடத்தில் கூடாது. இத்தனை உயர்ந்த இந்த சந்திரிகையைத் தரம் பார்தது, தகுதி பார்த்துச் சில இடங்களில்தான் பொழியலாம் - என்று அவன் கொஞ்சமாவது நினைக்கிறானா? கொஞ்சங்கூட* discrimination *(வித்யாஸப் படுத்துவது) இல்லாமல் நிலாவைத் தஞ்சாவூர் கோபுரத்திலும், மஹாபலிபுரத்துச் சில்பங்களின் மேலும்தான் கொட்டுகிறான்; சேரியிலும் சுடுகாட்டிலுந்தான் கொட்டுகிறான். ''வநே வா'' - காட்டிலானாலும், ''ஹர்ம்யே வா'' - ராஜக்ருஹத்தின் உப்பரிகையில் நிலா மாடத்திலானாலும், இரண்டு இடத்திலும் கொஞ்சங்கூட பேதமில்லாமல் சந்திரிகையைப் பொழிகிறான். அவன், நிலா முற்றம் என்றே சக்ரவர்த்தி ஸலவைக் கல்லில் மழமழவென்று கட்டி வைத்திருக்கிறார் என்பதற்காக அங்கே கொஞ்சம்* extra *நிலவைப் பொழிகிறானா? அல்லது காட்டிலே ஏதோ கள்ளிப் புதர், முள்ளும் கல்லுமாயிருக்கிறது என்பதற்காக அங்கே நிலாவைக் கொஞ்சம் சுருக்கிக் கொண்டுவிடுகிறானா? சந்திரனுக்குள்ள அந்த ஸமபாவம் உன் திருஷ்டிக்கு இருக்க முடியாதா என்ன? அதனால், அடியோட லாயக்கில்லாதவன்தான் நான் என்றாலும் என்னையும், ஒரு சப்பாத்திக் கள்ளியைச் சந்திரன் நிலவிலே முழுக்குவதுபோல உன் கடாக்ஷ தீர்த்தத்தால் முழுக்கம்மா!''*

*''யோக்யதை இல்லாவிட்டால் எப்படிப் பிரார்த்திக்கலாம்?'' என்று அவள் கேட்டதற்கு ரிப்ளை பண்ணியாயிற்று: ''யோக்யதையே பார்க்கப்படாது! ஸமத்ருஷ்டியாகப் போம்மா!'' என்று.*

இன்னொரு கேள்வி - *ரொம்ப விநோதமாக - அம்பாள் கேட்கிறாள் போலிருக்கிறது: ''ரொம்பவும் தோஷியான ஒருத்தனைப் பார்ப்பதனால் கடாக்ஷத்துக்கே தோஷம் வந்து விட்டால் என்ன பண்ணுவேன்? ஸரியில்லாதவர் மேல் படுவதால் திருஷ்டிக்கு என்ன சிரமம், என்ன ஹானி - கண் வலி ஒட்டுவாரொட்டியாக வருகிறது போல - வந்து சேருமோ?*

*ஆசார்யாள் பதில் சொல்கிறார்:* **ந ச தே ஹாநிரியதா.**

**''ந ச தே ஹாநி: இயதா''. ''இயதா''** *- இதனால்;* **''தே''** *- உனக்கு;* **''ச''** *போட்டதால் 'உனக்கும்' என்று அர்த்தம்* **''ஹாநி:''** *- ஹானி;* **''ந''** *- இல்லை.*

*''பரம தோஷியான என்னைப் பார்ப்பதால் உனக்கும் ஒரு ஹானியும் வராது. இதில் உனக்கு ஒரு நஷ்டமில்லை. உன் பார்வை* object *-ஆல் (அதனால் பார்க்கப்படும் வஸ்துவால்) பாதிக்கப்படாது. இப்படி ஸப்ஜெக்டை ஆப்ஜெக்ட் பாதிக்காமலிருப்பதுண்டா என்றால், இப்போது சொன்னேனே அந்த சந்திர திருஷ்டாந்தமே இதற்கும் போதும், நிலா காட்டிலே விழுந்தால் சந்திரனுக்கு முள்குத்திற்றா, கல் சிறாய்த்ததா என்ன? இல்லை, நிலா மாடத்தில் ஹம்ஸ தூளிகா*

மஞ்சத்தில் விழுந்ததே அப்போது சந்திரனுக்கு ஏதாவது வழவழவென்று, மெத்தென்று ஸௌக்யம் உண்டாச்சா? நிலாவையே ஆப்ஜெக்ட் ஒரு விதத்திலும் affect பண்ணுவதில்லை என்றால், சந்திரமௌளீச்வரியான உன் கருணா கடாக்ஷத்தை மட்டும் ஒரு ஆப்ஜெக்ட் லாயக்கில்லாதது என்பதால் பாதித்து விடுமா என்ன? நான் தோஷியாகவே இருந்து விட்டுப் போகிறேன்; அதனால் என்ன? அது எப்படி உன் கடாக்ஷத்தைப் பாதிக்கும்? ''ந ச தே ஹாநிரியதா'' - ''இதனால் உனக்கும் குறைவில்லை''.

அதென்ன 'உனக்கும்' என்று 'உம்' போட்டுச் சொன்னது? 'உனக்கும்' என்று சொன்னால் இந்த மாதிரி இன்னொன்று 'எனக்கும்' என்று வரவேண்டும். அது என்ன?

**''அநேந அயம் தன்யோ பவதி''**

''உன் கடாக்ஷ ஸ்நானம் கிடைப்பதால் நானும் தன்யனாகிறேன். அதாவது எனக்கும் பெரிய லாபம், செல்வம் கிடைக்கிறது'' என்று ஆசார்யாள் பதில் சொல்கிறார்.

நான் முன்னே பின்னே மாற்றிச் சொல்கிறேன். ஆசார்யாள் முதலில் சொல்வது, 'உன் (அதாவது) அம்பாளின் கடாக்ஷத்தால் நான் தன்யனாகிறேன்' என்பது அப்புறம்தான், 'இதனால் உனக்கும் ஹானி இல்லை' என்கிறார்.

''அநேந'' - இதனால் (முதல் இரண்டு வரியில் சொன்னபடி கடாக்ஷத்தில் நீராட்டுவிப்பதால்); ''அயம்'' - இவன் (''நான்'' என்று சொல்வதற்குப் பதில் 'இவன்' என்கிறார். தன்னையே கொஞ்சம் பிரித்து வைத்து 'இந்தக் கேட்டை' என்று சொல்வது போலச் சொல்கிறார்); ''தன்ய:'' - தன்யனாக (தனம் உள்ளவன் தன்யன். அம்பாளின் கடாக்ஷத்தால் அருட்செல்வம் என்ற தனம் கிடைக்கிறது. அதற்கு மேல் பெரிய செல்வமில்லை); ''பவதி'' - ஆகிறான் அதாவது 'ஆகிறேன்')

''உன் கடாக்ஷத்துக்குப் பாத்திரமாவதால் நான் தன்யனாக - பாக்யசாலியாக - ஆகிறேன். அதனால் ரொம்பத் தள்ளுபடியான என் மீதும் கடைக்கண்ணைச் செலுத்த வேண்டும்.

''கருணா கடாக்ஷம் பட்ட மாத்திரத்தில் தோஷம். பாபம் பறந்து போகிறது; ஜன்மம் ஸபலமாகிறது; ஆனந்த ஸமுத்ரமே கிடைக்கிறது. உனக்கு ஹானியில்லை, கஷ்டமில்லை என்பது மட்டுமில்லை; எனக்கும் பரம லாபம் ஸித்திக்கிறது. எந்த யோக்யதை இல்லை என்று தள்ளி வைத்தாயோ அதற்கும் அதிகமாக உன் திருஷ்டி விசேஷத்தாலேயே ஏற்பட்டு விடுகிறது. ஒன்றும் இல்லாத தீனனாக, தரித்ரனாக இருந்தவன், எல்லாமுமான உன்னையே பெற்ற தன்யனாக, தனிகனாக ஆகிறேன்.''

நாமெல்லாரும் அந்த தனத்தைப் பெறுவதற்காகத்தான் ஆசார்யாள் இந்த ச்லோகத்தை அநுக்ரஹித்திருக்கிறார். இதைச் சொல்லி உருகிப் பிரார்த்தித்து விட்டால் எத்தனை யோக்யதையில்லாதவரையும் அம்பாள் கடாக்ஷிப்பாள். நிலாவைப் போலவும் நீலோத்பலம் போலவும் குளிர்ந்த அவளுடைய கடாக்ஷம் நம்மையும் கைதூக்கி விடும்.

நம்மைப் பலவிதமாக அலங்காரம் பண்ணிக் கொண்டு ஸந்தோஷப்படுகிறோம். வெளி அலங்காரம் மட்டுமில்லை. படிப்பு, பதவி, பணம், புகழ் என்று நாம் தேடிப்

*போவதெல்லாம் அலங்காரம்தான். இந்த எல்லா அலங்காரங்களையும் விடப் பெரிய அலங்காரம் அம்பாள் கடாக்ஷத்துக்குப் பாத்திரமாவதுதான். அந்தக் கடாக்ஷம் பட்டுவிட்டால் அதைவிடப் பெரிய நகை, ஆபரணம், அலங்காரம் இல்லை. மற்றதெல்லாம் அலங்காரமே இல்லை என்ற ஞானத்தைத் தரும் அலங்காரம் இது!*

*இந்த ச்லோகத்தில் ஆசார்யாள் அம்பாளிடம் ''எல்லாவற்றையும் ஸமமாகப் பாரு'' என்று சொல்லி ''ஸமகர நிபாதோ ஹிமகர:'' என்று முடித்திருக்கிறாரல்லவா? இந்த ஸமதர்சனத்தை - ஸகலத்தையும் ஒன்றேயான பிரம்மமாகப் பார்க்கிற அத்வைத பாவத்தையே - அவளுடைய கடாக்ஷந்தான் தருகிறது என்று மூகர் ஸ்துதித்திருக்கிறார். ('ஆர்யா சதகம்:' ச்லோ-48) ஆசார்யாளுடைய இந்த ச்லோகத்தையே மனஸில் நினைத்துக் கொண்டாற்போல, இதிலே வருகிற மாட, மாளிகை, காடு இரண்டையும் பற்றி அதிலேயும் மூகர் சொல்கிறார். ஆசார்யாள் 'வனம்' என்கிற காட்டை மூகர் 'விபினம்' என்றும், இவர் 'ஹர்ம்யம்' என்கிற மாளிகையை அவர் 'பவனம்' என்றும் சொல்லி, அம்பாள் கடாக்ஷம் பெற்ற ஒருவன் அந்த இரண்டையும் ஸமமாகக் கருதுவான் என்கிறார். அதாவது மநுஷர்களைப் போட்டு வதைக்கிற காமம், க்ரோதம், பயம் என்ற மூன்றில், காடு என்றால் பயமாகத்தானே இருக்கிறது? அந்த பயம் அம்பாள் கடாக்ஷத்தால் போய்விடுவதைச் சொல்கிறார். காடும் அந்தக் கடாக்ஷம் பெற்றவனுக்கு வீடாகிறதாம்! அப்புறம் சத்ருவும் மித்ரனும் அவனுக்கு ஸமமாகி விடுகிறார்கள் என்கிறார். அதாவது சத்ரு என்பவரிடமுள்ள க்ரோதம் போய் விடுகிறது. மூன்றாவதாக, அவனுக்கு ஓட்டாஞ்சல்லியம் யுவதியின் உதடும் ஸமமாகி விடுகிறதென்று சொல்லிக் காமம் போய்விடுவதையும் தெரிவிக்கிறார். கடாக்ஷ ஸ்நானம் இந்த மூன்று அழுக்கையும் அலம்பி, அத்வைத ஸமத்வத்தையே கொடுத்து விடுகிறது. அந்த அத்வைதம் என்ற 'தன'த்தைப் பெற்ற 'தன்ய'னைத்தான் ஆசார்யாள் குறிப்பிடுகிறார்.*

*இதையெல்லாம் நன்றாக நினைத்துக்கொண்டு இந்த ச்லோகத்தைச் சொல்லிச் சொல்லிப் பிரார்த்திக்க வேண்டும்.*

*(ஸ்ரீ சரணர்கள் பதம் பதமாக உணர்வில் ஊறிக் கூறுகிறார்கள்:)*

**த்ருசா த்ராகீயஸ்யா தரதளித நீலோத்பல ருசா**
**தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி சிவே ।**
**அநேநாயம் தந்யோ பவதி ந ச தே ஹாநிரியதா**
**வநே வா ஹர்ம்யே வா ஸமகர நிபாதோ ஹிமகர: ॥ 57**

## நாஸி முக்தமும் யோக நுட்பமும்

*அம்பாளுடைய நேத்ர விசேஷங்களைப் பற்றி அநேக ச்லோகங்களில் சொன்ன பின் கேசாதி பாதமாக வர்ணித்துப் போவதில் ஒரு ச்லோகத்தில் அவளுடைய நாஸியை வர்ணிக்கிறார். (ச்லோகம்-61) அதிலே யோக சாஸ்திர நுட்பம் ஒன்றை லேசாகச் சொல்லிக் கொண்டு போகிறார்.*

*இயற்கையாகவே த்வாரமுள்ள மூங்கிலைப் போல நாஸி த்வாரங்கள் உள்ள அம்பாளின் வழவழப்பான மூக்கிலே முத்து மூக்குத்தி, புல்லாக்கு முதலியவை இருக்கின்றன. ''முக்தாமணி-தர:'' என்பதாக முத்து என்று குறிப்பிட்டுச் சொல்கிறார். மதுரையிலும் கன்யாகுமாரியிலும் வைர மூக்குத்தி விசேஷம். ஸஹஸ்ரநாமத்தில், ''தாராகாந்தி திரஸ்காரி நாஸாபரண பாஸுரா'' என்று வருகிறது; 'நாஸிகாபரணத்தின் பிரகாசத்தால் நக்ஷத்ர காந்தியை வெல்லுபவள் என்று அர்த்தம். நக்ஷத்ரம் பல கலர்களைக் கொட்டுவதால் அங்கேயும் வைர மூக்குத்தியைத்தான் சொல்லியிருக்கிறது என்று தோன்றுகிறது. முத்து பல கலரைக் கொட்டாது. ஆனால் பொது வழக்கில் ஒரு தினுஸான கட்டிடமுள்ள மூக்குத்திக்கே, அதை எந்தக் கல்லில் செய்திருந்தாலும் 'முத்து மூக்குத்தி' என்று பெயர் சொல்வதால், முத்திலே மூக்குத்திப் போட்டுக் கொள்வது அதிக சுபமானது, அதுவே ஒரு காலத்தில் பிரபலமாக இருந்திருக்கிறது என்று தெரிகிறது.*

*ஆணழகு பெண்ணழகு இரண்டின் பூர்ணத்வமும் சேர்ந்து ரூபமானவர் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா. அதனால் அவர் மூக்கில் புல்லாக்கு உண்டு. 'கஸ்தூரீ திலகம்' என்று எல்லாரும் சொல்கிற ச்லோகத்தில் அதைப்பற்றி வருகிறது ''நாஸாக்ரே நவ மௌக்திகம்'' - 'மூக்கு நுனியில் புத்தம்புதிசான முத்தைப் போட்டுக் கொண்டிருக்கிறார் என்றே அதில் இருக்கிறது.*

*இங்கு ஆசார்யாள் அம்பாளின் மூக்கணியாக முத்தைச் சொல்வது உவமையணிக்கு மேலும் உதவுகிறது. நாஸியை மூங்கில் என்று உவமித்தார் அல்லவா? உயர்ந்த ஜாதி மூங்கிலுக்குள் முத்து உண்டாகும். முத்துச்சிப்பி தவிர யானை மஸ்தகம், கரும்பு, மூங்கில் முதலான சிலவற்றுக்குள்ளேயும் முத்து உண்டாவதாக நம்பிக்கை இருக்கிறது. ''ஸௌந்தர்ய லஹரி''யிலேயே ஓரிடத்தில் (ச்லோ-74) கஜாஸுரனின் மஸ்தகத்தைப் பிளந்து ஸம்ஹாரம் பண்ணின பரமேச்வரன் அதிலிருந்த முத்துக்களை ஹாரமாக்கி அம்பாளுக்குச் சூட்டியிருக்கிறான் என்று வருகிறது. இப்போது நாம் பார்க்கிற ச்லோகத்திலோ மூங்கிலில் முத்து விளையும் என்ற ஐதிஹ்யத்தைப் பொருத்தி, அம்பாளின் மூங்கில் தண்டு போன்ற மூக்கில் முத்து மூக்குத்தி (அல்லது புல்லாக்கு) இருப்பதன் ஔசித்யத்தை (பொருத்தத்தை) எடுத்துக் காட்டுகிறார்.*

*ஆனால் மூங்கிலுக்கு உள்ளேதான் முத்து இருக்கும். இங்கே மூக்குக்கு வெளியே இருக்கிறதே! இது உவமையில் ஔசித்யக் குறைவை உண்டாக்கி விடுகிறதே!*

*அப்படி இல்லை என்று ஸமாதானம் சொல்கிறார். அம்பாளுடைய நாஸிகா மூங்கில் வழியாக அவளுடைய திவ்ய ச்வாஸம் வருகிறது. ஸாதாரணமாக மூங்கில் த்வாரம் வழியே ச்வாஸத்தை விட்டால் அதிலிருந்து வேணுகானம் வருகிறது. இங்கே என்ன வருகிறது? மூச்சானது உள்ளே இருக்கிற முத்தையே அடித்துக்கொண்டு வந்து வெளியிலே மூக்குத்தியாகச் சூட்டிவிடுகிறதாம்!*

*ஸாக்ஷாத் பரதேவதையின் ச்வாஸம்தான் வேதம். முக்தா என்ற முத்தையும் முக்தி என்ற மோக்ஷ நிலையையும் சிலேடையாகச் சேர்ப்பதுண்டு. வேத ரூபமான ச்வாஸத்தால் முக்தி தருகிற முத்து வந்ததாக இங்கே இருக்கிறது. இதில் இன்னொரு வார்த்தை விளையாட்டு சிலேடையும் இருக்கிறது. 'வம்சம்' என்றால் மூங்கில். ஸாக்ஷாத் வேணு*

கோபால மூர்த்தியை ''வம்சீ விபூஷித கராத்'' என்று ஸ்தோத்திரம் பண்ணுகிறோம். வம்சம் என்றால் தலைமுறை, lineage என்றும் ஆரம்பித்தவர் அவளையே ''பனிமலை 'வம்சத்தின் புகழ்க் கொடியே!'' என்று அழைக்கிறார். ''அஸௌ நாஸா வம்ச: துஹிந-கிரி-வம்ச-த்வஜபடி''!

யோக ஸமாசாரம் சொல்கிறேன்: அம்பாளுடைய ச்வாஸத்தினால் உள் முத்து வெளியில் கொண்டு வரப்பட்டது என்கிறபோது, இடது நாஸி வழியாக வெளியில் வரும் ச்வாஸம் என்று குறிப்பிட்டுச் சொல்கிறார். மூல ச்லோகத்தில் 'இடது' என்பதற்கு நேர் வார்த்தை அகப்படாது. ''சிசிர-கர-நிச்வாஸ களிதம்'' என்றிருக்கும். 'நிச்வாஸம்' என்றால் வெளியே விடுகிற மூச்சு, உள்ளே இழுப்பது 'உச்வாஸம்'. 'களிதம்' என்பது வெளியில் கொண்டு வரப் படுவதைத் தெரிவிக்கிற சொல். 'சிசிர-கர' என்றால் என்ன? 'இடது' என்ற அர்த்தம் ஓரிடத்திலும் அதற்குக் கிடையாது. 'சிசிரம்' என்றால் பனி. 'ஹிமம்' என்றாலும் 'சிசிரம்' என்றாலும் ஒன்றுதான். ஆகையால் சிசிரகரன் 'ஹிமகரன்' - அதாவது அம்பாள் விஷயமாகச் சந்திரனை நினைத்துச் சொல்லும்போது ஆசார்யாளின் favourite வார்த்தை! 'சந்திர-நிச்வாஸத்தில்' முத்து வெளியில் வருவதாகச் சொல்கிறார். இது என்ன புதிர்?

யோக சாஸ்திரப் புதிர்தான்! அதன்படி காம-க்ரோதாதிகளில் மனஸ் இழுபடுகிறபோது ச்வாஸம், இடதுமூக்கால் உள்ளே போய், வலது மூக்கால் வெளியிலே வரும். உத்தமமான நினைவுகளில் மனஸ் ஆழ்ந்திருக்கிறபோது இது மாறி உச்வாஸம் வலது நாஸியாலும், நிச்வாஸம் இடது நாசியாலும் ஏற்படும். சித்தமே இல்லாத மனோதீத ஸமாதியில் ச்வாஸமே இல்லாமல் கும்பகமாக நின்றுவிடும்; அப்போது காரியம் என்பது அடியோடு இல்லை. அம்பாள் காரியப் பிரம்மாகவே இருப்பவள். எப்போதும் கருணை என்ற உத்தமோத்தமமான சிந்தனையில் ஆழ்ந்திருப்பவள். இதனால் அவள் வலது நாஸியால் மூச்சை உள்ளே இழுத்து, இடது நாஸியால் அதை வெளியே விடுகிறாள்.

''அதிருக்கட்டும். 'சிசிரகர-நிச்வாஸம்' - 'சந்திர வெளிமூச்சு' என்ற ஏன் சொன்னார் என்பதல்லவா கேள்வி?''

யோக சாஸ்திரத்தில்தான் இந்த விஷயமும் வருகிறது. வலது பக்கத்தில் ச்வாஸம் ஸஞ்சரிக்கிற நாடிக்கு பிங்களா என்றும் ஸூர்ய நாடி என்றும் பெயர். இடது பக்கத்தில் ச்வாஸம் ஸஞ்சரிக்கிற நாடிக்கு இடா என்றும் சந்திர நாடி என்றும் பெயர். மத்ய நாடிக்கு ஸுஷும்னா என்றும் அக்னி நாடி என்றும் பெயர். பரமாத்மாவேதான் ஜீவாத்மா என்பதால் இதைத்தான், பரமாத்மாவுக்கு இடது கண் சந்திரன், வலது கண் ஸூர்யன், நடுக் கண் அக்னி என்பது. இடது பக்க மூச்சுக் குழாய்க்குச் சந்திரன் பேர் இருப்பதால்தான் ''சிசிர-கர'' என்றார். ஆனந்த லஹரி பாகத்தில்தான் இந்த விஷயங்கள் நிறையச் சொல்லி ஆயிற்றே என்று, அழகையே வர்ணிக்கும் இந்த பாகத்தில் இதை விஸ்தாரம் பண்ண வேண்டாமென்று, ஆனாலும் விஷயஜ்ஞர்கள் ஸந்தோஷப்படும்படி ஒரே ஒரு வார்த்தையைப்போட்டு, மேலே ஒன்றும் வளர்த்தாமல் அதோடு விட்டு விட்டார்.

## உவமையற்ற உதட்டழகு

*கேசாதி பாத வரிசையில் நாஸிக்கப்புறம் வாய். வாயை மூடியிருக்கும் உதட்டை முதலில் வர்ணிக்கிறார் (ச்லோ-62) ஸாதரணமாகப் பவளத்துக்குத்தான் சிவப்ப உதட்டை உவமிப்பது வழக்கம். ஆனால் பவளச் சிவப்பெல்லாம் ஒரு சிவப்பேயில்லை என்கிற மாதிரி அப்படியோரு அழுத்தமான சிவப்பாக அம்பாளின் உதடு இருக்கிறது. இங்கே ஆசார்யாள் பவளம் என்பது ஒரு கொடி என்ற பொது அபிப்ராயத்தை வைத்துக் கவி கட்டியிருக்கிறார். பொதுவாகக் கொடிகள் பச்சையாயிருக்கும். அவற்றில் பழுக்கிற பழம் சிவப்பாயிருக்கும். கொடியே சிவப்பாகவுள்ள பவளமும் பழுத்தால் அந்தப் பழம் இன்னும் எத்தனை சிவப்பாயிருக்கும்? அதை வேண்டுமானால் உதட்டுக்கு உவமிக்கலாமென்று பார்த்தால் - ஊஹூம், அப்படிப் பண்ணுவதற்கில்லை, ஏனென்றால் பவளப் பழம், பவளக் காய் என்றெல்லாம் எதுவும் அடியோடு இல்லையே! - என்று அங்கலாய்த்துக் கொள்கிறார். 'பவளக்கொடி' என்று நாம் சொன்னாலும் - அந்தப் பேரில் அர்ஜுனன் பெண்டாட்டிகளில் ஒருத்தியைச் சொல்கிறதுண்டு - வாஸ்தவத்தில் அது ஆக்டோபஸ் வகையறாவைக் சேர்ந்த ஒரு ஜலஜந்துவின் அஸ்தி (எலும்புக்கூடு)தான். அதற்குக் காய், பழமெல்லாம் எங்கிருந்து வரும்? ஸரி, கோவைப்பழம் என்று (உதட்டுக்கு) இன்னொரு உபமானம் சொல்வார்களே, அதையாவது இப்போதும் உவமிக்கலாமென்பதால், அதற்கு ஸம்ஸ்க்ருதத்தில் என்ன பெயர்? ''பிம்பம்'' என்று பெயர். பிம்பம் என்றால் கோவை. பிம்பம் என்றால் ப்ரதிபிம்பம் என்றும் அர்த்தம். அப்படித்தான் இந்த கோவைக்கும் பிம்பப் பேர் உண்டாயிற்று. அது எதற்கு ப்ரதிபிம்பம்? அதற்கு எது மூல பிம்பம்? அம்பாள் உதடேதான் அதற்கு மூலபிம்பம். ஒரு விளையாட்டாக அம்பாள் அந்தக் காயின் பளபளப்பான தோலியின்மேல் தன் உதட்டின் ப்ரதிபிம்பம் விழப்பண்ணித்தான் அதைச் செக்கச் சிவக்க ஆக்கி 'பிம்பம்' என்கிற பெயர் பெறும்படியாகப் பண்ணியிருக்கிறாள். இருந்தாலும் அதற்கு மூல பிம்பத்தின் சிவப்பு வரவில்லைதான்! மூலம் மாதிரி சிவக்கணும் என்று அது எகிறிப் பார்த்ததாம்! ''அத்யாரோடும்'' என்று ஆசார்யாள் போட்டிருக்கிறார். அதற்கு 'சக்திக்கு மிஞ்சி எகிறுவது அர்த்தம். அப்புறம், 'இதென்ன பைத்தியக்காரத்தனம்? அம்பாள் உதட்டுக்கு நாம் ஈடாவது என்றால் நடக்கக்கூடியதா?'' எனறு வெட்கப்பட்டுக்கொண்டு சும்மாயிருந்துவிட்டதாம். ''கதமிவ ந விலஜ்ஜேத?'' - 'எப்படி வெட்கப்படாமலிருக்கும்?' என்று ஆசார்யாள் கேட்கிறார். வெட்கத்திலும் சிவப்பேறுவதுண்டல்லாவா? 'நாணிச் சிவந்து என்பார்கள். அப்படி இன்னம் சிவப்பாகணும் என்ற முயற்சியை வெட்கப்பட்டுக்கொண்டு விடுவதிலேயே அந்தக் கோவைப்பழம் இன்னம் கொஞ்சம் சிவந்து விடுகிறது! இருந்தாலும் மூல பிம்பத்துக்கு ஈடாக முடியவில்லை! அப்படிப்பட்ட ப்ரதிபிம்பத்தைப் போய் மூல பிம்பமான அம்பாளுக்கு உவமையாகச் சொல்வது ஒரு தாயாரை 'அவள் குழந்தையின் ஜாடையாயிருக்கிறாள்' என்று சொல்கிற மாதிரி அஸம்பாவிதம்தானே?*

*அம்பாளுடைய உதடு அநுபமமானது (உவமையற்றது) என்று தாத்பர்யம்.*

**நிலவும் புளித்துப்போகும் புன்னகை!**

*உதட்டைச் சொன்னவிட்டு அம்பாளுடைய வாயிலிருந்து பெருகுகிற சிரிப்பழகைச் சொல்கிறார். கவியழகு பெருகுகிற ச்லோகம் (63)*

**ஸ்மித-ஜ்யோத்ஸ்நா-ஜாலம் தவ வதந-சந்த்ரஸ்ய பிபதாம்**
**சகோராணாம் ஆஸீத் அதிரஸதயா சஞ்சு-ஜடிமா ।**
**அதஸ்தே சீதாம்சோ: அம்ருதலஹரீம் ஆம்லருசய:**
**பிபந்தி ஸ்வச்சந்தம் நிசி நிசி ப்ருசம் காஞ்ஜிக-தியா ॥ 63**

*வர்ணனை ஆரம்பத்திலேயே சந்திரமௌளீச்வரியாகச் சொன்னார். அங்கே முகத்திற்கு மேலே கிரீடத்தில் சந்த்ரன். இங்கே முகமே சந்த்ரன்! 'தவ வதனசந்த்ர'' - 'உன் முக மதி', 'உன் மதிமுகம்'. முகம், வாய் இரண்டையும், ஒரே வார்த்தை குறிக்கும் என்பதால் 'வதனம்' என்பது வாயையும் சொல்லலாம். ''வத்'' என்று 'பேசுவது' என்பதற்கு தாது. ''ஸத்யம் வத'' என்கிறபோது 'வத' என்றால் 'பேசு' ஆகையால் 'வதனம்' என்றால் முதல் அர்த்தமே வாய்தான் என்று சொல்லலாம். அவரோஹ வரிசை வர்ணனையில் மூக்குக்கு அப்புறம் வாய் என்ற க்ரமத்தில் நாஸி வர்ணனை ஆனதும் உதடு, அப்புறம் உதட்டுக்குள்ளே உள்ள வாய் என்பதால் 'வதனம்' என்று போட்டிருக்கிறார். ஆனாலும் இங்கே குறிப்பது முகத்தைத்தான். 'மதிமுகம்' தான் உண்டு: 'மதி வாய்' என்பதில்லை.*

*மதி முகத்திலிருந்து நிலா பெருகுகிறது. ஆகாச சந்திரனின் மத்தியில் களங்கம் என்கிற கறுப்புத் திட்டுதான் இருக்கும். ஆனால் அம்பாளுடைய வதன சந்த்ரனின் மத்தியிலுள்ள வாயில் வெள்ளை வெளேரென்று பல் வரிசை இருக்கிறது. அந்தப் பல்லின் ஒளி விசேஷமாகத் தெரிவது அவள் சிரிக்கிறபோதுதான். கவிகள் ஸ்திரீகளுடைய கண்ணிலிருந்து பார்வை 'கருகரு' என்று பாய்வதாகவும், வாயிலிருந்து சிரிப்பு வெள்ளை வெளேரென்று பெருகுவதாகவும் சொல்வார்கள். அப்படித்தான் ஆசார்யாள் 'ஸ்மித ஜ்யோத்ஸ்நா ஜாலம் தவ வதன சந்த்ரஸ்ய' என்கிறார். 'தவ வதனசந்த்ரஸ்ய'' - 'உன் முக சந்திரனுடைய'; ''ஸ்மித'' - 'சிரிப்பாகிய'; ஜ்யோத்ஸ்நா'' - 'நிலவு'; 'ஜாலம்' - 'வீச்சை'. ''சிரிப்பு என்ற ரூபத்தில் பரவி வீசுகிற உன் முக சந்திரனுடைய நிலவை''.*

*'நிலவை'? யார் என்ன பண்ணினார்கள்?*

*சகோரம் என்று ஒரு பக்ஷி. அது சந்த்ரிகையைப் பானம் பண்ணியே ஜீவிப்பது என்பார்கள். சந்திரனிலிருந்து அம்ருதம் உண்டாகிறது; அந்த அம்ருதமே ரச்மியாகப் பரவுகிறது; அந்த நிலவு ரச்மிகளையே சகோரம் பானம் பண்ணும் என்று* poetic tradition *ல் - கவி மரபில் - சொல்வது. அந்தச் சகோரம் அம்பாளுடைய மந்தஹாஸ சந்த்ரிகையைக் குடித்ததாம்! ''பிபதாம் சகோராணாம்'' - குடிக்கிற சகோரபக்ஷிகளுக்கு.*

*அந்தப் பக்ஷிகளுக்கு என்ன ஆச்சு?*

**''அதிரஸதயா சஞ்சு ஜடிமா ஆஸீத்.''**

*அதென்ன அதிரஸம்? 'வடை, பாயஸம், அதிரஸம்' என்கிறதா?*

*இல்லை. 'அதி-ரஸம்' என்றால் அதீதமான ரஸம். அம்பாளுடைய மந்தஹாஸ நிலா அதீதமான தித்திப்போடு இருப்பதைத்தான் 'அதிரஸம்' என்கிறார். இப்படி ஒரே தித்திப்பைக் குடித்ததில் அந்த சகோர பக்ஷிகளின் அலகு மரத்தே போய்விட்டதாம்! அலகால்தானே ஒரு பக்ஷி சாப்பிடுவது, குடிப்பது எல்லாம்? மந்தஹாஸ நிலாவைக் குடித்த அப்புறம் ஒரு ருசியும் தெரியாதபடி அந்தப் பக்ஷிகளுடைய அலகுகள் உணர்ச்சியிழந்து விட்டன! ''அதிரஸதயா'' - 'அதீதத் தித்திப்பால்'; ''சகோராணாம்'' - 'சகோரங்களுடைய'; ''சஞ்சு'' - 'அலகு'; ''ஜடிமா'' - 'ஜடமாக', 'மரத்துப் போனதாக'; ''ஆஸீத்'' - 'ஆகி விட்டது'.*

*இப்படி ஆகிவிட்டதே! அதை எப்படி ஸரிப்பண்ணுவது? மரத்துப்போன அலகுக்கு மறுபடி ருசி தெரியும்படிப் பண்ண என்ன செய்யலாம்?*

*என்ன செய்யணுமோ அதை அந்தப் புத்திசாலிப் பக்ஷிகளே செய்துகொண்டுவிட்டன! ஸாக்ஷாத் ஞானாம்பாளின் மந்தஹாஸத்தைப் பானம் பண்ணியதால் புத்திசாலிகளாகி வழி கண்டுபிடித்து விட்டன!*

*நம்மால் ஒரே சர்க்கரைப் பொங்கலாகச் சாப்பிட்டுக் கொண்டு போக முடிகிறதா? ஓரளவு சாப்பிட்டதும் திகட்டி விடுகிறது. அப்போது தித்திப்பு இல்லாத வேறே ஏதோ ஒன்றைச் சாப்பிட்டால் திகட்டல் போகிறது; மறுபடி தித்திப்பை 'மொக்க' முடிகிறது! தித்திப்பு பக்ஷணம். உப்பு பக்ஷணம் என்று இரண்டு தினுஸாகப் பண்ணுவதற்கே அதுதான் காரணம். ஆனால் உப்பைவிடக்கூடப் புளிப்புதான் மரத்துப்போன வாயை நன்றாக மாற்றி, மொக்கும்படிப் பண்ணும். இந்த விஷயம் அந்த சகோர பக்ஷிகளுக்குத் தெரிந்திருக்கிறது. அதனால், லோகத்தில் நமக்குத் தெரிந்த தித்திப்பு பக்ஷணங்களையெல்லாம்விடத் தித்திப்பான அம்பாளுடைய மந்தஹாஸாம்ருதத்தைப் பானம் பண்ணி அலகு மரத்துப்போன பக்ஷிகள் மாற்றாகப் புளிக்கஞ்சியைத் தேடிக்கொண்டே போயிற்றாம். நமக்குக் கூட ஜுரம், கிரம் வந்து நாக்கு மரத்துப்போனால், 'பால் கஞ்சி வேண்டாம். மோர்க்கஞ்சி கொடு. ஆல்பகோடா பழம் வாங்கிண்டு வா'' என்று புளிப்புத்தானே கேட்கிறோம்? ஒரு எலுமிச்சை, நார்த்தை இலையையாவது மோந்தால் அந்தப் புளிப்பு வாடை ஹிதமாயிருக்கிறது. அப்படித்தான் சகோர பக்ஷிகள் புளிக்கஞ்சியைத் தேடிக் கொண்டு போனது.*

*''அத:'' - 'ஆனபடியால்', 'அலகு மரத்துப்போன படியால்'; 'தே' - 'அவை', 'அந்த சகோர பக்ஷிகள்'; ''ஆம்ல ருசய:'' - ''புளிப்பு ருசிக்காக'', 'புளிப்பை ருசிக்க வேண்டும் என்ற எண்ணம் உள்ளவையாக'-*

*என்ன செய்தன?*

*ஆகாசத்திலிருந்து சந்திரன் அம்ருதமயமான சந்திரிகையைப் பொழிந்து கொண்டிருந்தான். ''சீதாம்சோ: அம்ருத லஹரீம்'' - 'சீதாம்சோ:' என்றால் 'சீதளமான கிரணங்களைக் கொண்ட சந்திரனுடைய'; ''அம்ருத லஹரீம்'' - 'அம்ருதப் பெருக்கை', அதாவது, நிலவை...*

*நிலவைப் பானம் பண்ணுகிற சக்தியை அந்தப் பக்ஷிகளுக்கு அம்பாள் கொடுத்திருந்தாள் - தன்னுடைய மந்தஹாஸ நிலவு அந்த நிலவை எப்படித் தூக்கியடிக்கிறது என்று காட்டுவதற்குத்தானோ, என்னவோ? அதனால் அந்த சகோர பக்ஷிகள் அந்த அம்ருத கிரணங்களை 'டேஸ்ட்' பண்ணிப் பார்த்தன. பார்த்தால்? அம்ருதத்தை விட 'டேஸ்ட்'டாக ஒன்று கிடையாது என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் புளிக்கஞ்சியைத் தேடிக் கொண்டு போன சகோரங்களுக்கு அந்த அம்ருத சந்திரிகையே அதுகளுக்கு வேண்டியிருந்த வெறும் புளிக்கஞ்சியாகத்தான் தெரிந்ததாம்! ''அப்பாடா! மாத்து கண்டுபிடிச்சுட்டோம்! அம்பாளோட முக சந்திரனின் சிரிப்பு நிலாவைச் சாப்பிட்டுத் திகட்டிப்போன வாய் மாற்றத்துக்கு - மரத்துப்போன அலகுக்கு மறுபடி உணர்ச்சி வரவழிக்கிறதுக்கு - வழி கண்டு பிடிச்சுட்டோம்! ஆகாச சந்திரனோட அம்ருத நிலாதான் மாத்தா இருக்கற புளிக்கஞ்சி'' என்று ஸந்தோஷப்பட்டுக்கொண்டு ப்ரதி ராத்ரியும் இஷ்டங்கொண்ட மட்டும் நிலாவைப் பானம் பண்ண ஆரம்பித்துவிட்டனவாம்! ''சீதாம்சோ: அம்ருத லஹரீம் - 'சந்திர கிரணங்களான அம்ருதப் பெருக்கை' ''காஞ்ஜிக தியா'' - புளிக்கஞ்சி என்ற அறிவினால்', 'புளிக்கஞ்சி என்று புத்திசாலித்தனமாக அறிந்து கொண்டு', ''நிசி நிசி''' - 'ப்ரதி ராத்ரியும்'; ''ஸ்வச்சந்தம்'' - 'மனம் கொண்ட மட்டும்', 'யதேஷ்டமாக'; ''ப்ருசம்'' - 'நிறைய'; ''பிபந்தி'' - 'குடிக்கின்றன'.*

*'கஞ்சி என்ற அறிவால்' என்பதற்கு ''காஞ்ஜிக தியா'' என்று போட்டிருக்கிறார். ஆசார்யாள் அவதரித்து மலையாள தேசத்தில் அங்கேதான் கஞ்சி விசேஷமாகச் சாப்பிடுவது 'மலையாளம் கஞ்சி' என்றே சொல்கிற வழக்கமிருக்கிறது.*

*நிலவான அம்ருதமும் வெறும் புளிக்கஞ்சியாக, காடித் தண்ணியாக ஆகிவிடுகிற அப்பேர்ப்பட்ட மாதுர்யம் அம்பாளுடைய மந்தஸ்மிதத்திற்கு இருக்கிறது என்ற அபிப்ராயத்தைச் சகோரங்களை வைத்து அழகான கவிதையாக ஆசார்யாள் அநுக்ரஹித்திருக்கிறார். அந்தப் பக்ஷிதான் சந்த்ரிகையின் ரூபத்தில் உள்ள அம்ருதத்தையே குடிக்கிறதாக்கும் என்று சொல்லி அதற்கு உயர்வு சொல்கிறது பொது வழக்கம். பொது வழக்குக்கு வித்யாஸமாக நூதன கல்பனை செய்வதுதானே ஆசார்யாளின் சிறப்பு? அதனால் அவர் என்ன பண்ணியிருக்கிறாரென்றால் ''அம்ருதத்தையே என்று 'யே' போட்டு அதனால் அதை ஆஹாரம் பண்ணுகிற ஒரே பக்ஷி என்று சகோரத்திற்குப் பெருமை ஒன்றும் சொல்ல வேண்டாம். இந்தப் பெருமையைவிடப் பெருமை அதற்கு இருக்கிறது! என்னவென்றால் அம்ருதத்தையும் எது புளிக்கஞ்சியாக்குமோ அப்படிப்பட்ட ஸாக்ஷாத் பரதேவதையின் மந்த்ஹாஸ மஹாம்ருதத்தையேவாக்கும் அது ஆஹாரம் பண்ணக்கூடியது! அதற்கு ஒரு மாற்றுத் தேடியே மூணாம் தர, நாலாந்தரப் பண்டம் மாதிரி சந்த்ரிகாம்ருதத்தை அது பானம் பண்ண ஆரம்பித்தது'' என்று புதுக்கருத்துத் தெரிவித்து இருக்கிறார்.*

*அம்ருதத்தைச்சாப்பிட்ட தேவர்களும் அழிந்து போகிற மஹா ஸம்ஹாரத்தில்கூட ஈச்வரன் மாத்திரம் அழியாமலிருக்கிறான் என்று பூர்வ பாகத்தில் வந்தபோது க்ஷீராப்தியைக் கடைந்தெடுத்த ஸ்தூலமான அம்ருதத்திற்கும் மேற்பட்டதான சைதன்யாம்ருதமே அம்பாபளாக மூர்த்தீகரித்து, அப்படிப்பட்டவளுடைய நித்ய ஸங்கள்*

*ஈச்வரனுக்கு இருப்பதால்தான் அவனுக்கு அழிவேயில்லை என்று சொன்னேன். இங்கே க்ஷீராப்தியிலிருந்து வந்த சந்திரனிடமிருந்து வரும் அம்ருதத்தின் ருசியைவிட அம்பாளின் வதன சந்திரனிலிருந்து வரும் மந்தஹாஸாம்ருதத்தின் ருசி ரொம்பவும் மேற்பட்டது என்று பார்க்கிறோம். சைதன்யாம்ருதமேதான் இங்கே ஸௌந்தர் யாம்ருதமான அம்பாள் ரூபமாக, அதில் முகமாக, அந்த முகத்தில் மந்தஹாஸமாக ஆகியிருக்கிறது. ''வதன ஸௌந்தர்ய லஹரீ'' எனறு முன்னே சொன்னார். இங்கே ''வதன சந்தர''னைச் சொல்லி, அது சந்திரனின் ''அம்ருத லஹரீ''யையும் புளிக்கஞ்சியாக்குகிறது என்கிறார். நமக்கெல்லாம் நிலா என்பது கண்ணுக்குத் தெரியும் ப்ரகாசந்தான். அதனால் அதைவிட அம்பாளின் சிரிப்பு ஸௌந்தர்யமானது என்றே சொல்லியிருக்கணும். ஆனால் சகோரத்தைக் கொண்டு வந்து அதை (நிலவை) வாய்க்கு ருசியான பண்டமாக ஆக்கி அதைவிட அம்பாளின் சிரிப்பு மாதுர்யமானது என்று சொல்லி இருக்கிறார்! இந்த எல்லா அபிப்ராயங்களையும் சேர்த்துப் பார்க்கும்போது சைதன்ய லஹரியே ஸௌந்தர்ய லஹரியாகிக் கண்ணுக்கு ருசியாயும், அம்ருதத்திற்கும் மேற்பட்ட மஹா மாதுர்யத்துடன் நாக்குக்கு ருசியாயும் ஆகிறதென்று தெரிகிறது. அந்த சைதன்யம், ஸௌந்தர்யம், மாதுர்யம் எல்லாம் ஸாரத்தில் அம்பாளுடைய பரம ப்ரேமைதான்! அந்த ப்ரேமாம்ருதத்தையே, ப்ரேம சந்த்ரிகையையே பானம் பண்ணிக் கொண்டிருக்கும் சகோரக் குஞ்சுகளாக நாமெல்லாம் ஆக வேண்டும்.*

*சகோரம் மாதிரி நம்மால் சந்திரிகையைச் சாப்பிட முடியாவிட்டாலும் நாமே சமைத்ததை சந்திரிகை அப்படியே பொழிகிற பௌர்ணமியில் நிலாச் சாப்பாடு என்று சாப்பிடுகிறோம். அப்போது நிலா அது வீசுகிற அட்மாஸ்ஃபியரையே ஹிதமானதாக ஆக்குவதால்! ஹிமகரன் ஹிதகரனாயுமிருக்கிறானா! பூர்ண சந்த்ரனென்றால் அத்தனை ஜனங்களுக்கும் ஒரு ஆனந்தம், ஹிதம், அஞ்ஞானம் இருட்டு. ஞானம் வெளிச்சம். அதனால் 'ஞான ஸூர்யன்' என்றாலும், ஸூர்ய வெளிச்சத்தின் உஷ்ணம் அஹிதமாயிருக்கிறது. சந்திரனோ ஹிதமாக இருந்துகொண்டே வெளிச்சமாயுமிருந்து இருட்டைப் போக்குகிறான். அப்படித்தான் ஞானாம்பாள் ஹிதமாகவே அஞ்ஞான நிவ்ருத்தி அருளுகிறாள். புருஷ ஸூக்தத்தில் பரமாத்மாவின் மனஸிலிருந்து சந்திரன் ஜனித்தது என்று இருக்கிறது. அப்படியானால் அந்த மனஸு எத்தனை ஹித சீதளமாயிருக்கணும்? ஆகையினாலேயே நமக்குப் பரம ஹிதையான அம்பாள் பல விதங்களில் சந்திர ஸம்பந்தமுள்ளவளாக இருக்கிறாள். அவளே சந்திர மண்டலத்திற்குள் வஸிக்கிறாள்; ''சந்த்ர மண்டல மத்யகா'' என்று ஸஹஸ்ரநாமம் சொல்கிறது. அவளுக்குரிய திதியும் பௌர்ணமிதான்; அன்றைக்குத்தான் விசேஷ பூஜை பண்ணுவது. சிரஸில் சந்த்ரகலை வைத்துக் கொண்டிருக்கிறாள். யோகி சிரஸுக்குள் அவளே பூர்ண சந்த்ரனாகி அம்ருதம் பொழிகிறாள். பாமரமான நமக்கும் ஆசார்யாள் அவளுடைய மந்தஹாஸ சந்த்ரிகையைக் கொடுத்திருக்கிறார். அதை ஸ்மரித்து, ஸ்மரித்து அதிலிருந்து பெருகும் காருண்யாம்ருதத்தைப் பானம் பண்ணும் சகோரக் குஞ்சுகளாக இருப்போம்!*

## தாம்பூலப் பிரஸாதம்

*பல்லின் வெளுப்புதான் சிரிப்பில் பிரகாசிப்பது. அதைச் சொன்ன அப்புறம் அம்பாளுடைய நாக்கின் சிகப்பிலே வெள்ளை ஸரஸ்வதி செக்கச் செவேலாகிறாள்*

*என்கிறார் (ச்லோ.64) அந்த விஷயம் முன்னேயே சொல்லி விட்டேன். சிகப்பு, வெளுப்பு இரண்டும் கலந்த தாம்பூல உச்சிஷ்டத்தைப் பற்றி அதற்கடுத்த ச்லோகத்தில் சொல்கிறார். வாயிலேயுள்ள நாக்கு, பல், உதடு எல்லாவற்றோடும் ஸம்பந்தப்படுவதல்லவா தாம்பூலம்?*

*''ஸரி, அது வாயைச் சிவப்பாகத்தானே ஆக்குவது? அதிலே வெள்ளை எப்படிக் கலக்கும்?'' என்று கேட்டால்,*

*தாம்பூலத்திலுள்ள வெள்ளையான பச்சைக் கர்ப்பூரத் தூள் சந்திரனையே பொடி பண்ணிப் போட்டாற் போலிருக்கிறது - ''சசி விசத கர்ப்பூர சகலா:'' - என்று ஆசார்யாளே குறிப்பிட்டுச் சொல்லியிருப்பதால்தான் அப்படிச் சொன்னேன். ''நாக்கு நுனியிலிருக்கிற வெள்ளை ஸரஸ்வதி சிவப்பானதை மட்டும் சொன்னோமே! பாஷ்யம் எழுதுவது, ஸ்தோத்ரம் பாடுவது எல்லாவற்றுக்கும் சாரதா, சாரதா என்று பெருமைப்படுத்தி அம்பாளுடைய நாக்கு நுனியில் புரளுகிற தாம்பூலத்தில் அவளுடைய வெள்ளையும் கலந்ததாகச் சொல்லலாம்'' என்று ஆசார்யாள் நினைத்திருப்பாரோ என்னவோ?*

*''வாய் நிறைய வெற்றிலை'' என்று ஸுமங்கலிகளைப் பரம மங்களமாகச் சொல்வது. அதைத்தான் ''தாம்பூல பூரித முகீ'' என்று ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருக்கிறது. ஸர்வ மங்களையான ஸாக்ஷாத் அம்பாளை அப்படித்தான் மனக் கண்ணில் நிறுத்திக்கொள்ள வேண்டும்.*

*அவளுடைய தாம்பூல உச்சிஷ்டத்திற்கு மிஞ்சி ஒரு ப்ரஸாதமில்லை. எச்சில், துப்பல் எல்லாம் நமக்குத்தான் நிக்ருஷ்டம். நம்முடைய சரீரம் மாம்ஸ மயமானதாக இருப்பதால் அப்படி. அம்பாள் சரீரமோ அகாராதி க்ஷகாராந்த அக்ஷர மய, மந்த்ர மய ஸ்வரூபம். அதற்கும் மேலே, அன்பினாலேயே அன்புக்காகவே ஏற்பட்ட ப்ரேம ஸ்வரூபம். ஆகையினால் அவளுடைய உச்சிஷ்ட தாம்பூலமும் உத்க்ருஷ்டமாக இருக்கிறது.*

*அதைப் பெறுகிறது யார்? எவரோ பூலோகத்துப் பரம பக்தர், ரிஷி, கவி என்று ஆசார்யாள் முடித்துவிடவில்லை. ஸாக்ஷாத் அவளுடைய அருமைத் குழந்தையான குமார ஸ்வாமியும், அவளிடமிருந்தே ப்ரஹ்ம வித்யா உபதேசம் பெற்ற இந்த்ரனும், அவளுடைய ஸாக்ஷாத் புருஷ ரூபமான மஹாவிஷ்ணுவுமே இந்த உச்சிஷ்ட தாம்பூல ப்ரஸாதம் பெறுவதாக 'ஸீன்' ஜோடித்திருக்கிறார்.*

*ஸேநாதிபதிகளுக்கு ஆதர்சமாக க்ருஷ்ண பரமாத்மாவே கீதையில் சொல்லியிருப்பது குமாரஸ்வாமியைத்தான். மஹா வெற்றிகளை ஸாதித்துத் தருகிற அவனுடைய வேலுக்குப் பேரே சக்தி! அது பராசக்தி ஸ்வரூபம். தேவஸேநாபதியான அவன் தேவர்கள் நலனுக்காகவே யுத்தத்திற்குப் போவானாதலால் தேவராஜா இந்த்ரனும் அவன் பின்னோடு ஒட்டிக்கொண்டு போவான். அந்த 'இந்த்ரனோடு ஒட்டிக்கொண்டிருக்கிறவர்' என்ற அர்த்தத்தில் மஹாவிஷ்ணுவுக்கு உபேந்த்ரன் என்ற பெயருண்டு. வாமனாவதாரத்தில் இந்த்ரனுடைய மாதா-பிதாக்களான அதிதி-காச்யபர்களுக்கே பகவான் புத்ரனாகப் பிறந்ததால் இப்படிப் பேர். அந்தப் பேரைத்தான் ஆசார்யாள் இங்கே போட்டிருக்கிறார், ''விசாகேந்த்ரோபேந்த்ர'' - 'விசாக'*

*+ 'இந்த்ர' + 'உபேந்த்ர' என்று. குமாரஸ்வாமி அந்த இரண்டு ஸகாக்களோடு ஏதோ ஒரு தேவாஸுர யுத்தத்தில் அமோக ஜயம் பெற்றுவிட்டு அகத்திற்கு - சிவ-சக்திகளின் க்ருஹத்திற்கு - திரும்பி வருகிறாராம். அந்த மூன்று பேருக்கும் ஒரே குறிதான். அம்பாளுடைய உச்சிஷ்ட ப்ரஸாதம் சாப்பிடவேண்டும் என்பதுதான் அது.*

*குமாரஸ்வாமியின் அவதாரத்திற்கு முன்னால் தேவர்கள் அஸுரர்களை ஒரு யுத்தத்தில் ஜயித்தபோது அது தங்களுடைய ஸொந்த சக்தியாலேயே ஸாதித்த ஸாதிப்பு என்று அஹம்பாவப்பட்டார்கள். அந்த ஸமயத்தில் எவருடைய எப்பேர்ப்பட்ட சக்திக்கும் மூலமாக இருக்கப்பட்ட பராசக்தி அவர்களை த்ருண மாத்ரமாக்கி, ஒரு த்ருணத்தைக்கூட அவர்களால் அசைக்கமுடியாதபடி பண்ணினாள். அப்போது இந்த்ரனுக்குத்தான் முதலில் நல்லறிவும், அடக்கமும் உண்டாயிற்று. உடனே அம்பாள் கருணை கொண்டு அவனுக்கு ப்ரஹ்ம வித்யா உபதேசம் செய்து, அகண்டமான ஒரே ப்ரம்ம சக்திதான் கண்டம் கண்டமான மற்ற எல்லா சக்திகளுக்கும் ஆதாரமாயிருப்பது என்று புரியவைத்தாள், அந்தக் கதை கேநோபநிஷத்தில் வருகிறது.*

*விசாக, இந்த்ர, உபேந்த்ரர்களான மூன்று பேரும் தாங்கள் பெற்ற யுத்த ஜயத்தையெல்லாம் விநயத்தோடு பரதேவதைக்கே அர்ப்பணம் பண்ணி, அவள் ப்ரஸாதத்தால்தான் அது கிடைத்தது என்று நமஸ்காரம் பண்ணி அவளுடைய உச்சிஷ்ட ப்ரஸாதத்தையே பஹுமானமாகப் பெறுவதற்காக ஓடோடி வருகிறார்கள்.*

*அம்பாள் சாப்பாடு போடுவாளே தவிரத் தான் சாப்பிடுவதை நினைக்கமாட்டாள். பக்தர்களின் திருப்திக்காக, அந்தக் குழந்தைகள் தன்னுடைய ப்ரஸாதம் என்று தினுஸு தினுஸாகச் சாப்பிடட்டும் என்றுதான் தினுஸு தினுஸாக நைவேத்யங்களை அவள் ஏற்றுக்கொள்வது. ஸ்வக்ருஹத்தில் அவளுக்குச் சாப்பாடு வேண்டுமென்பதேயில்லை. ஸுமங்கலி லக்ஷணமாகத் தாம்பூல தாரணம் பண்ணிக் கொண்டிருந்தாலே போதும். அப்படித்தான் பண்ணுவாள். (சிரித்து) வெற்றிலை போட்டுக் கொண்டாலே பசி மந்தித்துவிடும்தான்!*

*அந்த க்ருஹத்திலே ஸ்வாமிக்குத்தான் யதேஷ்டமாக பக்ஷ்யம், போஜ்யம், நிவேதனம் பண்ணுவது - அப்போதாவது கப்பரையைத் தூக்கிக்கொண்டு பிக்ஷாண்டியாகத் திரியாமலிருப்பாரா என்பதற்காக! இப்போது ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியும், மஹாவிஷ்ணுவும், இந்த்ரனும் திரும்பி வந்தபோது ஸ்வாமி போஜனம் முடித்து நிறைய ப்ரஸாத சேஷம் இருக்கிறது. ஆனால் இவர்கள் அதைச் சீண்டவுமில்லை. அப்பாவின் உச்சிஷ்டமான பக்ஷ்ய போஜ்யங்களைவிட அம்மாவின் உச்சிஷ்டமான தாம்பூலச் சக்கைக்குத்தான் அவர்கள் பறப்பது! இதற்கு ஒரு உபகாரணமும் ஆசார்யாள்* subtle *-ஆக (ஸூக்ஷ்மமாக), ஸங்கேதமாகச் சொல்கிறார்: ''சண்டாம்ச நிர்மால்ய விமுகை:'' - 'சண்டிகேச்வரருடைய பங்கான ப்ரஸாத சேஷத்தில் மனஸ் வைக்காதவர்களாக' என்று. என்ன 'பாயின்ட்' என்றால்: பரமேச்வரனுக்கு நைவேத்யமாகி மீந்தசேஷத்தில், அவருடைய உச்சிஷ்டத்தில், சண்டிகேசருக்கு பலி போட்டுவிட்டுத்தான் மற்றவர்கள் ஸ்வீகரிக்கலாம். நாமெல்லாம் அப்படிப் பண்ணுவதை பாக்யமாகவே நினைக்கிறோம். இந்த பூலோகத்தில் நம் மாதிரி*

*மநுஷ்யராகப் பிறந்துவிட்டு பக்தி விசேஷத்தால் ஸாக்ஷாத் பரமேச்வர குடும்பத்தில் ஸ்வாமி-அம்பாள்-கணபதி-ஸுப்ரமண்யர்களோடு ஐந்தாமவராகச் சேர்ந்தவர் சண்டிகேச்வரர். 'பஞ்சமூர்த்தி புறப்பாடு' என்று இந்த ஐந்து பேரைத்தான் உத்ஸவங்களில் பவனி எடுத்து வருவது. அவ்வளவு சிறப்புப் பெற்ற சிவனடியாரின் ப்ரஸாதமாகவும் சிவ ப்ரஸாதமே ஆவது இரட்டிப்பு விசேஷம் என்று நாம் கொண்டாடி அதை ஸ்வீகரிக்கலாம். ஆனால் ஸாக்ஷாத் சிவகுமாரனாகவும், அம்பாள் மாதிரியே சிவ சரீரத்தில் பேர்பாதி பெற்றவராகவும் தேவர்களுக்கெல்லாம் ராஜாவாகவும் இருக்கிற அந்த மூன்று பேர் மநுஷராயிருந்து தேவரான ஒருத்தர் ஸ்வீகரித்துக்கொண்டு வைத்த மிச்சந்தான் தங்களுக்கு என்றால் ஒரு மாதிரிதானே* feel *பண்ணுவார்கள்? இதைத்தான் மறைபொருளாக ''சண்டாம்ச நிர்மால்ய விமுகை:'' என்று சொல்லியிருக்கிறார். ''விமுகை:'' என்றால் ''மனஸ் வைக்காதவர்களாக'' என்று சொன்னேன். நேர் அர்த்தப்படி ''மூஞ்சியைத் திருப்பிண்டு'' என்றுகூடச் சொல்லலாம்!*

*''அம்மா அநுக்ரஹத்திலே, அவள் போட்ட பிச்சையிலே அஸுராளை ஜயிச்சாச்சு. அவளுக்கு* thanks-giving *நமஸ்காரம் பண்ணி, ப்ரஸாதம் வாங்கிக்கணும்'' என்றே மூன்றுபேரும் பறக்கிறார்கள்! அப்படிப் பறக்கிற போதே, ''அங்கே பிச்சைக்காராளாப் போய் நிக்கணும்; கொழந்தையாய்ப் போய்ச் சரணத்திலே விழணும்; இந்த வீர-சூர மிலிடரி யூனிஃபாரத்தோடு தாட்பூட்டாகப் போகப்படாது'' என்று, தலைப்பாகையைத் தூக்கிப் போட்டுவிட்டுப் போகிறார்களாம்! மண்டையிலே அடிபடப்படாது என்பதற்காக ஒரு திருடனைப் பிடிக்கக் கிளம்பினால்கூட யாருமே முண்டாசு கட்டிக் கொள்கிறதைப் பார்க்கிறோம். அதற்கே ஒரு உசத்தி-ஸ்டேட்டஸ் கொடுத்துதான் போலீஸிலும் ராணுவத்திலும் இன்னாருக்கு இன்னது என்று தொப்பி, ஹெல்மெட் போட்டுக்கொள்வது. ஆனால் பெரியவர்களிடம் போகிறதுபோது டர்பன், மேல் வேஷ்டி எல்லாம் கூடாது. அப்படி இவர்கள் டர்பனைத் தள்ளிவிட்டு - ''அபஹ்ருத சிரஸ்த்ரை:'' என்று போட்டிருக்கிறார்; 'சிரஸ்த்ர' என்றால் சிரஸை ரக்ஷிக்கிற ஹெல்மெட் 'அபஹ்ருத' என்றால் 'தள்ளப்பட்ட'. அப்படித் தள்ளிவிட்டு அம்பாளிடம் அருமைக் குழந்தை முருகனும், அருமை ஸஹோதரர் விஷ்ணுவும், அருமை சிஷ்யன் இந்த்ரனும் போகிறார்கள். (சிரித்து) 'அண்ணா' என்று விஷ்ணுவை ஸ்தானத்தில் அம்பாளுக்கு உசத்திச் சொன்னால் இங்கே ஸரியாய் வராததால் 'ஸஹோதரர்' என்று ஸாமர்த்யமாகச் சொல்கிறேன்!*

*தலையணியைக் கழட்டிவிட்டுத்தான் பெரியவர்களுக்கு, ராஜா, ப்ரபு என்று உசந்த பொஸிஷனின் இருப்பவர்களுக்கு நமஸ்கரிப்பது பந்தா என்றால், முன்னே பார்த்த ச்லோகங்களில், 'நமஸ்கரிக்கிற தேவர்களின் கிரீடங்கள் அம்பாள் சரணத்திற்கு நீராஜனமாயிருக்கிறது'; 'ஸ்வாமியை அவள் எதிர் கொண்டழைக்கப் போனபோது பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலானவர்களின் கிரீடத்தில் தடுக்கிக் கொள்ளப்பார்த்தாள்' என்றெல்லாம் சொன்னது எப்படி? எப்படியென்றால், அங்கே அவர்களுக்கு ஒரே பக்தி ஆவேசத்தில் இந்த 'பந்தா' எல்லாம் மறந்து, அப்படியே அடியற்ற மரம் மாதிரி அம்பாளுடைய காலில் விழுந்து கிடந்தார்கள் என்று வைத்துக்கொள்ள வேண்டும். இங்கே, இப்போது பார்த்துக் கொண்டிருக்கும்*

*ச்லோகத்திலே லோகாசாரப்படி மரியாதைப் பண்பைப் காட்டினதாகப் புரிந்து கொள்ள வேண்டும்.*

*ஹெல்மெட்டைக் கழட்டிப் போட்டதைச் சொன்ன ஆசார்யாள் இவர்களும் கவசத்தைக் கழட்டவில்லை என்று குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறார். ''அபஹ்ருத சிரஸ்த்ரை: கவசிபி:'' என்கிறார்; 'கவசம் பூண்டவர்களான' என்று அர்த்தம் ந்யாயப்படி அதையும் கழட்டத்தானே வேண்டும்? என்னைப் பார்க்க வந்தால் சட்டையைக் கழட்டுகிறீர்களோ இல்லையோ? கவசம் சட்டைதானே? பின்னே ஏன் அதைக் கழட்டவில்லை? அதுவும் கவனமாக ஹெல்மெட்டைக் கழட்டினவர்கள்?*

*எனக்கு என்ன காரணம் தோன்றுகிறதென்றால்; ஹெல்மெட்டோ, தலைப்பாகையோ, கிரீடமோ எதுவானாலும் அதை ஈஸியாக அலாக்காக அப்படியே தூக்கிப் போட்டுவிடலாம். அம்பாளைப் பார்க்க இவர்கள் ஓட்டமாக ஓடி வரும்போதே அப்படித்தூக்கிப் போட்டு விட முடியும். ஆனால் கவசம் என்பது தோள்பட்டை இரண்டு பக்கவாட்டு என்று அநேக இடங்களில் பொத்தான். ஸ்க்ரூ, ஸ்ட்ராப் மாதிரிப் பலதை இந்தப் பக்கம் அந்தப் பக்கம் என்று 'ஜாயின்' பண்ணித்தான் போட்டுக் கொள்வதாகையால் லேசில் கழட்டிப்போட்டு விட முடியாது. நின்று நிதானித்துத்தான் அதைக் கழட்ட முடியும். அவ்வளவு பொறுமை அம்மாவை பார்த்துத் தங்கள் வெற்றியைத் தெரிவிக்கத் துடித்துக் கொண்டிருக்கும் குழந்தைகளாக இருந்த அந்த மஹா பெரியவர்களுக்கு இல்லை. அதனால்தான் அதோடேயே வந்துவிடுகிறார்கள்.*

*அவர்களுக்கு அம்பாள் பரம அன்போடு தன்னுடைய தாம்பூல உச்சிஷ்டத்தை அநுக்ரஹிக்கிறாள். தாம்பூலம் பரம மங்களம். அதிலும் அம்பாள் வாய்த் தாம்பூலம் என்றால் கேட்பானேன்?*

*இன்னொன்றுகூட: அது ஜயத்தையும் குறிப்பது. 'வெற்று இலைதான் வெற்றிலை, பூ, காய் எதுவும் இல்லாமல் வெற்று இலைக்காகவே அதற்கு முக்யம் என்பதால் வெற்றிலை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். 'வெற்று இலை' என்ற அந்த அர்த்தத்தோடுகூட 'வெற்றி இலை' என்றும் சேர்த்துக் கொள்ளலாம்! வெற்றி வீரர்களாகத் திரும்பி வந்திருப்பவர்களுக்கு அம்பாள் வெற்றிலை ப்ரஸாதம் தந்து வரவேற்பது பொருத்தந்தானே? வருங்காலத்திலும் அவர்கள் வெற்றி வீரர்களாக விளங்க இது ஆசீர்வாதம்.*

*ஆனால் ஆசார்யாள் இப்படிப் பலன் எதுவும் அந்தத் தாம்பூலத்திற்குச் சொல்லவில்லை. ''அம்மா! உன்னுடைய வாய்த் தாம்பூலம் கவளம் கவளமாக விசாக, இந்த்ர, உபேந்த்ரர்களால் முழுங்கப்படுகின்றன'' என்று சொல்வதோடு முடித்து விடுகிறார்.*

*ஏன் பலன் சொல்லவில்லையென்றால் சொல்லி முடியாத பலனை அந்த ப்ரஸாதம் கொடுக்கும் என்பதால் தான்!*

*பொதுவாகச் செய்கிற பலன், அம்பாளின் தாம்பூல உச்சிஷ்டம் அமோகமாகக் கவித்வ மேதை அருளும் என்று, காளிதாஸர், காளமேகப் புலவர், மூகர் ஆகியவர்கள்*

*(முறையே) உஜ்ஜயினி மஹாகாளி, ஜம்புகேச்வரத்து அகிலாண்டேச்வரி, காஞ்சி காமாக்ஷி ஆகியவர்களுடைய தாம்பூல ப்ரஸாதத்தால்தான் மஹாகவிகளானது. 'அம்பாஷ்டகம்' என்று ஆசார்யாள் பண்ணியிருப்பதில் அவரே அம்பாளுடைய தாம்பூல உச்சிஷ்டம் ஜாதிக் குதிரைகளின் கதியைவிட உசத்தியாகக் குதி நடைபோடும் கவித்வத்தைக் தருகிறது என்கிறார். ''கவித்வ பரிபாடீ கோடீ குலாததிக-தாடீமுதார-முகவீடி ரஸேந தநுதாம்'' என்று சலோகத்தில் ப்ராஸமே ஜாதிக் குதிரை 'டாக் டாக்' என்று ஓடுகிற மாதிரி ஸ்டைலில் சொல்லியிருக்கிறார்!*

*ஆனால் ஸௌந்தர்ய லஹரியிலோ, கவித்வ சக்தி தருவது அம்பாளின் க்ஷீரம் என்று ஒரு இடத்திலும் (ச்லோ.75) சரண தீர்த்தம் என்று இன்னோரிடத்திலும் (ச்லோ.98) சொல்லியிருக்கிறாரே தவிர இங்கே தாம்பூலத்தைப் பற்றி அப்படிச் சொல்லக் காணோம்!*

*சரணதீர்த்தத்தைச் சொல்கிற இடத்தில் ஸரஸ்வதியின் வாய்த் தாம்பூல உச்சிஷ்டம் - ''வாணீ முக கமல தாம்பூலம்'' - அநுக்ரஹிக்கும் கவித்வ மேதையை அம்பாளின் சரணதீர்த்தமே அநுக்ரஹித்துவிடுகிறது என்று வேறு பிரித்துக் காட்டி உசத்தி வைத்துச் சொல்லியிருக்கிறார்! சரணத்தில் பூசியிருக்கும் அரக்கு நலுங்கினால் அந்தத் தீர்த்தமும் தாம்பூலச் சாறு மாதிரிச் சிவப்பாயிருப்பதையும் பொருத்தம் காட்டியிருக்கிறார். ''கலித அலக்தக ரஸம்'' - 'செவ்வரக்குக் குழம்போடு கலந்த ஜலம்' என்கிறார். 'அலக்தகம்' தான் தமிழ் 'அரக்கு' ஆனது. 'லக்தகம்', 'லாக்ஷா' என்றும் அந்த அரக்கையே சொல்வதிலிருந்துதான்* lac.

*''வித்யார்த்தியான நான் என்றைக்கு அந்தச் சரண தீர்த்தத்தைப் பெறுவேன்?'' என்று விநயமாகக் கேட்கிறார். 'வித்யார்த்தி' என்றால் வித்தையையே விரும்பும் மாணாக்கன். ஜகத்திற்கே ஆசார்யாள் - ப்ரஹ்ம வித்யை, ஸ்ரீ வித்யை இரண்டிலும் ஸித்தி கண்டவர் - தம்மை அப்படிச் சொல்லிக் கொள்கிறார்! ''ப்ரக்ருத்யா மூகர்''களான 'பிறவி ஊமை'களையும் அந்தச் சரண தீர்த்தம் கவி பொழிய வைக்கிறது என்னும் போது, அப்படி மூகர் என்றே ஒருவர் வரப்போவதை ஆசார்யாள் தீர்க்க த்ருஷ்டியில் பார்த்துச் சொன்னாற்போல இருக்கிறது!*

*ரொம்ப உருக்கமாக, ''அதை (சரண தீர்த்தத்தை) நான் பானம் பண்ணுவது எக்காலம்? - கதா காலேபிபேயம்?'' என்கிறார். (ச்லோ-98) ''எந்நாளோ, எந்நாளோ?'' என்று தாயுமானவர் உருகி உருகிக் கண்ணி பாடினாற்போல!*

*ஆகக்கூடி இங்கே அம்பாளின் தாம்பூல ரஸம் கவித்வ சக்தி தருவதாகச் சொல்லவில்லை. சொல்லியிருந்தால் கேள்வி வரும். அப்படியானால் ஸுப்ரஹ்மண்யரும், மஹா விஷ்ணுவும், இந்த்ரனும் எங்கே கவி பாடியிருக்கிறார்கள்?' என்று, அதனால் அது வெற்றி வீரர்களுக்கு வரவேற்பு, ரிஸப்ஷன், வருங்கால வெற்றிக்கு சக்தி தருவது, பரம ஞான ப்ரதம், அல்லது சித்தே முந்தி சொன்ன மாதிரி சொல்லி முடியாத பல ப்ரதம் என்று நாம் வைத்துக் கொள்ளும்படி வெறுமனே விட்டிருக்கிறார்.*

## பாராட்டே வெட்க வைத்தது!

**விபஞ்ச்யா காயந்தீ விவிதம் அபதானம் பசுபதே:**
**த்வயா-(ஆ)ரப்தே வக்தும் சலித-சிரஸா ஸாது-வசநே ।**
**ததீயைர்-மாதுர்யைர் அபலபித தந்த்ரீ-கல-ரவாம்**
**நிஜாம் வீணாம் வாணீ நிசுலயதி சோலேந நிப்ருதம் ॥ 66**

*ஒரு சின்ன நாடகமே போட்டுக் காட்டி விடுகிறார். ஆசார்யாள், அடுத்த ச்லோகத்திலே **(66)***

*நாடகம் என்றால் ஒரு ஸதஸில் நடக்கும். இந்த நாடகம் அம்பாளுடைய ஸதஸில் நடக்கிறது.*

*அம்பாள் கச்சேரி கேட்டுக் கொண்டு ஆனந்தமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். ஆனந்தத்தில்தான் கச்சேரி கேட்கத் தோன்றும். பாரமில்லாமல், வேலைத் தொந்தரவு இல்லாமல் அக்கடா என்று பாட்டு கேட்கப் போகிறோம். அம்பிகையை இப்படி விச்ராந்தியாக ஆனந்த மூர்த்தியாக தியானிப்பது நமக்கும் பரம சாந்தி தரும்.*

*யார் கச்சேரி?*

*ஸாக்ஷாத் ஸரஸ்வதிதான் வீணாகானம் பண்ணுகிறாள். எவளுடைய அநுக்ரஹத்தினால் தான் ஸங்கீதமும் ஸாஹித்யமும் உண்டாகின்றனவோ அவளே ஸாஹித்யங்களைப் பாடிக்கொண்டு, அதோடுகூட வீணையும் வாசிக்கிறாள். ஸங்கீதக் கலையின் அதிதேவதையே பாடினாள், வீணாகானம் செய்தாள் என்றால் அதன் மாதுர்யத்தையும், ஸாஹித்ய பாவங்களையும் நம்மால் கல்பனை பண்ணிக் கூடப் பார்க்க முடியாது.*

*''விபஞ்ச்யா'' என்றால் ''விபஞ்சி''யால் 'விபஞ்சி' என்றால் வீணை பரிவாதினி என்றும் வீணைக்குப் பெயர் உண்டு. 'கச்சபி' என்பதாக ஸரஸ்வதியின் வீணைக்குத் தனியாக ஒரு பெயர் உண்டு. தெய்வங்கள், மஹா புருஷர்கள் ஆகியோருடைய ஆயுதங்கள், வாத்தியங்கள் முதலியவற்றுக்குத் தனிப் பெயர் உண்டு. ஈச்வர தநுஸுக்குப் 'பிநாகம்' என்று பெயர். அதனால்தான் அவர் பிநாகபாணி. மஹாவிஷ்ணுவின் தநுஸ் 'சார்ங்கம்' அதனால் அவர் சார்ங்கபாணி. அர்ஜுனன் வில்லுக்கு 'காண்டீவம்' என்று பேர். இப்படியே வீணையை எடுத்துக்கொண்டால், நாரதர் கையிலுள்ள வீணைக்கு 'மஹதீ' என்று பெயர். 'தும்புருநாரத' என்று அவரோடு சேர்த்துச் சொல்லப்படும் தும்புருவின் வீணைக்குப் பேர் 'கலாவதி'. ஸாக்ஷாத் ஸரஸ்வதியுடைய வீணைக்குக் 'கச்சபி' என்று பெயர். 'கச்சபம்' என்றால் ஆமை. கச்சபி வீணையின் குடம் ஆமை ஷேப்பிலே இருப்பதால் அப்படிப் பேர். இன்றைக்கும் ஃபிலிப்பைன்ஸில் அந்த மாதிரியான வீணை இருப்பதாகவும் அதற்கு ''கட்ஜபி'' என்றே அவர்கள் பேர் சொல்கிறார்களென்றும் ப்ரொஃபஸர் ஸாம்பமூர்த்தி சொன்னார். ஸஹஸ்ரநாமத்தில் ''நிஜ ஸல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சபீ'' என்று வருகிறது. அதே 'ஐடியா'வைத்தான் இங்கே ஆசார்யாள் ஒரு நாடகமாக டெவலப் செய்திருக்கிறார். இங்கே 'கச்சபீ' என்காமல் வீணையின் பொதுப் பெயரான 'விபஞ்சீ' என்றே சொல்கிறார்.*

''விபஞ்ச்யா காயந்தீ'' என்றால் ''வீணையில் இசைக்கிற'' என்று நேர் அர்த்தம். ''வீணை வாசித்துக் கொண்டு கூடவே பாடுகிற' என்று நான் அர்த்தம் பண்ணுகிறேன். இப்படி எதை வைத்துச் சொல்கிறேன்? ''விவிதம் அபதானம் பசுபதே:'' என்று ச்லோகத்தில் வருவதை வைத்துத்தான்! ''பசுபதே:'' ''அபதானம்'' - 'உத்தம சரித்ரங்களை' அதாவது, சிவபெருமானின் சிறப்புப் பொருந்திய விருத்தாந்தங்களை ஸரஸ்வதி வீணையில் வாசிக்கிறாள் என்று ச்லோகத்தில் இருக்கிறது. கதைகளை லீலைகளை ஸாஹித்யத்தில்தான் சொல்ல முடியும். ஸங்கீத அழகு மட்டுமின்றி, ஸாஹித்ய அழகும் ஈச்வரனின் லீலாப் பிரபாவங்களும் தெரிய வேண்டுமானால் அதை வாயால் பாடினால்தான் முடியும். அதனால்தான் ஸரஸ்வதி பாடிக் கொண்டே வீணை வாசிக்கிறாள் என்றது.

நமக்கெல்லாம் நம்மை ஸ்தோத்ரம் செய்தால் உச்சி குளிரும். தெரியாத்தனத்தாலோ, அல்லது நம்மிடம் ஏதோ காரியம் நடத்திக்கொள்ள வேண்டுமென்று இட்டுக் கட்டியோ சொன்னால்தான் நம்மை ஸ்தோத்திரிக்க முடியும்! உள்ளபடி நம்மை ஸ்தோத்திரிப்பதற்கே இல்லை என்றால், இன்னொரு விதத்தில், அம்பாளின் மஹிமை எல்லையில்லாமல் இருப்பதால் அதை யாருமே உள்ளபடி தெரிந்து கொண்டு ஸ்தோத்திரிக்க முடியாதபடி இருக்கிறது.

ஆனாலும் ஸரஸ்வதி அம்பாள் புகழை, லீலைகளையா வீணையோடு பாடுகிறாள்? இல்லை. பரமேச்வர சரித்ரங்களைத்தான் புகழ்ந்து பாடுகிறாள், பதிவ்ரதா ரத்னமான பரதேவதைக்கு அதுதான் பிடிக்கும். அம்பாள் மனஸு ஸரஸ்வதிக்குத் தெரியும். ஸரஸ்வதிக்கு எல்லாம் தெரியும் 'ஸர்வஜ்ஞா' என்று அவளுக்குப் பேர். ஆசார்யாள் மாதிரி ஸகலமும் தெரிந்து ஸர்வஜ்ஞபீடம் ஏறியவர்களும் அவளுக்குப் பதில் சொல்லிவிட்டு, அவளை ஜயித்து, அவளுடைய அநுக்ரஹத்தில்தான் பீடாரோஹணம் பண்ண முடியும். ஸர்வஜ்ஞையான அவள் அம்பிகையின் மனஸறிந்து ஈச்வர குணகானம் பண்ணுகிறாள். வீணையோடுகூட. பரமேச்வர மஹிமையும் அம்பாளுடையதைப் போலவே எல்லையில்லாததுதான். ஸரஸ்வதி தன்னால் முடிந்த மட்டும் அதைப் பற்றிப் பாடிக் கொண்டு வீணாகானம் செய்கிறாள்.

வித்வான்கள் ப்ரபுக்களின் ஸதஸில் பாடும்போது அந்த ப்ரபுவுக்கு எது பிடிக்கும்? எப்படிப் பாடினால் அவர்களுடைய பஹுமானத்தை (வெகுமானத்தை) அதிகம் பெறலாம் என்று கவனித்து ஸமயோசிதமாகப் பாடுவார்கள். ஸரஸ்வதிக்கும் இந்த சாதுர்யம் உண்டு! ஈச்வர ஸந்நிதானத்திலேயே அவள் வீணை வாசித்திருப்பாளானால், அம்பாள் மஹிமைகளைப் பாடினால்தான் அவருக்கு ப்ரீதி என்று அப்படியே பண்ணியிருப்பாள்! இப்போது அம்பாள் ஸந்நிதானத்தில் கானம் செய்ததால் அவளுக்கு ப்ரீதியாக ஈச்வரனைப் பற்றிப் பாடுகிகிறாள்.

ஸந்நிதி அம்பாளுடையது. கானம் செய்வது ஸரஸ்வதி வாய்ப்பாட்டு மட்டுமின்றி, ஸுநாதத்துக்குப் பேர் போன கச்சபியும் ஸங்கீதாம்ருதத்தைப் பொழிகிறது. விஷயமோ ஈச்வர லீலை. இப்படி எல்லாவற்றிலும் உச்சியாக இருக்கிறது.பரமேச்வர சரித்ரங்களிலிருந்தே சிவானந்தப் பிரவாஹம் பொங்கி வந்து தம்முடைய சித்த மடுவை நிரப்புவதாக ஆசார்யாள் 'சிவாநந்த லஹரி' ஆரம்பத்தில் சொல்கிறார். அப்படிப்பட்ட

*சிவானந்தத்தில் இப்போது சிவாவான அம்பாள் முழுகி விடுகிறாள். அந்த சரித்ரங்களை எழுத்தில் படித்தாலே ஆனந்தம் ஏற்பட்டு விடும். அப்படியிருக்க ஸரஸ்வதியே ராகம் போட்டுப் பாட்டாகப் பாடினாள் என்றால் இன்னும் எத்தனை ஆனந்தமாயிருக்கும்?*

*ஸங்கீதத்தில் அம்பாள் நிரம்ப ஆனந்தமடைகிறாள்: சொக்கி லயித்து விடுகிறாள். அவ்வப்போது தலையை அசைத்து ரஸிக்கிறாள். ''சலித சிரஸா'' - 'தலையசைப் போடு' என்று வருகிறது.*

*கைதட்டி அப்ளாஸ் கொடுப்பதை 'கரக்கம்பம்' என்றும் தலையை ஆட்டி ஆமோதிப்பதை 'சிரக்கம்பம்' என்றும் சொல்வார்கள். கரக்கம்பத்தில் அவ்வளவு* delicacy *(மென்மைப் பண்பு) இல்லை. அம்பாள் சிரக்கம்பம் மாத்திரந்தான் பண்ணுகிறாள்.*

கேட்பவர்கள் தங்கள் ஆனந்தத்தை வெளிப்படுத்துவதே பாடுகிறவரை மேலும் உத்ஸாஹப்படுத்தும், நல்லதைக் கவனித்து, சட்டென்று அதில் ரஸிப்பைத் தெரியப்படுத்து வேண்டும். ஒருவர் நன்றாகப் பாடா விட்டால்கூட நாம் ஆனந்தப்பட்டுக் கொண்டு உத்ஸாஹப்படுத்தினால், அதனாலேயே அவர்களுக்கு நல்லதாக ஒன்றிரண்டு ஸங்கதி விழும்.

*நன்றாக மனஸ் விட்டு ரஸிக்க வேண்டும். நாம்தான் பெரியவர் என்று உம்மணாமூஞ்சி மாதிரி உட்கார்ந்திருக்கக் கூடாது. அல்லது தனக்குத்தான் விஷயம் தெரியும் என்று மூஞ்சியைக் கடுகடு என்று வைத்துக்கொண்டோ குற்றம் பார்த்துச் சுளித்துக் கொண்டோ இருக்கக் கூடாது. கேட்கிறவன் தப்பு எடுக்கவே வந்திருக்கிறான் என்று தெரிகிறபோது, வித்வானுக்கு ஒரு விலவிலப்பு ஏற்பட்டு இருக்கிற கல்பனா சக்தியும் ஓடிப் போய்விடும்! பாட்டு, எழுத்து, படிப்பு, விளையாட்டு எதிலுமே இப்படித்தான்.*

*அம்பிகை ஆனந்தத்தோடு உத்ஸாஹப்படுத்தப் படுத்த ஸரஸ்வதி பரமாத்புதமாகக் கானம் பண்ணிக் கொண்டே போகிறாள்.*

*இதுவரை சொன்னதத்தனையும் முதல் ஒரு வரியில் வருகிற விஷயம்தான்! ''விபஞ்ச்யா காயந்தீ விவிதமபதாநம் பசுபதே:'' - 'பரமேச்வரனின் விதவிதமான உத்தம சரித்ரங்களை ஸரஸ்வதி பாடி வீணை வாசிக்கையில்' என்பது இந்த வரியின் அர்த்தம். ஸரஸ்வதி என்பதற்கான வார்த்தை இந்த வரியில் வரவில்லை. நாலாம் வரியில்தான் ''வாணீ'' என்று வருகிறது.*

*''வாசிக்கையில்'' - அப்புறம் என்ன?*

*''த்வயா-(ஆ)ரப்தே வக்தும் சலித சிரஸா ஸாதுவசனே - ''சலித-சிரஸா'': 'தலையை ஆட்டிக் கொண்டு' - இதை முன்னாலேயே சொல்லி விட்டேன்; 'சிரக்கம்பத்தோடு கூட'; ''த்வயா'' - 'உன்னால்' ('அம்பிகையால்' - அம்பாளைப் பார்த்து ஆசார்யாள் பேசுவதால் 'உன்னால் என்கிறார்); ''ஸாது வசநே'' - 'பாராட்டு மொழி''; ''வக்தும் ஆரப்தே'' 'சொல்ல ஆரம்பிக்கப்பட்டபோது'.*

*தலையே ஆட்டிக் கொண்டிருந்த அம்பாள், சிரக் கம்பம் மட்டும் போதாது என்று இரண்டு பாராட்டு வார்த்தை சொல்ல நினைத்து ஆரம்பித்தாள். ''ஸாது வசனம்'' என்றால்*

*நல்வாக்கு; குறிப்பாக, ஆமோதன வார்த்தைகள். ஸங்கீதக் கச்சேரியில் ''பலே! பேஷ்! ஸபாஷ்!'' என்கிறாமே, அதெல்லாம் ஸாதுவசனம்தான். ப்ரஸங்கத்திவ் நடுவே ''ஹியர், ஹியர்'' என்பது ஸாது வசனம்.*

*இந்த மாதிரி ''பேஷ், ஸபாஷ்'' என்று ஏதோ இரண்டு வார்த்தை அம்பாள் வாயிலிருந்து உதிர்ந்து விடுகிறது. மனஸ் அப்படியே பூரித்த அம்பாளின் கண்டத்திலிருந்து ஸரஸ்வதியிடம் பரமப் பிரீதியோடுகூட ஸாது வசனம், ஏதோ ஒரு சொல் இரண்டு சொல்தான் வந்தது. முழுக்கக்கூடச் சொல்லவில்லை. வசனம் ''ஆரப்தே'' - சொல்வதற்கு 'ஆரம்பிக்கப்பட்டவுடனேயே' என்கிறார்.*

*அம்பாள் பாராட்டு வார்த்தை சொல்வதற்கு ஆரம்பித்தவுடனேயே என்ன நடந்தது?*

**ததீயை: மாதுர்யை: அபலபித தந்த்ரீ கல ரவாம்**

*''ததீயை:'' - அதனுடைய'; அதாவது அம்பாள் சொல்ல ஆரம்பித்த வசனத்துடைய; ''மாதுர்யை:'' - 'மாதுரியத்தினால்'; ''அபலபித'' என்றால் 'மறுக்கப்பட்ட', அல்லது 'அவமதிக்கப்பட்ட'; ''தந்த்ரீ'' - 'வீணைத் தந்திகளின் ('தந்த்ரி'தான் தமிழில் 'தந்தி' என்றாயிருக்கிறது. கம்பி என்று அர்த்தம். கம்பி வழியாக டெலிக்ராம் வருவதால் அதை இங்கிலீஷில்* wire *என்பது போலவே நாமும் 'தந்தி' என்கிறோம்.) ''கல ரவாம்'' - 'இனிய ஒலியை'.*

*மூன்றாவது வரிக்கு அர்த்தம்: 'அம்பாள் சொல்ல ஆரம்பித்த ஆமோதன வாக்கின் மாதுர்யத்தினால் தன்னுடைய வீணைத் தந்திகளின் இனிய ஒலி அவமதிக்கப்பட்டதை (ஸரஸ்வதி பார்த்து)'' - என்பது.*

*மாதுரியத்தில் எது பரம உத்க்ருஷ்டமாக இருக்கும் என்று நாம் மானஸிகமாக நினைத்துப் பார்த்தோமானால் கலைத் தெய்வமேயான ஸரஸ்வதியின் வீணா நாதமாகத்தான் இருக்க முடியும் என்று முடிவு கட்டுவோம். அவளுடைய வீணைத் தந்தியின் ரீங்காரத்துக்கும் மீட்டுக்கும் ஸமதையான இனிமை படைத்த எதுவுமே இருக்காது என்றே எண்ணுவோம். அப்படி ஏதாவது இருந்தால் அது ஸரஸ்வதியின் சாரீரமாகத்தான் இருக்கணுமென்று நினைப்போம்.*

*ஆனால் இப்போது அம்பாள் இரண்டு வார்த்தை சொல்ல ஆரம்பித்தபோது - அம்பாள் கானம் பண்ணவில்லை; பேச்சாகத்தான் பேசினாள். அதுகூட ப்ராஸ-அநுப்ராஸம் போட்ட நீளமாக என்னமோ பேசிவிடவில்லை. பேச ஆரம்பிக்கவே செய்தாள். அவ்வளவுதான். இப்படி அவள் வாக்கிலிருந்து இரண்டு அக்ஷரம் வசன நடையில் எழுந்தவுடனேயே வாணியின் வீணா நாதமும் சாரீர நாதமும் அதற்குத் தோற்றே போய்விட்டன! அம்பாளுடைய முக சந்திரிகையான அமிருதத்துக்கு முன்னால் நிஜ சந்திரிகையின் அமிருதம் புளித்த கஞ்சியானதுபோல், இவளுடைய க்ஷணகாலப் பேச்சு வார்த்தையின் மதுரத்துக்கு முன்னால், விதவிதமாக இத்தனை நாழி பாடிய ஸரஸ்வதியின் குரலும் அவள் வாசித்த வீணா கானத்தின் மதுரமும், அவ்வளவும் இருந்த இடம் தெரியாமல் ஆகிவிட்டது!*

*தன் குரல் அம்பாளிடம் தோற்றுப்போனதில் ஸரஸ்வதி பாட்டை நிறுத்திவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டு விட்டாள். வீணை அவமதிக்கப்பட்டதே, அதற்கு என்ன செய்தாள்?*

**நிஜாம் வீணாம் வாணீ நிசுலயதி சோலேன நிப்ருதம்**

*''நிஜாம்'' - 'தன்னுடைய'; ''வீணாம்'' - 'வீணையை' - ''சோலேன'' - 'உறையினால்'; ''நிப்ருதம்'' - 'வெளியில் தெரியாதபடி மறைத்து'; ''வாணீ'' - 'ஸரஸ்வதி' ''நிசுலயதி'' - மூடுகிறாள்' - அம்பாளுடைய பேச்சின் இனிமையில் தன் வீணை நாதம் அடிபட்டுப் போனதைப் பார்த்து ஸரஸ்வதி தன்னுடைய அந்த வீணையை வெளியில் தெரியாதபடி உறையினால் மூடி மறைத்து விட்டாள் என்று அர்த்தம்.*

*ஸாதாரண வித்வான்களாக இருந்தால் தங்களைவிட இன்னொருவரிடத்தில் திறமை இருப்பதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஸரஸ்வதி அப்படிப்பட்டவளில்லை. அதனால் அம்பாளுடைய கண்டத்திலிருந்து வந்த ஸுநாதத்துக்குத் தன் வீணா நாதம் 'உறைபோடக் காணாது' என்று ஹ்ருதய பூர்வமாக ஏற்றுக்கொண்டாள். (சிரித்து) உடனே அதை உறைபோட்டு மூடிவிட்டாள்! அதாவது, அம்பாள்தான் தன் கானத்தை மெச்சி ஸபாஷ் சொல்கிறாளே என்று இவள் வாசித்துக் கொண்டே போகவில்லை.*

*மனஸ்விநியாக இருக்கப்பட்ட அம்பிகை தன்னுடைய குரலிலேயே இத்தனை இனிமை இருந்தும் ஸரஸ்வதியைப் பெருமைப்படுத்த நினைத்து சிரக்கம்பத்தோடு பாராட்டினாள். பாராட்டுமொழி ஸரஸ்வதியை மேலும் உத்ஸாஹப்படுத்துவதற்குப் பதில் வெட்கித் தலை குனியவே வைத்தது! இதில் இரண்டு பேருடைய பெருமையும் தெரிகிறது.*

*''ஸூர்யனுக்கு முன்னால் விட்டில் பூச்சி பறந்து காட்டினாற்போல, இப்பேர்ப்பட்ட மதுரகண்டம் படைத்தவளுக்கு முன்னால் நம் கான வித்தையைக் காட்டினோமே! பெற்ற தாயிடம் கற்ற வித்தை என்பது நிஜமாய்விட்டதே!'' என்று ஸரஸ்வதி தலை குனிந்து கொண்டாள்.*

*இவள் தலையைக் குனிந்து கொண்டாள். ஆனால் வீணை ஸமாசாரம்? அது 'குடம்' என்கிற பெரிய ஆமை மாதிரி தலையை அப்படியேதானே விறைப்பாய் வைத்துக் கொண்டிருந்தது? ஆனால் அம்பாளிடம் படுதோல்வி அடைந்தபின் அதற்கு ''வெளியிலே தலைகாட்ட'' என்ன யோக்யதை? திவாலாகி விட்டால் ''தலையில் துணியைப் போட்டுக் கொண்டு போனான்' என்பார்கள். வீரர்கள் மானபங்கப் பட்டாலும் தலையைத் துணியால் மூடிக் கொண்டு ஓடுவார்கள். சாஸ்திரப்படி நாங்கள் (ஸந்நியாசிகள்) தான் எப்போதும் தலையில் துணியைப் போட்டுக் கொள்ள வேண்டியவர்கள்!*

*''தோற்றுப்போன வீணை மூஞ்சியை வெளியே காட்டப்படாது'' என்று ஸரஸ்வதி நினைத்தாள். அவள் ஸத்யமுள்ளவள். அதனால் அம்பாளே சிலாகித்தாலும் கூட அதை ஒப்புக்கொள்ளாமல் அந்த விபஞ்சி மூஞ்சியை வெளியே காட்டாதபடி, அதனுடைய உறையை நன்றாக இழுத்து மூடிவிட்டாள்!*

வாய்ப்பாட்டை நறுக்கென்று நிறுத்திவிட முடியும். தந்தி நாதம் அப்படியில்லை. அதற்கு 'அநுரணனம்' என்று ஒன்று உண்டு. அதாவது ஒரு மீட்டு மீட்டி விட்டால் அது தானாகவே ரீங்காரமாக நீண்டு ஒலித்துக்கொண்டு போய் விட்டுத்தான் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கும். ஒரு மணியை அடித்தால் ''டிங் ... ங் ... ங்'' என்று அந்த ஓசை இழுத்துக்கொண்டே போய் அடங்க எவ்வளவு நாழி ஆகிறது? தந்த்ரீ வாத்யங்கள் இப்படித்தான். அதனால் அம்பாளின் ஸாது வசனத்தைக் கேட்ட மாத்திரத்தில் ஸரஸ்வதி தன் வாய்ப்பாட்டை நிறுத்திக் கொண்டே மாதிரி இல்லாமல் வீணையில் பழைய மீட்டின் 'டொய்ங்' அநுரணனமாக இழுத்துக்கொண்டே போயிருக்கும். அதனால்தான் ''வாயை மூடிக்கோ!'' என்கிறாற்போல ஸரஸ்வதி அதை உறையால் மூடிவிட்டாள். இப்படிப் பல தினுஸாகக் கல்பனை பண்ணி அநுபவிக்கலாம்.

இன்னொன்றுகூடத் தோன்றுகிறது. அம்பாள் ஸந்தோஷப்பட்டது, தலையசைத்தது, ஸாது வசனம் சொன்னது எல்லாம் வாஸ்தவம். ஆனால் இதெல்லாம் ஸரஸ்வதியின் ஸங்கீதத்தை உத்தேசித்துத்தானா? பின்னே வேறெதை உத்தேசித்ததாக இருக்கும்? ஸரஸ்வதி பாடினதெல்லாம் ஈச்வர லீலை. அவளுடைய கானத்தை முக்யமானதாகக் கவனிக்காமல், அவள் பாடும் ஸாஹித்யத்தையே கவனித்து, பதியின் சரித்திரங்களை எண்ணியே அம்பாள் ஸந்தோஷப்பட்டு சிரக்கம்பம், ஆஹாகாரம் செய்திருக்கலாமல்லவா? அல்லது இந்த மஹிமைகளைச் சொல்லும் ஸாஹித்யங்கள் இலக்கிய ரீதியில் அழகாயிருக்கின்றன என்பதாக ரஸித்திருக்கலாமல்லவா? அம்பாளுடைய மதுர கண்டத்தைக் கேட்டவுடன் ஸரஸ்வதியும் இப்படி நினைத்திருக்கலாம். ''இப்பேர்ப்பட்ட நாதாம்ருதத்தைக் கண்டத்திலே கொண்ட அம்பாள் என் கானத்தை ரஸித்திருக்கவே முடியாது. அவள் ஆனந்தப்பட்டு, தலையசைத்ததெல்லாம் ஈச்வர லீலா வைபத்துக்காகவோ, ஸாஹித்ய விசேஷத்துக்காகவோதான்! நம் பாட்டை ரஸிக்கிறாள் என்று அசடு மாதிரி நினைத்து நான் பாட்டுக்கு கானம் பண்ணிக் கொண்டே போனேனே!'' என்று இப்படி ஸரஸ்வதிக்குத் தோன்றியிருக்கலாம். இது அவமானத்தை ரொம்பவும் ஜாஸ்தியாக்கியிருக்கும்.

மொத்தத்தில் ச்லோகம் ஒரு நாடகமாக இருக்கிறது: தேவி ஸந்நிதி; ஸரஸ்வதி வீணை வாசித்துப் பாடுவது; பரமேச்வர லீலைகள் க்ருதிகளில் விரிவது; அம்பாள் ஸந்தோஷப்பட்டுத் தலையே அசைப்பது; வாய்விட்டு ஆஹாகாரம் பண்ணுவது; அதன் அலாதியான மாதுர்யம்; ஸரஸ்வதி வெட்கப்பட்டுத் தலைகுனிவது; வீணையை இழுத்து மூடுவது என்று ஸீன் ஸீனாகப் போகிறது. நம் மனஸுக்குள் போட்டுப் பார்த்துக் கொள்ள வேண்டிய நாடகம்!

''சோலேன'' என்றால் 'உறையால்' என்று சொன்னேன். 'சோலி' - உறை. 'ல'வும், 'ள'வும் ஒன்றுக்கொன்று மாறி வரும். 'சோலி' என்பது 'சோளி' என்றும் வரும். ஜடவஸ்துக்களானால் 'சோளி' என்பது உறை; மநுஷ்யர்களானால் அதுவே சட்டை' என்று அர்த்தம் கொடுக்கும். மநுஷ்யனுக்குச் சட்டை மாதிரித்தானே மற்றவற்றுக்கு உறை? இக்காலத்தில் ஸ்த்ரீகளுடைய சட்டைக்குச் 'சோளி' என்று பேர்

*வந்திருக்கிறதாகக் கேள்விப்பட்டேன். 'சோளம்' என்று ஒரு தான்யம் இருக்கிறது. தான்ய வகைகளுக்குள்ளேயே அநேக தான்ய மணிகளை அடுக்கி வைத்து, அவற்றுக்கு உறை மாதிரித் தோல் மூடியிருப்பதை சோளம் ஒன்றில்தான் பார்க்கிறோம். உறை போட்டுக் கொண்டிருப்பதால்தான் அதுவே 'சோளம்' என்று பேர் பெற்றிருக்கிறது! சோள தேசத்துக்கும் உறையூரே தலைநகரா இருந்திருக்கிறது!*

*அம்பாளுடைய ரூப ஸௌந்தர்யத்தை அங்க அங்கமாக வர்ணித்துக் கொண்டே வரும்போது இங்கே அவளுடைய வாக் ஸௌந்தர்யத்தை நாம் கல்பித்துப் பார்த்துக் கொள்ளும்படியாக ஆசார்யாள் இந்த ச்லோகத்தை அநுக்ரஹித்திருக்கிறார். அவளுடைய அநுக்ரஹத்தால் ஸங்கீதம், ஸாஹித்யம் இரண்டிலும் நைபுண்யம் பெறலாம் என்பதையும் இதன் மூலம் உணர்த்துகிறார்.*

## கண்டரேகையில் கண்ட மும்மை; ஆணின் வெண்மை, பெண்ணின் செம்மை

*அம்பாளை ஸங்கீத ஸம்பந்தப்படுத்துவதாக இன்னொரு ச்லோகமும் ''ஸௌந்தர்ய லஹரி''யில் இருக்கிறது (ச்லோ-69)*

**கலே ரேகாஸ்-திஸ்ரோ கதி-கமக-கீதைக-நிபுணே**
**விவாஹ-வ்யாநத்த-ப்ரகுண-குண-ஸங்க்யா-ப்ரதிபுவ: ।**
**விராஜந்தே-நாநாவித-மதுர-ராகாகர-புவாம்**
**த்ரயாணாம் க்ராமாணாம் ஸ்திதி-நியம-ஸீமாந இவ தே ॥ 69**

*அறுபத்துநாலு வித்யைகளையும் அறிந்த ஸர்வஜ்ஞராக இருந்த சங்கர பகவத் பாதர்களின் ஸங்கீத சாஸ்திர ஞானம் எவ்வளவு விஸ்தாரமானது, விஸ்தாரம் மட்டுமில்லாமல் எவ்வளவு* intensive *(உள்ளாழம் கொண்டது) என்பது இந்த ச்லோகத்திலிருந்து தெரிகிறது. இதிலே கதி, கமகம், கீதம், க்ராமம் என்றெல்லாம் வருவது ஸங்கீத சாஸ்திர* technical terms *தொழில் நுட்ப வார்த்தைகள்). இவை ஸங்கீத வித்வான்களுக்குத்தான் புரியும். அவர்களிலும் வெறும் பாடகர்களுக்குப் புரியாது.* Theory *(ஸங்கீத சாஸ்திர விளக்கங்கள்) பார்த்த* musicologist *களுக்குத்தான் புரியும். பரதருடைய ''நாட்ய சாஸ்த்ர''த்தின் கடைசி பாகம், சார்ங்கதேவரின் ''ஸங்கீத ரத்னாகரம்'', வேங்கடமகியின் ''சதுர்தண்டி ப்ரகாசிகை'' முதலான நூல்களைப் பார்த்தால் விவரமாக விளக்கம் கிடைக்கலாம். எனக்கு இதில் புரிந்தது அரைகுறைதான். அதை உங்களுக்குச் சொல்வதால் மண்டையைக் குழப்புவதாகவே முடியும்.... கதி என்றால் இப்போது தாளத்தில் மாத்திரைக் கணக்கை பார்த்து திச்ரம், மிச்ரம், கண்டம் என்று சொல்கிறோம். 'கதி' என்பதற்கு நேர் தமிழான 'நடை' என்பதை வைத்து கண்டநடை, திச்ரநடை என்றெல்லாம் சொல்கிறோம். கமகம் என்பது ஒரு ஸ்வரத்தை அப்படியே கார்வையாக நீட்டாமல் அசக்கி அசக்கி இழைப்பது என்று வைத்துக்கொண்டிருக்கிறோம். தோடியில் காந்தாரம், சங்கராபரணத்தில் ரிஷபம் முதலியவற்றை கமகமாகவே இழைப்பார்கள். கீதம் என்றால் பாட்டு என்பது நமக்குத் தெரியும். அம்பாளை இந்த ச்லோகத்தில்*

ஆசார்யாள் ''கதி-கமக-கீத-ஏக-நிபுணே'' - 'கதி, கமகம், கீதம் மூன்றிலும் தனக்கு ஸமம் யாருமில்லாத நிபுணையே!'' என்று அழைக்கிறார். ஆனால் அவர் இந்த மூன்று வார்த்தைகளை நாம் சொல்கிற அர்த்தத்தில் இல்லாமல் technical sense -ல், நுட்பமான சாஸ்த்ரீய அர்த்தத்தில் சொல்கிறார். அப்போது கதி என்பது 'மார்க்கம்', 'தேசி' என்ற இரண்டைக் குறிக்கும். இது இரண்டும் ஸங்கீதத்தில் இரண்டு வழிகள். 'கதி' என்றாலே வழிதான். இரண்டு கதிகளில் ஒன்றான 'மார்க்கம்' என்பதற்கும் வழி என்றுதான் அர்த்தம்! அதாவது அது, தண்டவாளத்தில் ரயில் மாதிரி இப்படித்தான் ஸஞ்சாரம் பண்ணணும் என்று ஒரே கட்டுப்பாடாகப் பூர்வகால ஸங்கீத சாஸ்த்ரகாரர்கள் வகுத்துக் கொடுத்துவிட்ட ராகங்களையும், அதே போல ஒரே கட்டுப்பாட்டில் அநுஸரிக்க வேண்டிய தாளங்களையும் குறிப்பது. 'தேசி' என்றால் இப்படி ஒரே கட்டுப்பாடாயில்லாமல் ரஞ்ஜகத்வத்துக்கு முக்யத்வம் தந்து தேசத்தில் அங்கங்கேயும் நல்ல ஸங்கீதக் கலைஞர்கள் ஸ்வதந்திரமும் கொடுத்து அமைத்திருக்கும் ராக-தாள முறை. இது 'கதி' ஸமாசாரம். 'கமகம்': இழைப்புதான் - அதிலே நுட்பமாக ஐந்து தினுஸை, கால அளவைகளை நிர்ணயித்துச் சொல்வது. 'கீதம்' என்பது ஸாஹித்யம் மட்டுமில்லாமல் அதற்கான ஸ்வரத்தையும் சேர்த்துக் கொடுப்பது.

'க்ராமம்' என்று மூன்று ஸங்கீதத்தில் இருக்கிறது என்று ச்லோகத்தில் பின்னாடி வருகிறது. இங்கே 'க்ராமம்' என்பது ராகப் பாகுபாடு - ஷட்ஜ, மத்யம, காந்தார ஸ்வரங்களை வைத்து 'ஸ' க்ராமம், 'ம' க்ராமம், 'க' க்ராமம் என்று இதில் மூன்று. அந்த மூன்றுமே தேவலோகத்திலேதான் உண்டாம். நம் லோகத்திலே 'ஸ' க்ராமமும், 'ம' க்ராமமும்தான் இருந்தனவாம்; 'க' (க்ராமம்) இல்லையாம். இது ஐநூறு. அறுநூறு வருஷம் முந்தியிருந்த ஸௌந்தர்ய லஹரீ பாஷ்யகாரரான லக்ஷ்மீதரர் சொல்கிற ஸமாசாரம். இப்போதுள்ள ம்யூஸிகாலஜிஸ்ட்களை நான் கேட்டதில் (கீழ்)ஸ-ப-(மேல்)ஸ (பாடியே காட்டுகிறார்கள்!) என்பதில் 'ஸ' க்ராமம் ஒன்றில்தான் 'ப' ஸரியாக நடு ஸ்வரமாக வருவதால் அது மட்டுந்தான் வழக்கிலிருக்கிறது என்று சொல்லலாம் என்றார்கள்.

ஸங்கீதம் கண்டத்தில்தானே பிறக்கிறது? மநுஷ்ய வாத்யமான sound-box தொண்டையில்தானே இருக்கிறது? அதனால் அம்பாளின் கழுத்திலேயே இந்த மூன்று க்ராமங்களும் மூன்ற ரேகைகளின் ரூபத்தில் இருக்கின்றன என்று ஆசார்யாள் சொல்கிறார்.

ஸ்த்ரீகள் எல்லாருடைய கழுத்திலும் மூன்று மடிப்புகள், ரேகைகள் இருக்கும். அம்பாளுக்கும் இருக்கிறது. அம்பாள் ஒருத்திக்கு ஆதியில் இப்படி இருந்ததால்தான், அப்புறம் எல்லா ஸ்த்ரீகளும் அவள் ஸ்வரூபமே என்ற காட்டுவதற்காக அவர்களுக்கும் இந்த மூன்று ரேகைகள் இருக்கின்றன.

புருஷர்கள் அத்தனை பேருக்கும் தொண்டையில் ஒரு புடைப்பு உருண்டையாக நீட்டிக் கொண்டிருக்கும். ஸ்த்ரீகளுக்கு இது கிடையாது. இதை ""Adam's apple'' என்பார்கள். ஆடம் என்ற ஆதிமநுஷ்யன் ஆப்பிளைத்தின்றதால்தான் காமம் உண்டாகி லோகத்தில் ஸம்ஸாரம் என்பதே ஏற்பட்டதாக அவர்கள் சொல்கிறார்கள். அவன்

*முழுங்கின ஆப்பிளில் கொஞ்சம் தொண்டையில் சிக்கிக் கொண்டு விட்டது. அதற்கப்புறம் ஆணாகப் பிறக்கிற எல்லாரும் அவனுடைய வழித்தோன்றல்கள் என்பதால் - தாத்தா, கொள்ளுத் தாத்தா ஜாடை நமக்கு இருக்கிறாற் போல் - புருஷாள் அத்தனை பேருக்கும் ஆடம்'ஸ் ஆப்பிள் தொண்டையில் உருட்டிப் புடைத்துக் கொண்டு தெரிகிறது என்கிறார்கள்.*

*நம் சாஸ்திரப்படி: பரமேச்வரன் காலகூட விஷத்தை ஒரு குளிகை மாதிரி உருட்டி வாயில் போட்டுக் கொண்டான். அப்போது அம்பாள் அவன் தொண்டையைப் பிடிக்க, கோலி குண்டு மாதிரி விஷம் கண்டத்திலேயே தங்கிவிட்டது. பரமேச்வரனுடைய கழுத்துக் கோலிதான் எல்லாப் புருஷாளிடமும் அவனுடைய ஸர்வாத்மக பாவத்தைக் காட்டுவதற்காக இருந்து வருகிறது என்கிறோம்.*

*இரண்டு கதைகளும், 'நம் அத்தனை பேருக்கும் ஒரு பொது* source,origin *இருக்கிறது; அதனால் நாம் எல்லாரும் ஸஹோதரர்களாக ஸம்பந்தப்பட்டிருக்கிறோம்' என்று காட்டுகின்றன. மநுஷ்யனை மூலமாகச் சொல்கிறபோது, நல்ல தித்திப்பும், ஆரோக்ய சக்தியும் -* ""An apple every day keeps the doctor away" *என்கிறார்களே, அப்படிப்பட்ட சக்தியும் - தரும் ஆப்பிளே பயங்கரமான ஸம்ஸார காரணமாயிருக்கிறது! ஈச்வரனை மூலமாகச் சொல்கிறபோதோ, கசப்பான பயங்கர விஷமே ஸர்வபூத தயையினால் அமிருதமாக ஆகித் தொண்டையில் ஒரு கெடுதலும் பண்ணாமல் உட்கார்ந்திருக்கிறது!*

*புருஷ ஸ்வரூபம் அவ்வளவும் ஈச்வரன், ஸ்திரீகள் அத்தனை பேரும் அம்பாள் என்று காட்டத்தான் எல்லா ஆண்களுக்கும் தொண்டைப் புடைப்பும் பெண்களுக்கு அதே கழுத்துப் பிரதேசத்தில் மூன்று ரேகைகளும் இருக்கின்றன.*

*அப்பர் ஸ்வாமிகள் திருவையாற்றிலே ஆணும் பெண்ணுமாகக் கண்ட யானை, கோழி, மயில், அன்னம், கிளி எல்லாவற்றையுமே சிவ - சக்தி தம்பதியாக அநுபவித்து, ''கண்டேனவர் திருப்பாதம், கண்டறியாதன கண்டேன்'' என்று பாடியிருக்கிறார். கொஞ்சம் புத்தியை, பக்தியைச் செலுத்திப் பார்த்தால் நமக்கும் இப்படி எங்கே பார்த்தாலும் சிவ-சக்தி ஜோடி தர்சனம் கிடைக்கும்.*

*சிவன் வெளுப்பு, சக்தி சிவப்பு என்றுதானே* colour spectrum *-ஐ (வர்ண மாலையை) வைத்து முக்யமாகப் பாகுபாடு பண்ணி, கார்யமில்லாத வெளுப்புச் சிவனிலிருந்து இந்தக் கார்யரூபமான சிவப்புக் காமேச்வரி என்று எக்ஸ்ப்ளெய்ன் பண்ணிக் கொண்டிருக்கிறேன்? சிவ-சக்திகள் மாதிரியே சேர்ந்து சேர்ந்து இந்த வெளுப்பு - சிவப்புகள் லோக வாழ்க்கையில் - பரலோக விஷயங்களில்தான் - பல தினுஸிலே வருவதைப் பார்த்தால் ஆச்சர்யமாயிருக்கும்! அந்த திவ்ய தம்பதியின் தர்சனம் பெற்றாற் போலேயுமிருக்கும்! குறிப்பாக, புருஷர்கள் ஸமாசாரம் வெளுப்பு, ஸ்த்ரீகள் ஸமாசாரம் சிவப்பு சிலது இருப்பது அந்த பாவத்தை உண்டாக்க அநுகூலம் செய்கிறது.*

*புருஷர்களுடைய தேஜஸ் ஸத்தே 'சுக்லம்' என்று இருக்கிறது. சுக்லம் என்றாலே வெளுப்புதான். அதே மாதிரி ஸ்த்ரீகளுடையது 'சோணிதம்' - அப்படியென்றால் சிவப்பு. இவன் இட்டுக்கொள்ளும் விபூதி வெளுப்பு. அவள் இட்டுக் கொள்ளும் குங்குமம் சிகப்பு. வைஷ்ணவர்கள் நாமத்தில் ஓரப் பட்டையான வெள்ளை பாகந்தான் பெருமாள்;*

*நடு சிவப்பு, தாயார்; ஸ்ரீசூர்ணம் என்றே அதற்குப் பேர், இட்டுக்கொள்வது இப்படியென்றால் கட்டிக் கொள்வதிலும் இவன் வேஷ்டி - வெள்ளை; அவள் புடவை - குஸும்பா என்று சிவப்பு. குஸும்பா என்றால் குங்குமப்பூ. அந்தக் கலர்தான் புடவைக்கு எடுத்தது. அதனால்தான் இப்போதும் கூறைப்புடவை என்றாலும், அம்பாளுக்குச் சார்த்துவது என்றாலும் அரக்கே எடுக்கிறார்கள். ''அருணாருண கௌஸும்ப'' என்றே அம்பாளின் புடவையைச் சிவப்பிலும் சிவப்பாக ஸஹஸ்ர நாமத்தில் சொல்லியிருக்கிறது.*

*இது தவிர வெள்ளை-சிவப்பு சேர்ந்து சேர்ந்தே வருவதில் - நம்முடைய ரத்தம் கண்ணுக்குச் சிவப்பாகத் தெரிந்தாலும் அதில்* corpuscles *என்று இருக்கும் இரண்டு வித 'ஸெல்'களில் ஒன்றுதான் சிவப்பு, மற்றது வெளுப்பு, அம்பாளுடைய சிவப்பில் வெள்ளை சிவனே வெள்ளை தெரியாமல் சிவப்புக் காமேச்வரனாகிவிட்ட மாதிரிதான் ரெட் கார்பஸல்ஸால் ஒயிட் கார்பஸல்ஸ் இருந்த இடம் தெரியாமலாகி ரத்தம் சிவப்பாகவே தெரிவது!*

*ஒரு கோலம் போட்டால்கூட வெள்ளைமாவில் அதைப் போட்டாலும் சுற்றிலும் செங்காவி; உள்ளுக்கு உள்ளேயும் செங்காவிதான்! கோவில் சுவரில் வெள்ளையும் சிவப்புமாகத்தான் மாற்றி மாற்றிப் பட்டை அடிப்பது. பெருமாள் நீலமானலுங்கூட, அவர் கோவிலிலும் அப்படித்தான் அடிப்பது!*

*அபிஷேகமா? பால்-தேன். கந்தமா? பச்சைக் கர்ப்பூரம்-குங்குமப்பூ, அர்ச்சனையா? மல்லிகை-அரளி. சாப்பாட்டில்கூட தத்யோன்னம்-சக்கரைப் பொங்கல்; 'ஸாம்பார் பாத்' என்றாலும் சிவப்புதான்! வெள்ளை இட்லி-சிவப்பு மிளகாய்ப்பொடி!*

*இங்கே (இட்லி-மிளகாய்ப் பொடியில்) வெள்ளை ஸாது, சிவப்புதான் உக்ரமாக சக்தியோடிருக்கிறது! அப்படியே சண்டையை நிறுத்தி ஸமாதானமாவதற்கு வெள்ளைக்கொடி, புரட்சிக்குச் சிவப்புக்கொடி என்று சிவ-சாந்தி, சக்தி-ராஜஸங்களைப் பார்க்கிறோம். இப்படி சிவத்தையும் சக்தியையும் முழுக்கப் பிரித்துவிடப்படாது என்கிற மாதிரி கார்பஸல்களில் வெள்ளைதான் நோய்க்கிருமிகளோடு சண்டை போடுவதாகவும், சிவப்பு சாந்தமாக ப்ராணவாயுவை ஊட்டி வளர்ப்பதாகவும் இருக்கின்றன! யுத்தம் ரத்தக் களறியாகப் பண்ணும்போது சிகித்ஸை கொடுத்து ஆற்றுவதும் ரத்தக் கலர் ரெட் க்ராஸ்தான்!*

*'கலர் ஸ்பெக்ட்ர'த்தில் சிவப்பு என்பது வெள்ளையோடு ஒட்டிக்கொண்டு, அதற்கு அடுத்தாற் போலேயே வருகிற ஒன்றுதான். (வெள்ளைக்கு) நேர் ஆபோஸிட்டாக இருப்பது ஊதாவே. அதனால்தான் சிவ சாந்தத்திற்கு நேர் எதிர் வெட்டான ஊதாவோடு சேர்ந்த நீல விஷ்ணு, விஷ்ணு துர்க்கை, கறுப்புக் காளிகளையே முழு மாயையாகச் சொல்வது. சிவப்புக் காமேச்வரி இந்த சாந்தத்தை ஒரு பக்கம் தொட்டுக் கொண்டே அந்த மாயைக் கோடி வரை போகிறவள்! இதனால்தான் தத்வ சிகரத்திலே 'பாதுகா மந்த்ர'த்தில் ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரணமாயிருக்கிற ஜ்யோதிஸை த்ரைபுரம் மஹஸ் என்று சொல்லி, அதனிடமிருந்து ஜீவ-ஜகத் விஸ்தாரத்தைக் குறிப்பிடும் போது ''ரக்த-சுக்ல ப்ரபா மிச்ரம்'' என்று சிவப்பு-வெளுப்புக் கலவையாகவே அதிலுள்ள வெளிக் கார்ய ஓட்டத்தையும் உள் சாந்தத்தையும் சொல்லியிருக்கிறது.*

*சிவாம்ச, சக்தியம்சங்கள் புருஷர்களிடமும் ஸ்த்ரீகளிடமும் இருப்பதில் நம் சரீரத்திலேயே வெளியில் நன்றாகத் தெரியும்படி இருப்பவை புருஷர்களில் கழுத்துக் கொட்டையும் ஸ்த்ரீகள் கண்டரேகைகளும்தான்.*

*ச்லோகத்தில் ''கலே ரேகா: திஸ்ரோ'' என்று அந்த மூன்று ரேகைகளைத்தான் ஆசார்யாள் குறிப்பிடுகிறார். கதி, கமக, கீதம் என்ற மூன்றில் அவள் நிபுணை என்பதால் அந்த மூன்றுமே இந்த ரேகைகள் என்று அர்த்தம் செய்து கொள்ள இடம் தருகிறார். இப்படி ஊஹமாக மாத்திரம் இல்லாமல், வெளிப்படையாகவே ''ஸங்கீதத்தில் உள்ள ஷட்ஜ, காந்தார, மத்யம க்ராமங்களின் எல்லையைப் பிரித்து அவை எங்கெங்கேயிருக்கின்றன என்று காட்டும் எல்லைக் கோடுகளை உன்னுடைய கழுத்து ரேகை மூன்றுமாக விளங்குகின்றன'' என்று அப்புறம் சொல்கிறார்- ''த்ரயாணாம் க்ராமாணாம் ஸ்திதி-நியம-ஸீமாந இவ தே கலே ரேகாஸ்-திஸ்ரோ விராஜந்தே:''*

*''த்ரயாணாம் தேவாநாம் த்ரிகுண ஜநிதாநாம்'' என்று முந்தி ஒரு ச்லோகத்தில் (25) வந்தது. முக்குணங்களில் ஒவ்வொன்றிலுமாக ஜனித்த த்ரிமூர்த்திகளை அங்கே சொன்னார். இங்கே ''த்ரயாணாம் க்ராமாணாம்'' என்கிற போதும் த்ரிகுணங்களைப் பற்றி இரண்டாம் வரியில் மறைமுகமாகச் சொல்கிறார்.*

*இந்த வரியில் வெளிப்படையாகச் சொல்வது எல்லாருக்கும் புரிகிற ஒரு உவமை; ஸங்கீத சாஸ்திர நுட்பம் மாதிரியானதல்ல. பரம மங்களமான பார்வதீ-பரமேச்வராள் திருக்கல்யாணத்தைப் பற்றிச் சொல்கிறார்: விவாஹ வ்யாநத்த ப்ரகுண குண ஸங்க்யா ப்ரதிபுவ:.*

*ஸாக்ஷாத் ஈச்வரன் அம்பாளுக்கு மாங்கல்ய தாரணம் செய்தான் அல்லவா? ''விவாஹ வ்யாநத்த'': விவாஹத்தில் கட்டப்பட்டது. அந்த மங்கள ஸூத்ரம் எப்படிப்பட்டது? ''குண-ஸங்க்யா'' - குணங்களின் எண்ணிக்கை - கொண்டது; ''ப்ரகுண'' - உயர்ந்த குணத்தைக் கொண்டது.*

*''மங்கள ஸூத்ரம் குணங்களின் எண்ணிக்கை கொண்டது, உயர்ந்த குணம் கொண்டது என்றால் ஒன்றும் புரியவில்லையே!''*

*குணங்களின் எண்ணிக்கை என்னும்போது ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்றைச் சொல்கிறார். மறுபடி 'ப்ரகுணம்' என்கிறபோது 'குணம்' என்றால் 'நூலிழை' என்று அர்த்தம். 'ப்ரகுணம்' என்றால் முக்யம் வாய்ந்த நூலிழை; ஸாதாரண நூலாயில்லாமல் மங்கள ஸூத்ரமாக இருப்பது என்று அர்த்தம். அதாவது குணங்களின் எண்ணிக்கையான மூன்று உயர்ந்த இழைகளை முறுக்கி அம்பாளின் மாங்கல்ய ஸூத்ரம் பண்ணப்பட்டிருக்கிறது என்கிறார். அந்த மூன்று இழைகளையும் ஞாபகப்படுத்துவதாக, அவற்றுக்கு உத்தரவாதமாக - ''ப்ரதிபுவ:'' என்றால் 'காரன்டி' கொடுப்பது; அப்படிப்பட்ட காரன்டியாக - அம்பாளுடைய கழுத்து ரேகை மூன்றும் இருக்கின்றனவாம்! இங்கே முக்குணங்களுக்கும் அவை ரூபமாக இருப்பதாக இன்னொரு உள்ளர்த்தம் எடுத்துக் கொள்ளலாம்.*

*''பாணிக்ரஹணந்தான் விவாஹத்தில் முக்யம். அதுதான் சுத்த வைதிகம். நம் தேசத்தின் ஸகலப் பிராந்தியங்களிலும், ஸகல ஜாதியார் கல்யாணங்களிலும் அதுதான்*

*இருக்கிறது. தாலி கட்டுவது என்பது சில பேருக்கு இல்லை'' என்று சொல்கிறவர்கள் சொன்னாலும் ஆசார்யாள் அம்பாளுக்கு ஈச்வரன் மங்கள ஸூத்ரம் கட்டினதாக இங்கே சிறப்பித்துச் சொல்லிவிட்டதால் அதற்கு முக்யத்வம் உண்டாகிவிடுகிறது! பாணிக்ரஹணம் என்பதில் ஸுமங்கலித்வத்துக்கான பெர்மனென்ட் அடையாளம் எதுவும் இல்லை. கையைப் பிடித்து, விட்டு விட்டால் அதோடு போகிறது! ''தொங்கத் தொங்கத் தாலியுடன்'' என்று மங்கள ஸூத்ரந்தான் ஸுமங்கலித்வத்துக்கு அடையாளமாக என்றைக்கும் இருக்கிறது. ரொம்பவம் பூஜிதம் என்று கார்த்தாலே எழுந்தவுடன் ஸ்த்ரீகள் அதைக் கண்ணிலே ஒற்றிக் கொள்வார்கள். காரடை நோன்பு என்று மாசி-பங்குனி ஸந்தியிலே அதற்குத்தான் பூஜை நடக்கிறது.*

*ஸஹஸ்ரநாமத்திலேயும், ''காமேச பத்த மாங்கல்ய ஸூத்ர சோபித கந்தரா'' (காமேச்வரனால் கட்டப்பட்ட மங்கள ஸூத்ரத்தால் சோபிக்கிற கழுத்தை உடையவள்') என்று வருகிறது.*

*''குணம்'' - 'நூலிழை' என்றுதான் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். ஆகையால், 'மஞ்சள் கயிறு ஃபாஷனாக இல்லை; அழுக்காகி விடுகிறது'' என்று அதைக் கட்டிக் கொள்ளாமல், தங்கத்தில் 'கொடி' என்று பண்ணி அதிலேயே தாலி குண்டுகளைப் போட்டுக் கொள்வது ரொம்பவும் தப்பு. அன்னன்னிக்கும் (அன்றன்றும்) மங்கள ஸூத்ரத்தில் மஞ்சள் பூசிக்கொண்டால் அழுக்கே ஆகாது.*

*வெறும் ஓலையில் தோடு. நூலிழையால் மங்கள ஸூத்ரம் என்று அம்பிகை ரொம்ப ஸிம்பிளாகத்தான் இருந்திருக்கிறாள். இவை எல்லா ஸுமங்கலிகளும் போட்டுக் கொள்ள வேண்டியவையாதலால் பரம ஏழைக்குக்கூடக் கஷ்டமில்லாதபடி, தானே எக்ஸாம்பிள் காட்டுகிறாள். மற்ற நவரத்ன கிரீடம் தங்க ஒட்டியாணம் முதலானவை அதிகப்படிதான் - எல்லாருக்கும் 'கம்பல்ஸரி' இல்லை.*

*கழுத்திலே மூன்று ரேகைகள்: கதி, கமக, கீதம் என்பவையும் மூன்று, குணங்கள் மூன்று. மங்கள ஸூத்ரம் மூன்று சரட்டு முறுக்கு. ஸங்கீத க்ராமங்கள் மூன்று. இப்படி மூன்று மூன்றாகவே ஒரு பஞ்சகம் இந்த ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார்.*

*ஸங்கீதத்தில் இருக்கிற பல ஸம்ப்ரதாயங்களில் ஒவ்வொன்றையும் கலப்படம் வராமல் சுத்தமாக ரக்ஷிக்க வேண்டும். இப்படி மூன்று-க்ராம-வியவஸ்தையை ஒன்றோடொன்று கலந்து அவியல் செய்யவிடாமலிருப்பதற்காகத் தான் அவை உண்டாகும் அம்பாளின் கண்டத்தில் ஒவ்வொன்றுக்கும் தீர்மானமாக எல்லைக்கோடு கட்டும் மூனறு ரேகைகள் இருக்கின்றன என்கிறார். நாதோ பாஸனையில் எவ்வளவு டிஸிப்ளின் வேண்டுமென்று காட்டுகிறார்.*

*பக்தியோடு கலந்து நாதோபாஸனையாக கானம் செய்தால் ஸங்கீதமே ஈச்வர ஸாக்ஷாத்காரத்திற்கு வழிகாட்டும். ச்ருதி-லயங்களோடு லயித்துப்போய்த் தன்மயமாகிறபோது ஆத்ம லயமே உண்டாகி அத்வைதத்துக்கு அழைத்துப் போய்விடும். ''எந்தரோ மஹாநுபாவுலு'' என்று த்யாகையர் பாடின மாதிரி இப்படி நாதாநுஸந்தானம் பண்ணின எத்தனையோ மஹா அநுபவிகள் இருந்திருக்கிறார்கள்; இப்போதும்*

*இருக்கலாம். பாடின த்யாகையர்வாளே அப்படிப்பட்ட மஹாநுபாவர்தான். அவரோடு, அவர் மாதிரியே ஸங்கீதத்தால் தன்மயமான இரண்டு பேரைச் சேர்த்து 'ஸங்கீத த்ரிமூர்த்தி' என்கிறோம். 150 வருஷத்துக்குள் இப்படி ஒரே ஸமயத்தில் அதிசயமாக ஒரு த்ரிமூர்த்தி இருந்திருக்கிறார்கள். பஞ்சகத்துக்கு மேல் ஷட்கமாக (ஆறாவதாக) இன்னொரு மூன்றைச் சேர்த்து விட்டேன்!*

*குணங்கள் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று மூன்றே ஆனாலும் அவை பல* proportion *-ல் (விகிதாசாரங்களில்) சேர்வதால்தான் லோகத்தில் எல்லையே இல்லாத மனோபாவங்கள் உண்டாகின்றன. 51 அக்ஷரங்களை வைத்துக்கொண்டே (இங்கிலீஷ் ஆல்ஃபபெட்டானால் இதிலும் பாதி; 26 எழுத்துத்தான்; இதை வைத்துக் கொண்டே) லக்ஷக்கணக்கான வார்த்தைகளை உண்டாக்கி இருக்கிறது. இப்படி, ஏழே ஸ்வரங்களை மூன்று கிராமங்களில்* permutation, combination *செய்து (பலவிதமாகச் சேர்த்தும், விட்டும்) மாற்றி மாற்றியமைத்துஷே ஏராளமான ராகங்களை உண்டாக்கியிருக்கிறது. அதைத்தான் ச்லோகத்தில் ''நாநாவித மதுர ராக (ஆ)கர புவாம்'' என்று சொல்லி இருக்கிறது. 'நானாவிதமான மதுரமுள்ள ராகச் சுரங்கத்தைப் பிறப்பிப்பது' என்று அர்த்தம். 'பிறப்பிக்கும் மூன்று க்ராமம்' என்று நாலாம் வரியோடு சேர்க்க வேண்டும்.*

*''ராக ஆகரம்'': 'ராகச் சுரங்கம்'. சுரங்கத்தைத் தோண்டத் தோண்டப் பொன்னும் மணியும் கிடைப்பது போல் ஸ்வர ஸூக்ஷ்மங்களைத் தோண்டத் தோண்ட ராகங்கள் கிடைத்துக் கொண்டேயிருக்கின்றன. 'ஆகரம்' என்றால் சுரங்கம். ஸமுத்ரத்தில் ரத்னம் கிடைப்பதால் அதற்கு 'ரத்னாகரம்' என்று பெயர். 'கருணாகரன்', 'தயாகரன்' என்றால் 'கருணை பண்ணுகிறவன்', 'தயை பண்ணுகிறவன்' என்று அர்த்தம் பண்ணிக் கொள்வதை விட 'கருணைச் சுரங்கம்', 'தயைச் சுரங்கம்' என்று பண்ணிக் கொள்வதே ஸரியானது.*

*ராகம் என்று ஸ்வரங்களைப் பலவிதமாகச் சேர்க்கும்போது காதுக்கு மதுரமாகவும், மனஸுக்கு ஸௌக்யமளிப்பதாகவும் இருக்கும்படியே பண்ண வேண்டும். ரஞ்ஜகமாகச் சேராத ஸ்வரங்களைச் சேர்த்து கஸரத் பண்ணுவது ராகமாகாது. அதனால்தான், ''நாநாவித மதுர ராக'' என்று போட்டிருக்கிறார். மாதுரியம், இனிமை முக்யம். தாம் சொல்கிற அம்பாளைப் போலவே தாமும் 'கதி-கமக-கீத-ஏக நிபுண'ராகவுள்ள நம்முடைய ஸர்வஜ்ஞரான ஆசார்யாள் ஸங்கீத சாஸ்த்ர ப்ரக்ரியை, ப்ரகாரம் (முறை, வழி) ஆகியவற்றை நன்றாகத் தெரிந்து வைந்திருக்கிறார். ஆனாலும் 'தியரி'யோடு வறட்டாக நிற்காமல், ரஸிகராயிருந்து கொண்டு, ராக ரூபத்தில் மாதுர்யத்தை முக்ய லக்ஷணமாகச் சொல்லியிருக்கிறார்.*

*இத்தனை ராகங்களும் ஸாக்ஷாத் தேவியின் கண்டத்தில் மூன்று எல்லைக் கோடுகளுக்குள் அடங்கியிருக்கிறது. ஈச்வர கண்டத்தில் விஷம் அமிருதமாகியிருக்கிறது; அம்பாள் கண்டத்தில் ஸங்கீதாம்ருதம் இருக்கிறது! அவனுடைய கண்டத்துப் புடைப்பு, இவளுடைய கண்டத்து ரேகை இரண்டுமே அவர்கள் எல்லா ஸ்திரீ-புருஷ ரூபங்களிலும் இருப்பதை இன்றைக்கும் ஞாபகப்படுத்தி அவர்களுடைய ஸர்வாத்மக அத்வைத பாவத்தை நினைப்பூட்டுகிறது.*

## ஹஸ்த விசேஷம்

*கழுத்து வர்ணனையானபின் அம்பாளுடைய கரத்தின் விசேஷத்தை (70, 71, ஆகிய) இரண்டு ச்லோகங்களில் சொல்கிறார். பத்மத்தோடுதானே கரத்தை ஒப்பிடுவது? அதற்கே முதல் ச்லோகத்தை பத்மஸம்பவரான ப்ரம்மாவை ஸம்பந்தப்படுத்தியும் இண்டாவதை அவருக்கும் தாயான பத்மாவதியை ஸம்பந்தப்படுத்தியும் பாடியிருக்கிறார்.*

*ஸ்வாமி சிக்ஷணம் செய்யும்போது ரக்ஷணம் தருபவள் அம்பாள். 'தண்டிப்பது தகப்பனார் கடமை' என்று அவர் காட்டினால் 'தயை தாய் ஸ்வரூபம்' என்று அவள் காட்டுவாள். ப்ரம்மா பரமேச்வரன் மாதிரியே ஐந்து தலைகளை வைத்துக்கொண்டு தப்புக் கார்யம் பண்ணினபோது பரமேச்வரன் சிக்ஷணமாக அவருடைய ஒரு தலையைக் கிள்ளிப்போட்டு அவரைச் சதுர்முகனாக ஆக்கினாரென்று கதை. அவருக்கு நாலு தலை எப்படித் தப்பியது, தலை தப்ப அந்தத் தம்பிரான் செய்த புண்ய கார்யம் என்ன என்று ஆசார்யாள் (ச்லோ-70ல்) சொல்கிறார். ''அபயம்'' என்று அம்பாளிடம் ஓடினதுதான் அந்தக் கார்யம் என்கிறார். முன்னே (ச்லோ-4ல்) இவள் ஹஸ்தத்தால் அபயம் காட்டாமல் சரணத்தாலேயே கொடுத்துவிடுகிறவள் என்றவர், இங்கே கல்பனையழகுக்காக அதையே மாற்றிச் சொல்கிறார். அம்பாளுக்கு எத்தனை ஹஸ்தம்? நாலு. பிரம்மாவுக்கு மிஞ்சின சிரஸுு எத்தனை? அதுவும் நாலு. பிரம்மா யார்? ''ஸரஸிஜபவன்'' - தாமரையில் உதித்தவர்' என்கிறார். அம்பாளுடைய ஹஸ்தமும் தாமரை மாதிரி இருக்கிறது. தோள்பட்டையிலிருந்து வரும் அவளுடைய புஜம் தாமரைத் தண்டு மாதிரியும், அதன் முடிவில் வரும் ஹஸ்தம் தாமரைப் பூ மாதிரியும் இருக்கிறது. தாமரைக்குத் தாமரை ஜாதி அபிமானத்தில் உபகாரம் பண்ணுந்தானே? அதனாலேயே தாமரையில் பிறந்தவர் தன் ஒவ்வொரு சிரஸுுக்கும் அம்பாளின் ஒவ்வொரு தாமரை ஹஸ்தத்திடம் அபயம் கேட்டுக் பிரார்த்தித்துத்தான் அந்த சிரஸுுகளைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறார் என்கிறார்.*

*அம்பாளுடைய ஹஸ்தத்தைத் தாமரை என்று சொன்னது அதைக் குறைவுபடுத்திவிட்ட உவமை என்று அப்புறம் ஆசார்யாளுக்குத் தோன்றிவிடவே 'பிழைதிருத்தம்' பண்ணி அடுத்த ச்லோகத்தைக் கொடுத்திருக்கிறார். - லக்ஷ்மீ ஸம்பந்தப்படுத்தி! பத்ம தளங்களின் நுனிபாகந்தான் அதில் ஜாஸ்தி சிவப்பாயிருப்பது. அம்பாளுடைய பத்ம ஹஸ்தத்தில் தளங்களின் ஸ்தானத்திலுள்ள விரங்களின் நுனியோ அதையும்விடச் சிவப்பாயிருக்கிறது- சாயம், கீயம் பூசிக்கொள்ளாமலேயே! இந்த காந்தியைப் பத்மம் எங்கேயாவது பெற முடியுமா? தப்பாக உபமானம் சொல்லிவிட்டோமே! ஆனால் அம்பாள் கொடுத்த வாக்கால்தானே சொன்னோம்? அது தப்பாகச் சொல்ல இடம் கொடுக்குமா? அதனால் இன்னம் கொஞ்சம் கல்பனா சக்தியை ஓட்டிப் பார்த்து ஸமாதானம் கிடைக்கிறதா, பார்ப்போம்!' என்று நினைத்திருக்கிறார். அப்படியொன்று கிடைத்ததைத்தான் ச்லோகமாகப் பாடிக் கொடுத்திருக்கிறார்.*

*என்ன ஸமாதானம்? ''பத்மத்திற்குள்ளே லக்ஷ்மிவாஸம் பண்ணுகிறாளே, அவளுடைய பாத பத்ம ஸம்பந்தமும் அதற்குக் கிடைப்பதில் அதற்கு இரட்டிப்புக் காந்தி கிடைத்திருக்கும். அது மட்டுமில்லை. அவள் சரணத்தில் அரக்கு நலங்கு வேறே*

*பூசிக்கொண்டு, அந்த விரல்களால் விளையாட்டாக பத்ம தளங்களின் நுனிகளை நிமிண்டிக் கொண்டிருக்கலாம். அப்போது அந்தச் சிவப்பும் சேர்ந்து காந்தி மும்முடங்கு ஆகுமோல்லியோ? அப்போதாவது அது கொஞ்சம் - சிறிதளவு - அம்பாளுடைய ஹஸ்த காந்தியைப் பெற்றதாயிருக்கட்டும் ! என்று ஒரு மாதிரி ஐஸ்டிஃபை பண்ணியிருக்கிறார்.*

*அப்போதுங்கூட பத்மம் அம்பாளின் ஹஸ்த சோபையைப் பெற்றுவிட்டதாகச் சொல்லாமல், ''கயாசித்வா ஸாம்யம் பஜது கலயா'' - ''எப்படியோ கொஞ்சம், ஒரு* fraction, *ஸமதை அடையட்டும்'' என்றே சொல்கிறார்!*

*லக்ஷ்மியைச் சொன்னதால் அம்பாளுடைய ஹஸ்தம் ஸகல ஸ்ரீயும் தரும் என்று தாத்பர்யம்.*

## ஞானப்பால்

*கேசாதிபாத வர்ணனையில் அப்புறம் வக்ஷோஜத்தை (மார்பகத்தை)ப் பற்றி ச்லோகங்கள் பாடியிருக்கிறார். அதிலொன்றில் (ச்லோ-73) அம்பாளுடைய க்ஷீரம் அம்ருதம் - இல்லை; அம்ருதத்திற்கும் மேலே - என்பதற்குக் காரணம் காட்டுகிறார். என்னவென்றால் அம்ருதம் சாப்பிட்ட தேவர்கள் நித்ய யௌவனமாயிருப்பவர்கள். அதாவது நடுத்தர வயஸாகவே இருப்பவர்கள், கிழத்தனம் அடையாதவர்கள். அம்பாளுடைய க்ஷீரத்தைப் பானம் பண்ணிய கணபதியும் ஸுப்ரஹ்மண்யமுமோ நடுத்தர வயஸுக்குக்கூடப் போகாமல் நித்ய பாலர்களாகவே, ''என்றும் இளையாய்!'' என்னும்படி இருக்கிறார்கள் என்கிறார். ''குமாரௌ அத்யாபி'' - இன்றைக்குக்கூட பாலர்களாயிருக்கிறார்கள்.*

*என்ன தாத்பர்யம்? காமமே தெரியாத ஞானமூர்த்திகளாக அந்த இரண்டு பேரையும் அம்பாளுடைய க்ஷீர மஹிமை பண்ணிவிடுகிறது என்பதுதான்! அவிதித - வதூ-ஸங்க-ரஸிகௌ குமாரௌ - ஸ்த்ரீ போகம் இன்ன தென்றே தெரியாத குழந்தைகள்' என்று தாமும் அப்படியே இருந்த பகவத்பாதாள் சொல்கிறார்! 'கௌமாரம்' என்ற குழந்தைப் பருவத்திலிருந்து நடு வயஸான 'யௌவன'த்திற்குப் போன தேவர்கள், அப்புறம் கிழத்தனம் வராத அம்ருத பானக்காரர்களானவர்கள். நித்ய யுவாக்களானதால் அவர்களுக்குச் சிற்றின்பந்தான் ஒரே நாட்டம். அதனால் க்ஷீர ஸாகர அம்ருதத்தைவிட ஸௌந்தர்ய ஸாகரமான அம்பாளின் க்ஷீராம்ருதம் ரொம்ப ரொம்ப உசத்திதானே?*

*தக்ஷிணத்தில் கணபதி ப்ரஹ்மசாரி; ஸுப்ரஹ்மண்யர் வல்லீ தேவஸேனா ஸமேதர். வடக்கே ஸுப்ரஹ்மண்யர்தான் ப்ரஹ்மசாரி; கணபதி ஸித்தி புத்தி அல்லது வல்லபா ஸமேதர். ப்ரஹ்மசர்ய பராகாஷ்டையாக (எல்லைக் கோடியாக) இருந்த ஆசார்யாள் தக்ஷிண தேச கணபதியையும் உத்தர தேச ஸுப்ரஹ்ண்யத்தையும் ஒன்று சேர்த்துப் பாடியிருக்கிறார்! அம்பாளுடைய க்ஷீரம் ஞானப்பால் என்று காட்டியிருக்கிறார்.*

## ''தமிழ்க் குழந்தை''

*தான் பெற்ற ஞானத்தைக் கவிதையாக்கி எல்லோருக்கும் தருகிற ஞானக் கவிகளையும் அம்பாளுடைய ஸ்தன்யம் (பால்) ஸ்ருஷ்டி பண்ணிவிடுகிறதென்று அப்புறம் ஒரு ச்லோகத்தில் (75) சொல்கிறார்.*

*''அம்மா உன்னுடைய ஸ்தன்யம் ஞானம், கருணை ஸௌந்தர்யம், இன்னும் என்னவெல்லாம் உத்க்ருஷ்டமானது உண்டோ அவ்வளவையும் பிறப்பிக்கும் உன் ஹ்ருதயத்திலிருந்தே வருவது - ஹ்ருதயத: பய: பாராவார: பரிவஹதி'' - 'ஹ்ருதயத்திலிருந்தே ஸமுத்ரமாகப் பெருகுகிறது'. அது அறிவு. கலை இவற்றுக்குத் தெய்வமான ஸாக்ஷாத் ஸரஸ்வதியின் ஸாரம் போன்றது; 'ஸாரஸ்வத மிவ''. அந்த ஞானப் பாலை நீ தமிழ்க் குழந்தைக்கு ஊட்டினாய்''... ''த்ரவிட சிசு'' - 'தமிழ்க் குழந்தை' என்கிறார். ஊட்டினதால் என்ன ஆச்சு? அந்தக் குழந்தை ''கவீநாம் ப்ரௌடாநாம் அஜநி கமநீய: கவயிதா'' - 'ப்ரௌட கவிஞர்களுக்கெல்லாம் மேலே மனஸை ஆகர்ஷிக்கிற கவியாக ஆகிவிட்டது'.*

*'ப்ரௌட கவி' என்றால் நல்ல புஷ்டியான காவ்ய சக்தி படைத்தவர். ருதுமதியான பெண்ணை 'ப்ரௌடா' என்பார்கள். தேஹத்திலே வீர்ய சக்தி மாதிரி வாக்கிலே உண்டானால் ப்ரௌட கவி. அதிலே கொஞ்சம் 'தான்'' தலை தூக்கத்தான் செய்யும். (சிரித்து) ப்ரௌடர்கள்* proud *ஆக இடமுண்டு. அப்போது பண்ணும் கவிதையில் புத்தி க்ரித்ரிமம் ஜாஸ்தியாகிவிடும். ஹ்ருதயத்தை ஆகர்ஷிக்கிற உணர்ச்சி பாவங்கள் குறைந்துவிடும். ஸாக்ஷாத் பரதேவதையின் க்ஷீரத்தை - 'பாற்கடலாக ப்ரவஹிக்கிறது: பய:பாராவார: பரிவஹதி' என்று இந்த ஸௌந்தர்ய லஹரியில் வந்த அநேக லஹரிகளோடு பரம மதுரமான, மாத்ருத்வ ஸாரமான க்ஷீர லஹரியையும் சேர்த்துச் சொன்னாரே, அப்படிப்பட்ட க்ஷீரத்தை - பானம் பண்ணின தமிழ்க்குழந்தை ஹ்ருதய வசீகரமான ('கமநீய'மான என்று சொல்லியிருப்பதற்கு அதுதான் அர்த்தம்; அப்படி மனஸைத்தொட்டு ஆகர்ஷிக்கிற) கவிதையைச் செய்யும் கவியாகி, அதோடுகூட ப்ரௌட கவிஞர்களுக்குள்ள வாக்புஷ்டியும் பெற்று அவர்களுக்கிடையே 'டிஸ்டிங்க்ஷன்' பெற்று விளங்கிற்று என்கிறார்.*

*அந்த த்ரவிட சிசு - தமிழ்க் குழந்தை - அம்பாளின் ஞானப்பாலைச் சாப்பிட்டு நிஜமாகவே ஞானஸம்பந்தராக ஆன நம்முடைய தேவாரகர்த்தாவாகத்தான் இருக்கணுமென்று தோன்றலாம். ஞான ஸம்பந்த மூர்த்தியின் காலம் கிறிஸ்து சகாப்தம் பிறந்த அப்புறம் ஏழாவது நூற்றாண்டு என்று தெரிகிறது. ஆசார்யாளோ கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலத்தில் ஆறாம் நூற்றாண்டுக் கடைசியிலிருந்து ஐந்தாம் நூற்றாண்டின் முதல் கால் பாகம் வரை - ஏறக்குறையச் சொல்கிறேன் - இருந்ததாகத் தெரிகிறது. ஆயிரம் வருஷத்திற்கும் ஜாஸ்தி இடைவெளி ஆசார்யாள் காலத்திற்கும் ஸம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் காலத்திற்கும் இருக்கும்.*

*ஸௌந்தர்யலஹரி பாஷ்யம் பண்ணினவர்கள் ஆசார்யாள் வாழ்க்கையிலேயே அவர் குழந்தையாயிருந்த போது அம்பாள் அவருக்கு க்ஷீரம் ப்ரஸாதித்தாளென்று ஒரு சம்பவம் இருப்பதை எடுத்துக்காட்டி 'த்ரவிட சிசு' என்று தம்மையேதான் அவர் மூணாம் மநுஷ்யா மாதிரி கவி நயத்தோடு - (சிரித்து) விநயத்தோடுந்தான்! 'நானாக்கும் ஞானப்பால் குடிச்சேன்!' என்காமல் தம்மையே யாரோ மூணாம் மநுஷ்யர் மாதிரி - குறிப்பிட்டிருக்கிறார் என்கிறார்கள். மலையாளம் என்று ஒரு பாஷையாக ஏற்பட்டு ஆயிரம் வருஷந்தானாகிறது. அதற்கு முந்தி அங்கேயும் தமிழ்தான் பாஷை; அதுவும்*

த்ரவிட தேசந்தான். ஆகையால் ஆசார்யாள் தம்மையே 'த்ரவிட சிசு' என்று சொல்லிக் கொள்ள தாராளமாக இடமுண்டு. நமக்கும் அது மஹா பெருமை.

ஆனால் விநயத்தைச் சொன்னேனே! ஆசார்யாளின் விசேஷ குணம் அது என்று தெரியும். அப்படிப்பட்டவர் என்னதான் மூணாம் மநுஷராகச் சொல்லிக் கொண்டாலும் அப்போதுகூட தம்மைப்பற்றி ப்ரௌட கவிகள் எல்லோருக்கும் மேற்பட்ட கமநீய கவியானதாகச் சொல்லிக் கொள்வாரா என்று கேள்வி கேட்கலாம். யோஜித்துப் பார்த்தால் இதில் அநுசிதமில்லை. ஏனென்றால் இங்கே விஷயம் அம்பாளுடைய ஸ்தன்ய மஹிமைதான். அது எப்பேர்ப்பட்ட சக்தியோடு ஒருத்தருக்குக் கவி பாடும் திறமை தருகிறது என்பதைச் சொல்லும்போது எல்லாக் கவிகளுக்கும் மேம்பட்ட ஸ்தானத்தில் ஒருத்தரை உட்கார்த்தி வைக்கிறது என்றும் ப்ரத்யக்ஷ உதாரணம் கொடுத்துச் சொல்வது யுக்தந்தானே? ''எங்கேயோ தள்ளி நிற்கிற என்னையும் கடாக்ஷி!'' என்றவர் அப்படிப்பட்ட தன்னையும் கவி-ஸார்வபௌமராக அவளுடைய க்ஷீரம் ஒரு தூக்குத் தூக்கியதாகச் சொன்னால்தானே அதன் உசத்தியும் தெரியும்?

த்ரவிட சிசு என்பதற்குப் பல விதமான கதைகள் பழைய நாள் வ்யாக்யாதாக்களிலிருந்து இன்றைய ஆராய்ச்சியாளர்கள் வரையில் பண்ணியும் முடிவு கண்டபாடாக இல்லை. நமக்கு வேண்டியது அந்த ஞானப்பாலுக்கான தாஹந்தான். மற்றபடி அது (த்ரவிட சிசு) யாராயிருந்தாலும் அதனால் நமக்கொன்றும் லாபமுமில்லை, நஷ்டமுமில்லை. நமக்குக் கவி பாடும் திறமையெல்லாங்கூட வேண்டாம். ஞானத்திற்காகவே அந்த ஞானாம்பாளைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தால் போதும்.

## கற்பில் கல் போலான முழங்கால்

கேசாதிபாதம் அம்பாளை வர்ணித்துக் கொண்டு போவதில் திருமேனி, இடுப்புப் பிரதேசம் முதலானவற்றை கவி மரபுப்படி வர்ணித்து ச்லோகங்கள் பண்ணிக் கொண்டு, பாதம் வரைக் கொண்டுபோய் முடித்திருக்கிறார். காவ்ய நாயகியாக - 'தலைவி' என்று தமிழிலக்கியத்தில் சொல்கிறபடி - இங்கேயெல்லாம் அம்பாள் தலைவனான ஸ்வாமிக்கு ஒரு படி மேலேயே, அவன் இவளிடம் தவித்து வேண்டுகிற ஸ்தானத்தில் இருப்பதாகக் காட்டிக் கொண்டு போகிறார். அந்தக் காமேச்வரியைக் கொண்டு அவளிடமிருந்தே புத்துயிர் பெற்ற காமன் ஈச்வரனை ஜயித்ததாகச் சொல்லிக் கொண்டு போயிருக்கிறார். காவ்ய ஸம்ப்ரதாயம் என்கிற ரீதியில் சுத்தமான மனஸோடு பார்த்து ரஸித்துக் கொண்டு மேலே போகணும் - அப்படியே நிஜமென்று எடுத்துக் கொள்ளாமலும், அதிக விஸ்தாரம் பண்ணாமலும்! பக்தி இருந்தால், பணிவு இருந்தால் அப்படித்தான் பண்ணவரும். இத்தனை காலமாக ஸௌந்தர்யலஹரி பாராயணம் செய்பவர்கள் அப்படித்தான் செய்து வந்திருக்கிறார்கள். தன்னாலேயே அது அப்படித்தான் செய்ய வைத்திருக்கிறது! ஆனபடியால் நான் 'இப்படியாகப்பட்ட மனோபாவத்தோடு பாருங்கள்' என்று உபதேசம் பண்ண வேண்டியதுகூட இல்லை.

கவி லக்ஷணம் என்பதற்காக இப்படி நாயகியை நாயகனுக்கு மேலே தூக்கிக் காட்டினாலும் ஆசார்ய லக்ஷணம் பதிக்கு அடங்கிய பதிவ்ரதையாகப் பத்னியாகக் காட்டுவதே என்பதை ஆசார்யாள் மறக்கவேயில்லை. அதனால் வர்ணனையில்

*அம்பாளுடைய முழங்காலைச் சொல்லவேண்டிவருகிறபோது (ச்லோ-82) ''பத்யு: ப்ரணதி-கடிநாப்யாம் ஜாநுப்யாம்'' என்று போட்டிருக்கிறார். என்ன அர்த்தமென்றால்: யானைத் துதிக்கை மாதிரியும், பொன் வாழைத் தண்டு மாதிரியும் பரம ம்ருதுவாக இருக்கும் அம்பாளுடைய காலிலேயே இந்த முழங்கால் முட்டி மட்டும் ஒரே கெட்டியாயிருக்கிறது. யாருக்குமே அப்படித் தானே இருக்கும்? அதனால் அவளுக்கும் அப்படியிருக்கிறது என்று விட்டுவிட்டால் கவிக்கு அழகு இல்லை. அதனால் கவியாக அதற்கு ஒரு காரணம் கல்பிக்கும்போதே தர்மாசார்யராகப் பாடியிருக்கிறார். அவள் மஹா பதிவ்ரதை. அதனால் பரம பணிவோடு பதிக்கு விழுந்து விழுந்து நமஸ்காரம் பண்ணிக் கொண்டேயிருப்பவள். ஸ்த்ரீகள் காலை மடித்து காலின் நடு பாகம் பூமியில் படுகிற மாதிரிதானே நமஸ்கரிப்பது? அப்படி ஓயாமல் ஒழியாமல் அம்பாளுடைய அந்த பாகம் பூமியில் உராய்ந்து காய்ப்புக் காய்த்துப் போயேதான் முட்டி என்ற கெட்டி பாகமாக முழங்கால் ஆகிவிட்டது என்கிறார். ''பத்யு: ப்ரணதி கடிநாப்யாம்'' - ''பத்யு:'' - பதிக்கு; 'ப்ரணதி' - நமஸ்காரம் பண்ணிப் பண்ணியே; ''கடிநாப்யாம்'' - கெட்டிப் பட்டுப் போன; ''ஜாநுப்யாம்'' - முழங்காலின் இரண்டு முட்டி!*

*இங்கே அம்பாளைக் கூப்பிடும் போது இரண்டு பேர் சொல்லியிருக்கிறார். ''கிரிஸுதே'' என்று ஒன்று. ''விதிஜ்ஞே'' என்று இன்னொன்று. ''கிரிஸுதே!'' என்றால் 'மலை மகளே!' மலை கல்லுதானே? அந்தக் கல்லுக்கு மகள் என்பதால் இவளுடைய முழங்காலும் கல் மாதிரி இருக்கிறது என்று ஸூசனை பண்ணுகிறார். இது கவியாகச் சொன்னது. அப்புறம் தர்மாசார்யாராகக் கூப்பிடும்போது ''விதிஜ்ஞே!'' என்கிறார். அப்படியென்றால் ''சாஸ்த்ர விதிகள் அறிந்தவளே!'' என்று அர்த்தம். வேதத்தைக் கொண்டு விதிகள் போட்டவளே அவள்தான் என்பதால் ஸஹஸ்ர நாமம்,. ''நிஜாஜ்ஞா-ரூப-நிகமா'' என்று பேர் சொல்லி இருக்கிறது. அவளே நமக்காக அந்த விதிகளைத் தானும் பின்பற்றிக் காட்டுகிறாள். அப்படித்தான் பத்னி தர்மமாகப் பதியை நமஸ்கரிக்கிறாள், காலின் மத்ய பாகம் முட்டி என்று கெட்டிப்படுமளவுக்கு! இத்தனை அபிப்ராயத்தையும் ''விதிஜ்ஞே'' என்ற அந்த சின்ன ஸம்போதனத்தாலேயே (விளியாலேயே) ஆசார்யாள் தெரிவித்து விடுகிறார்.*

## பகவத்பாதரும் பகவதி பாதமும்

*இப்படியே வர்ணித்துக் கொண்டுபோய் சரணங்களுக்கு - திருவடிகளுக்கு - வருகிறார். அதுதான் நாம் போய் விழ வேண்டிய இடம் சரண், அரண், புகல் என்றெல்லாமம் அதைத்தான் பிடித்துக் கொள்ளணும். முகத்தை, ஹஸ்தத்தைப் பிடிக்கச் சொல்வதில்லை. கழுத்தை? (சிரிக்கிறார்) பாதத்தைத்தான் பிடிக்க வேண்டும். பாதத்தைப் பிடிக்கத்தான் வேண்டும். நம்மைப் பிடித்திருக்கிற கர்மா, ஜன்மா போய் மோக்ஷ வீட்டைப் பிடிக்கணுமானால்!*

*நாம் இஷ்டப்படிப் போய்ப் பிடித்துவிட முடியுமா? அவள் இஷ்டப்பட்டு பிடிபடணும். அதைத்தான் ஆசார்யாள் ப்ரார்த்திக்கிறார். ''உன் பாதத்தை நான் பிடிக்கணும்'' என்காமல் 'அதை நீ தரணும் - தயை உள்ளவளானதால் தந்தருளணும்'' என்று ப்ரார்த்திக்கிறார். ''தயயா தேஹி சரணௌ''.*

**ச்ருதீநாம் மூர்தாநோ தததி தவ யௌ சேகரதயா**
**மமாப்யேதௌ மாத: சிரஸி தயயா தேஹி சரணௌ ।**
**யயோ: பாத்யம் பாத: பசுபதி - ஜடா-ஜூட-தடிநீ**
**யயோர்-லாக்ஷா-லக்ஷ்மீ: அருண-ஹரி-சூடாமணி ருசி: ॥ 84**

*(மாத:) தாயே! (தவ) உனது (யௌ சரணௌ) எந்த இணையடியை (ச்ருதீநாம் மூர்த்தான:) மறைமுடியான உபநிஷத்துக்கள் (சேகரதயா) முடியணியாக (தததி) தரிக்கின்றவோ, (யயோ:) எவற்றுக்கு (பசுபதி) சிவபெருமானின் (ஜடா ஜூட தடிநீ) முடிக்கற்றைகளிலுள் ஆறு (கங்கை) (பாத்யம் பாத:) ''பாத்ய'' உபசார நீராகிறதோ, (யயோ:) எவற்றுக்கு (அருண ஹரி சூடாமணி ருசி:) திருமாலுடைய முடிமணியின் செவ்வொளி (லாக்ஷா லக்ஷ்மீ:) செவ்வரக்கின் சோபையாகிறதோ, (ஏதௌ) அந்த இணையடியை (மம) எனது (சிரஸி அபி) முடியிலுங்கூட (தயயா) தயையினால் (தேஹி) வைப்பாயாக!)*

*அம்பாளுடைய ஞானப்பால் உசந்த கமனீய கவித்வத்தைத் தருகிறது என்ற இடத்தில் அம்பாளால் தயையோடு அந்தப் பால் ஊட்டப்பட்டது - ''தயாவத்யா தத்தம்'' - என்றார். இங்கே சரணங்களையும் ''தயயா தேஹி!'' என்கிறார். அந்தப் பால் தேவாம்ருதத்திற்கும் மேலே என்றும் இன்னொரு ச்லோகத்தில் சொன்னாரல்லவா? அதே மாதிரி தயையோடு அவள் தருகிற சரணமும் தேவாம்ருதத்திற்கு மேற்பட்ட ஸஹஸ்ரார அம்ருதத்தைக் கொடுத்து ஞான ஸ்வரூபமாக்குவதே! சிரஸிலே ஆசார்யாள் சரணத்தை வைத்து தீக்ஷை தருவது அப்படி அங்கே அம்ருதத்தை ப்ரவஹிக்கச் செய்வதற்குத்தான்.*

*இங்கேயும் நம்முடைய ஞானாசார்யாள் அம்பாளை ஆசார்ய ரூபிணியாகத்தான் தம்முடைய சிரஸிலே சரணத்தை வைக்கும்படியாக வேண்டிக் கொள்கிறார்: ''சிரஸி தயயா தேஹி சரணௌ''. ஆனாலும், சிரஸில் வைக்கச் சொன்னாலும், குரு தீக்ஷையாக' என்று உடைத்துச் சொல்லவில்லை. தீக்ஷா ஸமாசாரங்கள் கோப்யமாக (மறைவாக) ரக்ஷிக்கப்பட்ட வேண்டியவையாதலால், வ்யங்க்யமாக (மறைமுகமாக)த் தெரிவிக்கிறார். கேநோபநிஷத்தில் பராசக்தி ஞனாம்பாளாக வந்து இந்த்ரனுக்கு உபதேசித்ததைக் குறிப்பாலுணர்த்திக் காட்டியே தாம் வேண்டுவதும் - நாமெல்லாரும் வேண்ட வேண்டியதும் - அம்பாளின் ஞானாம்ருத ப்ரஸாதந்தான் என்று தெரிவித்து விடுகிறார். என்ன குறிப்பு என்றால்: ''ச்ருதீநாம் மூர்த்தாநோ தததி தவ சரணௌ சேகரதயா'' என்பதிலேதான் ஸூசனை இருக்கிறது. அதற்கு அர்த்தம், 'ச்ருதி சிரஸான உபநிஷத்துக்கள் சிரோபூஷணமாக உன் சரணங்களை தரிக்கின்றன' என்பது. தசோபநிஷத்துக்களில் பரமசிவனோ, மஹாவிஷ்ணுவோ குருவாக வந்து உபதேசித்ததாக எங்கேயுமில்லை. குருவாகத்தான் என்று இல்லை; வேறே எந்த விதத்திலுமே அவர்களைப் பற்றிச் சொல்லவில்லை. மோக்ஷ பதம் ஸர்வ வ்யாபகமானதால் அதை 'விஷ்ணு' என்று கடோபநிஷத்திலும்* (I.3.9), *அந்த மோக்ஷ நிலையையே துரீயம் என்கிறபோதும் அது மங்களமானது என்கிற அர்த்தத்தில் 'சிவம்' என்று மாண்டூக்யத்திலும் (7;12) இரண்டு நிலைகளைத்தான் சொல்லியிருக்கிறதே தவிர ஆஸாமியாகச் சொல்லவில்லை! அம்பாளைத் தான் 'உமா', 'ஹைமவதீ' என்ற*

*பெயர்களில் கேநோப நிஷத்தில் சொல்லி, 'ஸ்த்ரீ' என்றும் குறிப்பிட்டு, அவள் மஹா காந்தியோடு விளங்குகிற 'பஹு¬சோபமானா' என்று வர்ணனையும் பண்ணி, அவள் இந்த்ரனுக்கு ஞானோப தேசம் தந்ததையும் சொல்லியிருக்கிறது* III.12; IV.1) *உபநிஷத் சூட்டிக்கொள்ளும் சிரோபூஷணம் என்று அம்பாள் சரணத்தை ஆசார்யாள் சொல்ல அதைத் தவிர வேறு ஹேது எதுவுமில்லை.*

*''என் சிரஸில் உன் சரணத்தை வையம்மா!'' என்று சொல்லாமல் ''என் சிரஸிலுங்கூட'' - ''மம அபி (மமாபி) சிரஸி'' - என்று சொல்வதில்தான் ஆசார்யாளுக்கே அலாதியான விநயம் இருக்கிறது. முன்னே அம்பாளுடைய கடாக்ஷத்தை வேண்டின போதும் ''அந்தக் கடாக்ஷத்தால் என்னையுங்கூட நீராட்டி வையம்மா! (ஸ்நபய க்ருபயா மாமபி)'' என்று சொன்னாற் போலவே இங்கேயும் ப்ரார்த்திக்கிறார். அறிவா, அநுபவமா, கார்ய சக்தியா, வாக்சக்தியா, ஸ்தானமா இப்படி எல்லாவற்றிலும் உச்சிக் கோடியாக இருந்த ஆசார்யாள் பணிவிலே தாழ்ந்து நிற்பதிலும் உச்சிக் கோடியாயிருக்கிறார்!*

*''வேத மாதாவின் சிரஸான உபநிஷத்திற்கும் சிரஸின் மேலிருக்கிற சிரோ பூஷணம் உன் சரணம்! பரமசிவனும் மஹாவிஷ்ணுவுங்கூட தங்கள் சிரஸ¬களை அதிலே கிடத்தி நமஸ்கரிக்கிறார்கள்! உபநிஷத்திற்கு சிரோ பூஷணமாயுள்ள அந்தச் சரணத்திலே பரமேச்வரனின் சிரோபூஷணமான கங்கை பாய்ந்து, அர்க்யம்-பாத்யம்-ஆசமநீயம் என்று ஷோடசோபசாரத்தில் வருகிறபடி சரணத்தில் வார்க்கிற பாத்ய தீர்த்தமாகிறது! மஹாவிஷ்ணுவின் சிரோபூஷணமான ரத்ன சூடாமணி அதில் டால் அடிப்பதே அதற்கு நலங்கு பூசியதாகிறது! இப்படி வேதமாதா என்ன, வேதநாயகர்களான ஈச்வரனும் பெருமாளும் என்ன, அப்படிப்பட்டவர்களுக்கு நீ ப்ரஸாதிக்கிற சரணத்தைக் கேட்க எனக்கு என்ன அர்ஹதை இருக்கிறது? எனக்கு அர்ஹதை இல்லாவிட்டாலும் உனக்கு தயை, தயை என்று ஒன்று இருக்கோ, இல்லியோ? அந்த தயையாலேயே எனக்குங்கூட ப்ரஸாதி, தாயே! மாத: ஏதௌ சரணௌ மமாபி சிரஸி தயயா தேஹி!'' என்று உருகி ப்ரார்த்திக்கிறார். கடாக்ஷத்தை ப்ரார்த்திக்கும் போது ''க்ருபயா'' என்றவர் இங்கே ''தயயா'' என்று அதே அருட்பாங்கைச் சொல்கிறார்.*

*பாத்ய தீர்த்தம் கங்கை என்கிறபோது ஈச்வரன் இவளுடைய சக்களத்தியான கங்கையையும் இவளுடைய சரணத்தில் விழப் பண்ணுகிறானென்று ஆகிறது! ''ஸரோஷா கங்காயாம்'' என்று அவளைப் பார்த்தபோது தானே அம்பாள் கண்ணில் ரௌத்ரம் கொப்புளித்தது? அந்த ரோஷம் அடங்க, இவள் காலில் அவளை விழப்பண்ணியாச்சு! மஹாவிஷ்ணுவுடைய சூடாமணியின் ப்ரகாசம் அந்தச் சரணத்திற்கு நலுங்கின் சோபையைத் தருகிறது என்று சொல்ல வந்தவர் 'சோபை' என்பதற்கு ''லக்ஷ்மி'' என்று போட்டிருக்கிறார். ''லாக்ஷா லக்ஷ்மமீ:'' என்று ச்லோகத்தில் வருவதற்கு (நலுங்கான) அரக்கின் சோபை என்று அர்த்தம். மஹாவிஷ்ணுவும் தம்முடைய பத்னியை அம்பாள் சரணத்தில் நமஸ்கரிக்கப் பண்ணுகிறார் என்று த்வனிக்கும்படி வார்த்தையைப் போட்டிருக்கிறார்! முன்னே ஒரு ச்லோகத்தில் பத்மாஸனியான லக்ஷ்மியின் சரணத்திலுள்ள அரக்கு பட்டதில் மேலும் சிவப்பான பத்மம் அம்பாள் ஹஸ்தத்தின் சிவப்புக்கு ஏதோ கொஞ்சமாவது ஸமமாயிற்கு என்றார். அம்பாள் ஹஸ்தத்தைச்*

*சொல்லும்போது லக்ஷ்மியின் சரணத்தை ஸம்பந்தப்படுத்தியது யாருக்காவது அபசாரமாகத் தோன்றியிருக்குமோ என்னவோ என்று, இங்கே இவளுடைய சரணத்திலேயே நலுங்கு அரக்கின் சோபையாக லக்ஷ்மி இருப்பதாகச் சொல்லி 'காம்பன்ஸேட்' பண்ணியிருக்கிறார். இந்த அரக்கு விஷயமாகவே ஸரஸ்வதியை ஸம்பந்தப்படுத்திச் சொல்லியிருப்பதை முன்னேயே சொன்னேன். அம்பாளுடைய சரணாம்ருதமான அரக்கு ஜலம் ஸரஸ்வதியின் தாம்பூல ரஸத்தைப் போலக் கவித்திறமையை அளிக்கிறதென்று (ச்லோ-98) ஒரு அடிப்படை அபிப்ராயத்தில் வேர் விட்டுக் கொண்டே ஆசார்யாளின் கல்பனா சக்தி எப்படிக் கிளை கிளையாகப் பிரிகிறது என்று ஆராய்ச்சி பண்ணிப் பார்த்தால் ஸ்வாரஸ்யமாயிருக்கும்!*

*பரமேச்வரனையே முழு முதல் தெய்வமாகச் சொல்கிறபோது அவனுடைய முடியை ப்ரஹ்மாவும் அடியை மஹாவிஷ்ணுவும் தேடியதாகச் சொல்கிறது. அங்கே அம்பாள் தேடவில்லை! இங்கே தேடியதாக ஸமாசாரமில்லாவிட்டாலும், அவளுடைய திருவடியில் மஹாவிஷ்ணுவுடன் அவரால் அடி தேடப்பட்ட அந்த ஈச்வரனுமே நமஸ்கரிப்பதாக இருக்கிறது! ''லாக்ஷா லக்ஷ்மீ:'' என்றதால் பத்னி ஸமேதராக மஹாவிஷ்ணு நமஸ்கரித்ததாக வைத்துக் கொள்ளலாம். தம்பதி இரண்டு பேரையும் சொன்னதாலேயே புத்ரரான ப்ரஹ்மாவும் அதிலே அடக்கந்தான் என்று 'எக்ஸ்டென்ட்' பண்ணி த்ரிமூர்த்திகளும் பராசக்தியின் சரணத்தில் பக்தியோடு சேர்ந்திருப்பதாக அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்! முதல் ஸெக்ஷனில் (ச்லோ-25) த்ரிமூர்த்திகளுமே அம்பாளுடைய பாத பீடத்தில் தங்கள் சிரஸுக்கு மேல் கூப்பின ஹஸ்தங்களான புஷ்பங்களால் அர்ச்சிக்கிறார்கள் என்று சொன்னைதைப் பார்த்தோம். இந்த ஸெக்ஷனிலும் பின்னாடி ஒரு இடத்தில் (ச்லோ-89) தேவ லோகத்துக் கல்ப தரு முதலானவற்றையும் விட அம்பாளின் சரணம் கொடை விசேஷத்தில் உசந்தது என்று வருகிறது. தேவ ஸ்த்ரீகளின் கைகளான தாமரைகள் கூம்பின 'ஷேப்'பில் அம்பாள் பாதத்தில் அஞ்ஜலி பந்தம் செய்கின்றன என்று அங்கே சொல்கிறார். அதோடு ஏன் அந்தக் தாமரைகள் கூம்பிற்று என்பதற்குக் காரணமும் சொல்லியிருக்கிறார். அம்பாளுடைய அருண சரணத்தில் வெள்ளை வெளேரென்றிருக்கிற நகவரிசையைப் பார்த்தால் சிவப்பான ஒரு முகத்தில் சிரிக்கிற பல் வரிசை போல இருக்கிறது. கல்பதருவைப் பார்த்தே சரணம் பண்ணும் பரிஹாஸச் சிரிப்பாக அதைச் சொல்கிறார். சொல்லி, அந்த வெள்ளை வெளேர் காந்தி நிலாவைப் போலிருப்பதால்தான் நிலாவிலே தாமரை கூம்பிவிடுமாதலால் தேவ ஸ்த்ரீகளின் கைத்தாமரைகள் கூம்பிக் கொண்டன என்கிறார்.*

*அந்தச் சரணங்களே வேதமாதா தன்னுடைய சிரஸிலே சூட்டிக்கொண்ட புஷ்பங்களாக இருக்கின்றன! ஸாதாரணமாகச் சொல்வது அடிமுடி தேடிய கதை மாதிரி, வேதமும் பரமாத்மாவின் சரணத்தைத் தேடுவதாகத்தான்! ஆனால் வேதமாதாவுக்கு அந்த சரணம் கிடைத்து விட்டதாகவே இங்கே ஆசார்யாள் பார்த்திருக்கிறார். இது எப்படி நடந்தது? ''அம்பாளேதான் பிடிபட்டிருக்கணும்; 'தயயா' பிடிபட்டிருக்கணும்'' என்று புரிந்து கொள்கிறார். அதன் மேலேதான், ''அந்த தயையை இன்னும் விஸ்தாரம் பண்ணி என் சிரஸுக்கும் உன் சரணம் கிடைக்கச் செய்யேன்!'' என்கிறார்; அந்த சரண ஸ்வரூபமாகவே இருந்து பகவத் பாதர் என்று பெயர் வாங்கினவர்!*

## மனக்கல்லில் மலரும் தாமரை

*புஷ்பமாகவே திருவடியைச் சொல்வது; தாமரைப் புஷ்பமாக, 'சரணாரவிந்தம்' என்று. ''அப்படிப்பட்ட பூம்பாதத்தை உன்னுடைய விவாஹத்தின்போது கெட்டிப் பாறாங்கல்லான அம்மி மேல் ஏற்றி வைக்க உன் பதிக்கு எப்படித்தான் முடிந்ததோ? கதம் வா - எப்படித்தான்; பாஹுப்யாம் - கைகளால்; உபயமந காலே 'உபயமனம் என்றால் விவாஹம். 'உபநயனம்' ப்ரஹ்மசர்யத்திற்கு ஆரம்பம். 'உபயமனம்' க்ருஹஸ்தாச்ரமத்திற்கு ஆரம்பம். உபயமந காலே புரபிதா 'புரபிதா என்றால் த்ரிபுர ஸம்ஹாரம் பண்ணின பரமேச்வரனால்; த்ருஷதி ந்யஸ்தம் - (அம்மிக்) கல்லின் மேல் வைக்கப்பட்டதோ?'' என்று ஒரு ச்லோகத்தில் (88) கேட்கிறார். இப்படிக் கேட்பவர் ''அவனுக்கு என்ன கடின சித்தம்? என்காமல் நேர்மாறாக, ''என்ன அருள் நெஞ்சு?'' என்கிறார். ''தயமானேன மநஸா'' என்று போட்டிருக்கிறார்.*

*ஏன் இப்படி சொன்னாரென்பதற்கு இரண்டு தினுஸாக அர்த்தம் பண்ணலாம். முழு முட்டாளை நையாண்டியா 'ப்ருஹஸ்பதி' என்கிற மாதிரி சொல்கிறதாக அர்த்தம். இன்னொன்று, விசேஷமானதாகத் தோன்றுகிறது. அதன்படி நையாண்டி இல்லை; யதார்த்தமாகவே சொல்கிறார் என்று ஆகும். அதெப்படி என்றால், 'சிவாநந்த லஹரி'யை இங்கே துணைக்குக் கூப்பிட்டுக் கொள்ள வேண்டும். இன்னும் அநேக விஷயங்களில்கூட நம்முடைய அம்மா-அப்பா பற்றி ஒரே ஆசார்யாள் பண்ணியுள்ள இந்த இரண்டு 'லஹரி'களையும்* comparative study, complementary study *என்று ஒப்பிட்டும், ஒன்று சேர்த்தும் பார்த்தால் அநேகப் புதையல்கள் அகப்படலாம். சரணத்தைப் பாறாங்கல் ஸம்பந்தப்படுத்தி 'சிவாநந்த லஹரி'யில் அழகான, உருக்கமான ஒரு அபிப்ராயம் தெரிவித்திருக்கிறார். (ச்லோ-80) கைலாஸத்தில் ஸ்வாமி ப்ரதோஷ தாண்டவம் செய்வதைப்பற்றி அவரிடமே கேட்கிறார். 'அப்பா! நீ டான்ஸ் பண்ணணுமென்றால் மழமழன்னு மேடை போட்ட தேவலோகத்து ஸ்டேஜ் இல்லையா? ஏன், நல்ல புஷ்ப விரிப்பாகவே போட்டுக் கொடுக்க பக்தாள் இல்லையா? அதையெல்லாம் விட்டுட்டு இந்தப் பாறாங்கல்லுலே ஏன் பூம் பாதத்தை வெச்சு டான்ஸ் பண்றே? நான் ஒருத்தன் பாறாங்கல் ஹ்ருதயத்தோடே பிறப்பேன்-னு தெரிஞ்சுண்டு, அப்போ 'அவன் ஹ்ருதயத்திலேயும் நாம டான்ஸ் பண்ணணும்'னு தானே அதுக்கு ட்ரெயினிங்கா மலை பூமியிலே ஆடிப்பார்க்கிறது?'' என்று அங்கே கேட்கிறார்.*

*இங்கே அந்தப் பரமேச்வரனின் விவாஹத்தை 'உபயமனம்' என்ற பேரில் சொல்லியிருக்கிறார். அதிகம் கேள்விப்படாத அந்தப் பேரை ஏன் போட்டாரென்றால், காரணத்தோடதான்! 'உபயமனம்' என்றால் நல் வழியில் அடக்கிக்கொண்டு வருவது. ஒரு பாலனை உபநயனத்தின்போது ஒரு குருவிடம் சேர்ப்பதும் அவனை அவர் நல்ல வழியிலே அடக்கிக்கொண்டு வருவதற்குத்தான். அதே போல ஒரு பெண்ணைப் பதியும் குருவுமான ஒருவன் சீர்படுத்தி அடக்கத்தோடு க்ருஹஸ்தாச்ரமம் நடத்த வழி பண்ணுவதுதான் உபயமனம் என்கிற விவாஹம்.*

*இப்போது லோகத்து ஸ்த்ரீகளுக்கு வழி காட்ட வேண்டுமென்பதற்காக ஸாக்ஷாத் பராசக்தி ஸாமான்யப் பெண்டு மாதிரி விவாஹத்தில் பரமேச்வரனிடம் உபயமனம்*

*பெறுகிறாள். அப்போது அவர் லோகத்து ஜனங்களிடம் உள்ள தயையால் - நையாண்டியாயில்லை; நிஜமாகவே ''தயமாநேந மநஸா'' - அவளும் தன் மாதிரியே தன்னோடுகூட மஹா கடினசித்தம் கொண்ட குழந்தைகளின் மனஸில் நாட்டியமாட வேண்டுமென்று நினைத்திருப்பார்! அதற்கு 'ட்ரெயினிங்'காகவே 'அம்மி மிதி' பண்ணியிருப்பார்!*

*அந்த அம்மாவின் சரண த்யானந்தான் இந்த நம்முடைய அம்மி மனஸைக் குழைக்கிறதற்கு வழி. அதைவிட ஒரு மதம், ஸித்தாந்தம் இல்லை. ஒன்றும் தெரியாத குழந்தையாக, அவள் சரணத்தைச் சித்தத்தில் - சித்தம் எழும்புகிற சிரஸில் - பாவனையாகவாது வைத்துக் கொள்கிற ஒன்றை மட்டும் தெரிந்துகொண்டு விட்டால் அதுவே ப்ரஹ்மானந்தம்வரை கொண்டு சேர்த்துவிடும். எருமைத் தலையிலே சரணத்தை வைத்து ஞான ஸ்வரூபமாக்கி ஸாயுஜ்யம் கொடுத்தவள் அவள். அதனால்தான் ஸப்தசதீ கல்பத்தில் அவளோடு மஹிஷா ஸுரனுக்கும் பூஜை பண்ணச் சொல்லியிருக்கிறது.*

*முக்யமாக நம்மைப் பிடுங்கி எடுக்கிற அஹங்காரம் நசிப்பதற்கு அந்த சரண த்யானந்தான் மருந்து, தலைக்கனம் நசிப்பதற்கு அந்தத் தலைக்கு மேலே குருவான அம்பாள் சரணந்தான் மருந்து, அதனால்தான், ''நாங்களாக்கும் ஸாதித்தோம்'' என்று அஹம்பாவப்பட்ட தேவர்கள் அப்புறம் செருக்கழிந்த பிறகு அம்பாள் ஞானானுக்ரஹம் பண்ணின உபநிஷத்தை ஆசார்யாள் ஞாபகப்படுத்தும்போது, அஹம்பாவம் அறவே போய் ''மமாபி'' போட்டுச் சொன்னது. அந்த சரணம் ஸாக்ஷாத்தாக நமக்குக் கிடைப்பது எந்த நாளாகவாவது இருந்து விட்டுப் போகட்டும். இப்போது அவளுடைய பூஜா விக்ரஹத்தின் சரணத்தில் போட்ட ஒரு புஷ்பத்தை எடுத்து சிரஸில் ஒற்றிக்கொண்டு வேண்டிக்கொண்டு குழந்தைகளாக இருப்போம்.*

## அழகுநடை அடியிணையில் ஆத்ம ஸமர்ப்பணம்

*சரணங்கள் நடப்பதற்காக ஏற்பட்டவை. 'அன்ன நடை' என்று காவ்ய நாயகிகளின் நடையழகைச் சொல்வது. ஆசார்யாளோ இதை மாற்றிச் சொல்லி ஒரு ச்லோகம் (91) பண்ணியிருக்கிறார். அன்னங்கள்தான் அம்பாளின் நடையழகைத் தாங்களும் கற்றுக் கொள்ள வேண்டுமென்று அவளோடேயே ஸஞ்சாரம் பண்ணிக்கொண்டிருந்தனவாம்! அவற்றிடம் கருணை கொண்ட அவளுடைய சரணங்கள் நடந்து காட்டுகிற 'டெமான்ஸ்ட்ரேஷ'னால் நடையழகை 'டீச்' பண்ணியதோடு நிற்காமல் வார்த்தையாலும் 'தியரி'யை 'டீச்' பண்ணினவாம்! எப்படியென்றால் சரணங்களில் மணிச் சிலம்பு அணிந்து கொண்டிருக்கிறாள். அவள் நடக்கும்போது அவை 'ஜல் ஜல்' என்று சப்திப்பதாக நமக்குத் தோன்றுகிறது. வாஸ்தவத்தில் அந்த 'ஜல் ஜல்' தான் அந்தச் சரணங்கள் 'தியரி' பாடம் சொல்லிக் கொடுக்கும் வார்த்தைகளாம். முன்னே (ச்லோ-60) சொன்னார். காதணிகளின் ஜண ஜண சப்தத்தால் அவள் ஸரஸ்வதியின் கானத்திற்குப் பாராட்டு வார்த்தை சொன்னாள் என்று. இங்கே அந்த ஸரஸ்வதியின் வாஹனமான ஹம்ஸத்திற்கு காலணியின் ஜல் ஜல் சப்தத்தால் நடையழகுப் பாடம்.*

*சிலம்புக்கே 'ஹம்ஸகம்' என்று பேர் உண்டு. மூகர் அதை வைத்து ச்லேஷை பண்ணியிருக்கிறார். எதனாலோ ஆசார்யாள் அப்படிப் பண்ணக் காணோம். மூகருக்கு*

*என்று ரிஸர்வ் பண்ணி வைத்து விட்டார் போலிருக்கிறது! 'ஹம்ஸ' என்பது ஸந்நியாஸிகளையும் குறிக்கும். 'பரம ஹம்ஸர்' என்ற சொல்கிறோமல்லவா? இதை வைத்தும் மூகரே ச்லேஷை பண்ணட்டும் என்று ஆசார்யாள் பெருந்தன்மையாய் விட்டுக் கொடுத்திருக்கிறார்! (பாதார-27)*

*அம்பாளுடைய கேசாதி பாத வர்ணனையில் கடைசியாக வரும் ச்லோகத்தில், அவளுடைய சரணத்தில் தம்முடைய பஞ்சேந்த்ரியங்களும் மனஸூம் அப்படியே முழுக வேண்டும் என்று ஆசார்யாள் ப்ரார்த்திக்கிறார். இதைப்பற்றி முன்னேயே சொன்னேன். வழக்கிலே அதிகமுள்ள பாடத்தில் இந்த ச்லோகம் அன்னநடை கற்றக் கொடுக்கிற ச்லோகத்திற்கு முந்தியதாக இருக்கிறது. ஆனால் இதைப் பிந்தியும் அதை முந்தியும் கொண்டு வருகிற பாட பேதமும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஸ்வரூப வர்ணனையை முடிக்கும்போது இப்படி ''தவ... சரணே நிமஜ்ஜன் மஜ்ஜீவ: கரண சரண: ஷட்சரணதாம்'': 'உன் திருவடித் தாமரையில் என் ஐம்புலனையும் மனஸையும் ஆறு கால்களாகக் கொண்ட உயிர் வண்டு அப்படியே புதைந்திருக்கட்டும்'' என்று சரணாகதி, ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுவதே பொருத்தமாகத் தோன்றுகிறது.*

இந்த வண்டு-தாமரை ஐடியாவை 'ஸூப்ரஹ்மண்ய புஜங்க'த்திலும் கொஞ்சம் வேறே தினுஸாக 'ஷட்பதீ' ஸ்தோத்ர'த்திலும் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்.

*சரணங்களைப் பற்றிய ச்லோகங்களில் இதைக் கடைசியாக வைத்துக்கொள்ளும் அபூர்வமான பாடத்தில், இப்போது ரொம்பவும் வழக்கத்தில் இருக்கிற பாடப்படி இந்த ச்லோகம் எங்கே வருகிறதோ அந்த இடத்தில் 'கதா காலே மாத:'' என்ற ச்லோகத்தைச் சொல்கிறார்கள். அதிலேதான் ஆசார்யாள் தம்மை வித்யார்த்தியாகச் சொல்லிக்கொண்டு தமக்கு வித்யா ஸித்தி ஏற்படுவதற்காக அம்பாளுடைய சரண தீர்த்தத்தைப் பானம் பண்ணும் நாள் என்றைக்கு வருமோ என்று கேட்பது. சரணத்தைப் பற்றி அநேக ச்லோகங்கள் வருவதற்கு நடுவிலேயே இதுவும் வருவது பொருத்தமாகவே தெரிகிறது. அதுவுந் தவிர, தற்போது பெருவாரி வழக்கிலுள்ள பாடத்தில் ஸரஸ்வதி, லக்ஷ்மி, அம்பாள் மூன்று பேரையும் பிரஸ்தாவித்து வரும் மூன்று ச்லோகங்கள் சேர்ந்தாற்போல் வராமல் அவற்றில் இரண்டு வந்து விட்டு இந்த 'கதா காலே'' break பண்ணுகிறது. அதற்கப்புறம் மறுபடி மூன்று பேரையும் சொல்கிற மூன்றாம் ச்லோகம் வருகிறது. நான் சொல்கிற இன்னொரு பாடத்தில் அந்த மூன்று ச்லோகங்களும் break இல்லாமல் தொடர்ச்சியாய் வருகின்றன.*

*பத்ததியை மாற்றி ஒன்றும் பண்ணிவிடும்படி நான் சொல்லவில்லை. எந்த க்ரமத்தில் பாராயணம் பண்ணினாலும் ஸரிதான்.*

## தாமரையும் ஒப்பாகாது!

*திருவடியைத் தாமரை என்றாலும் வாஸ்தவத்தில் அதற்கு ஒப்பேயில்லை. திருவடி திருவடிதான்! இன்னொன்றோடு சேர்த்து அதற்கு உசத்தி உண்டுபண்ணுவதற்கே இல்லை. தாமரையைவிட அம்பாள் திருவடி எத்தனை தினுஸில் உசந்தது என்று பிரித்துக் காட்டியும் ஒரு ச்லோகம் கொஞ்சம் முன்னாடி (ச்லோ-87) ஆசார்யாள் பண்ணியிருக்கிறார்.*

*என்னென்ன விதத்தில் உசத்தி? தாமரை பனியிலே கருகிப் போய்விடுவது: ''ஹிமாநீ ஹந்தவ்யம்''. அம்பாள் திருவடியோ? ''ஹிமகிரி நிவாஸைக சதுரௌ'': பனி மலையிலேயே வஸிக்கிற ஸாமர்த்யம் பெற்றது! பிறந்தகந்தான் ஹிமயமலை, புக்ககம் வேறே எங்கேயோ போனாள் என்றில்லாமல், இரண்டுமே ஹிமயமலைதான்! அதில் வாடாமல் வதங்காமல் ஸஞ்சரிப்பது அவள் திருவடி. அப்புறம் இரண்டாவதாக - தாமரை ராவேளையில கூம்பிப் போய்விடுகிறது: ''நிசாயாம் நித்ராணம்''. தாமரை கூம்புவது கண் மூடிக்கொண்டு நித்ரை பண்ணுவது மாதிரி இருப்பதால் 'நித்ராணம்' என்றார். அம்பாள் சரணம் ராப் பூராவுங்கூட எங்கே எந்த பக்தர்களுக்கு அநுக்ரஹ காலம் வந்தாலும் அங்கே ஓடுவது; ''நிசி சரம பாகே ச விசதௌ'': விடிய விடியவும் விழிப்போடு, மலர்ச்சியோடு இருப்பது. மூன்றாவதாக - தாமரை ''வரம் லக்ஷ்மீ பாத்ரம்'' அதாவது தன்னிலே லக்ஷ்மி வந்து இருப்பதற்கு ஆசைப்படுகிறது; தனக்குள்ளே லக்ஷ்மியை வைத்துக்கொள்வதே பெருமையென்று நினைக்கிறது. திருவடி என்ன பண்ணுகிறது. ''ச்ரியம் அதி-ஸ்ருஜந்தௌ ஸமயிநாம்'': ஸமயம் என்பதான அம்பாள் வழிபாட்டைப் பின்பற்றும் எல்லாருக்குமே, ஒவ்வொருவருக்குமே, அவளுடைய திருவடி லக்ஷ்மியை உண்டாக்கிக் கொடுத்து விடுகிறது! ஸகல ஸௌபாக்யங்களையும் கொடுக்கிறது என்று அர்த்தம். திருவடி திருவையே தருகிறது! தாமரை அவளை தனக்குள்ளே பிடித்து வைத்துக் கொண்டால், இது அவளை வாரிக்கொடுக்கிறது! ஆனபடியால், ''ஸரோஜம் த்வத்பாதௌ ஜநநி ஜயத: சித்ரம் இஹ கிம்'':? 'அம்மா! தாமரையை உன் திருவடி ஜயிக்கிறது! இதிலே ஆச்சர்யப்பட என்ன இருக்கிறது?'' உன் திருவடி திருவடிதான்!*

## செம்மையின் பெருமை

*எல்லா அவயவத்தையும் - ஸௌந்தர்ய ஸமுத்ரத்தின் அத்தனை அலையையும் - அருள் வாக்கிலே வர்ணித்தாயிற்று. அப்புறம் (ச்லோ-92) அந்தப் பூர்ண ஸ்வரூபம் எழுந்தருளி இருக்கும் ஆஸனத்தை வர்ணிக்கிறார். அந்த ச்லோகத்திலேயே அத்தனை அவயவங்களும் சேர்ந்து ஒளி வீசுகிற அம்பாளுடைய அருண காந்தியைப் பற்றியும் சொல்கிறார். ஸஹஸ்ரநாமத்தில் உத்யத்-பாநு ஸஹஸ்ராபா (ஆயிரம் உதய ஸூர்யர்களின் காந்தி படைத்தவள்) என்று முதலில் சொல்லி அப்புறம் கேசாதி பாத வர்ணனை என்றால் ஆசார்யாள், 'ஒரு வித்யாஸம் இருக்கட்டுமே!' என்று அவயவ வர்ணனையை முதலில் முடித்துவிட்டு அப்புறம் அவளுடைய தேஹ காந்திக்கு வந்திருக்கிறார்.*

*ஆஸனத்தைப் பற்றி முன்னேயே சொல்லி விட்டேன் - பஞ்சக்ருத்ய மூர்த்திகளில் நாலு பேரைக் கால்களாகவும், ஐந்தாமவரை மேற் பலகையாகவும் கொண்ட அதிசயமான ஆஸனம் என்று!*

*அதன் மேல் ராஜராஜேச்வரியாக வீற்றுக் கொண்டிருக்கும் அம்பாளுடைய அருணச் சாயையின் ப்ரபாவத்தைச் சொல்கிறார். அந்த ப்ரகாசம் வீசி வெள்ளை சிவனும் செக்கச் செவேலென்று காமேச்வரனாகிறான்; லோக ஸ்ருஷ்டியை உண்டுபண்ணும் தாய் தந்தையர்களாக இந்தக் காமேச்வர-காமேச்வரி தம்பதி இருக்க வேண்டுமாதலால் அவன் ச்ருங்கார நாயகனாக ஆகிறான்; ச்ருங்கார ரஸத்தின் நிறம் சிவப்பேயாகையால் அம்பாள்*

கண்ணுக்கு அவன் அந்த ரஸ விக்ரஹமாகவே தெரிகிறான் - எனறு கவித்வம், தத்வம், ‘லைட் தியரி’ எல்லாவற்றையும் பிசைந்து சொல்லி இருக்கிறார்.

அம்பாளுடைய சக்தி வீச்சிலே அந்தப் பரம யோகி, பரம ஞானி ச்ருங்காரமூர்த்தியாகிறான் என்றால் இதையே திருப்பி வைத்து மஹா காமாதுரனையும் அவள் யோகியாய், ஞானியாய் பண்ணக் கூடியவள் என்று புரிந்து கொள்ளணும்; நம் காமாதிகள் தீர அந்தக் காமாக்ஷியிடமே தஞ்சம் புகவேண்டும். ஸ்தோத்ரம் இவல்யூஷனைச் சொல்லும்போதே அதன் மறுபாதியான இன்வல்யூஷனில் நாம் மனஸை வைத்து வெளியில் வந்தது உள்ளே போய் அடங்குவதற்கும் அவளே சரண் என்று ப்ரார்த்திக்க வேண்டும். உதய ஸூர்யனின் சிவப்பு மாதிரியே தானே அஸ்தமன ஸூர்யனும் இருக்கிறது? அதனால் உதய ச்ருங்காரத்தைச் சொல்வதிலேயே நாம் அஸ்தமன ஸமாதி நிலையை ஞாபகப்படுத்தி கொள்ள வேண்டும்.

சிவப்பு நிறம் சக்தியை, கார்ய வீர்யத்தைக் காட்டுவது, வெளுப்பு, எல்லாம் அடங்கிப் போன சாந்தி. உடம்பிலே கூடப் புஷ்டி ஏறினால் சிவப்பாகிறது. புஷ்டி குறைந்தால் pale -ஆக வெளுக்கிறது. கார ஸாரமாக ஆர்க்யூ பண்ணி நாம் ஒருத்தரை ஜயித்தால், செம்மையாகக் கொடுத்ததாகச் சொல்லும் போது நாம் எப்படி சக்தியோடு தாக்கினோம் என்பதைத் தெரிவிக்கிறோம். வெளுத்துக் கட்டியதைச் சொல்லும்போதோ எதிராளியை எப்படி சக்தியிழந்து அடங்கப் பண்ணினோம் என்பதைத் தெரிவிக்கிறோம். அம்பாளோ வெள்ளை சிவனையே சிவப்பாக ஆக்கிக் கார்ய ப்ரபஞ்சத்தை அவனோடு சேர்ந்து நடத்துகிறாள்!

ச்ருங்காரச் சிவப்பு இருக்கட்டும். கருணையின் சிவப்பே நமக்கு வேண்டியது. இந்த ச்ருங்காரம் உண்டானதே இதனால் ஸ்ருஷ்டியாகிற லோகத்திடம் பிற்பாடு கருணை காட்டவேண்டும் என்பதற்காகத்தான். அத்விதீய ப்ரஹ்மத்திற்கு அன்பு காட்டணுமென்ற எண்ணமே முதலில் வந்தது. அன்பு காட்டணுமென்ற எண்ணமே முதலில் வந்து. அன்பு காட்ட ஆள் வேணுமே என்பதற்காகவே லோகத்தை ஸ்ருஷ்டி செய்ய நினைத்தது. தாய் தந்தையராக இருந்து அந்த ஸ்ருஷ்டியைப் பண்ணி விளையாடுவோம் என்றே ச்ருங்கார மூர்த்தியை உண்டாக்கிற்று. ஒரே அன்புதான் - சாந்த வெள்ளையிலிருந்து சிவப்பாக முதலில் பிரிவது அதுதான். சிவ-சக்திகளான ஸதி-பதி என்னும்போது அந்த அன்புக்கு ச்ருங்காரம் என்று பெயர்; ஸ்ருஷ்டியிடத்தில் காட்டும் போது அதுவே கருணை எனப்படுகிறது. நமக்கு வேண்டியது அந்தக் கருணைதான்.

மதுரமான மாம்பழத்திலிருந்து பரம கசப்பான பாகல் வரையில் நன்றாகப் பழுக்கிறபோது, கனிகிற போது அவள் சிவப்பாகி விடுகிறாள். நமக்கும் அவளுடைய கருணைச் செம்மை அப்படி மனஸைப் பழுக்க வைத்து கனிய வைத்து மனச் செம்மை தரவேண்டும்.

ச்ருங்காரச் சிவப்பிலிருந்து காருண்யச் சிவப்புக்கு நானே ஏதோ மேதாவித்தனத்தால் நீட்டி விட்டேன் என்று நினைத்துக் கொள்ளவேண்டாம்! அடுத்த ச்லோகத்திலேயே ஆசார்யாளே சொல்லியிருப்பதைத்தான் சொன்னேன். ரொம்ப அழகாகச் சொல்லணியோடு பாடியிருக்கிறார். ‘‘ஜயதி கருணா காசித் அருணா;

*ஜகத்-த்ராதும் சம்போர்-ஜயதி கருணா காசிதருணா''; ''ஜகத்'' - லோகத்தை; ''த்ராதும்'' - ரக்ஷிப்பதற்காகவே; ''சம்போ:'' - அசையாத சிவனின்; ''கருணா'' - கருணையானது; ''காசித்'' - வர்ணனாதீதமான; ''அருணா'' - அருணச் சிவப்பு அம்பாளாகி; ''ஜயதி'' - வெற்றியோடு விளங்குகிறது; லோகாநுக்ரஹத்திற்காகவே சாந்த வெள்ளை சிவம் கருணைச் சக்தியான அருணா என்ற அம்பாளாகி வெற்றியோடு திக்விஜயம் செய்து கொண்டிருக்கிறது.*

*இங்கே சிவ-சக்தி அத்வைதம் வந்துவிடுகிறது.*

## சந்திரனை வாஸனைப் பாண்டமாக

*ச்ருங்காரமாகச் சொன்னார். அப்படி தம்பதியில் பத்னியாயிருப்பவளுக்குக் குளிர்ச்சியாகப் பன்னீரில் கஸ்தூரி, பச்சைக் கர்ப்பூராதி வாஸனை த்ரவ்யங்கள் கிண்ணத்தில் போட்டு வைத்து உபசாரம் பண்ணுவது வழக்கம். அந்த மாதிரி அம்பாளுக்கு வைத்திருக்கும் பன்னீர்க் கிண்ணந்தான் தளதளவென்று சீத நிலா ரொம்பியுள்ள சந்திரன் என்று நூதனமாகக் கல்பனைகள் பண்ணி அடுத்து ச்லோகம் (94) செய்திருக்கிறார். 'சந்திரன் என்பது அம்பாளுக்கான பன்னீர்க் கிண்ணந்தான். சந்திரனில் களங்கம் என்று கறுப்புத் திட்டைச் சொல்கிறோமே, அதுவும் வாஸ்தவத்தில் அந்தப் பன்னீரில் போட்டிருக்கும் கஸ்தூரிதான். ஒவ்வொரு கலையாக தினமும் சந்திரனில் ப்ரகாசம் வளருகிறது என்று நாம் சொல்வது அதில் செதில் செதிலாகக் கர்ப்பூரம் சேர்ந்திருப்பதுதான். அம்பாள் தினந்தோறும் அவற்றை உபயோகிக்க உபயோகிக்கக் கிண்ணம் காலியாவதும், ப்ரம்மா அவற்றை* replenish *பண்ணுவதுமாக (குறைந்ததை இட்டு நிரப்புவதுமாக) நடக்கிறது' என்று விசித்ரமாகக் கல்பனை பண்ணியிருக்கிறார்.*

*எதற்காக இப்படியொரு கல்பனை என்றால், பார்வதி பரமேச்வரர்களுக்கு கலியாணம் பண்ணிப் பார்த்து ஸந்தோஷப்பட்டது முக்கியமாக ப்ரஹ்மாதான். அதனாலேயே திருக்கல்யாணத்தோடு வரும் உத்ஸவத்தை ப்ரஹ்மோத்ஸவம் என்பது. இங்கே தம்பதியாகச் சொல்லி முடிக்கும்போது அவரை எப்படியாவது கொண்டு வரணும் என்று ஆசார்யாளுக்கு! அதோடு நிர்குண ப்ரஹ்மம் இந்தப் பஞ்ச க்ருத்ய தம்பதியான நிலையிலே முதல் க்ருத்யமான ஸ்ருஷ்டியே விசேஷமாகத் தெரிகிறதென்றால், அந்த ஸ்ருஷ்டிக்கென்றே தனி அதிகாரியாக இருக்கிற ப்ரஹ்மாவுக்கும் ஸ்தோத்ரத்தில் சிறப்புச் செய்யணுந்தானே? அதோடு வர்ணனை ஆரம்பத்தில் சந்திரசேகரியாகத் தானே சொன்னார்? அவளே சந்த்ர மண்டல வாஸினியும் ஆச்சே! சந்த்ர ஸம்பந்தந்தானே அவளுக்கு ஜாஸ்தி? அப்படியிருக்க, முந்தின ச்லோகத்தில் அவளை 'அருணா' என்று ஸெளர்ய ஸாரதியின் பேரில் சொன்னதோடு விட்டுவிட்டால் ஸரியில்லை. சந்திரனுக்கென்றே ஒரு முழு ச்லோகம் பண்ணிக் கொடுக்கணும் என்றே இப்படி ஒரு கல்பனை செய்திருக்கிறார். ஸுமங்கலியை 'ஸுவாஸினி' என்பது. அதனால் அவளுடைய வாஸனைப் பாண்டமாகச் சந்த்ரனைச் சொல்லி ஏற்றம் கொடுத்து விட்டார். சந்த்ரன் அவளுக்கு ஒரு ஜிண்டான் மாத்திரைச் சிமிழ் என்றால் அவள் எவ்வளவு பெரியவளாயிருக்கணும் என்றும் யோஜிக்க வைக்கிறார்.*

## ஆசார்யாள் விடுக்கும் எச்சரிக்கை!

*ஆசார்யாளுக்கு ஜனங்களின் மனஸ் தப்பான வழியில் திரும்ப இடமே கொடுக்கக்கூடாது என்பதில் ஒரு தாயாருக்கு மேலே அக்கறை உண்டு. ஆதனால் ச்ருங்காரத்தைச் சொல்லி விட்டோமே, அதை ஜனங்கள் விகல்பமாக எடுத்துக் கொண்டு தப்பில் போய்விடப் போகிறார்களே என்று விசாரம் உண்டானாற்போலிருக்கிறது. இன்னொரு விசாரம்: ''ஸ்ரீ சக்ர உபாஸனை ரொம்ப ஜாக்ரதையாப் பண்ணணும்னு சாஸ்த்ரஜ்ஞாள்-ங்கிறவா பயமுறுத்தினாலும் அதிலே ப்ராண ஸ்தானத்திலே பஞ்ச ப்ரஹ்மாஸனையா இருக்கற அம்பாளே பதியோட ச்ருங்காரமா, நம்ம எல்லோர்கிட்டேயும் கருணையா இருக்கறதாத்தானே இவர் (ஆசார்யாள்) பாடியிருக்கார்? அதனாலே, பயந்துண்டு, இப்படி யிப்படி நியமம்னு ஜாக்ரதை பண்ணின்டுதான் யந்த்ராராதனை (ஸ்ரீ சக்ர உபாஸனை) செய்யணும்னு இல்லாம, ஈஸியா அம்மா-அப்பாவுக்கு நம்ம மனஸுப்படி முடிஞ்சதை, தெரிஞ்சதைப் பண்ணலாமே?'' என்று ஜனங்கள் ஆரம்பித்துவிடப்போகிறார்களே என்றும் ஆசார்யாள் கவலைப்பட்டிருப்பார் போலிருக்கிறது. நியமம் என்று விசேஷமாக இல்லாமல் அம்மா-அப்பா என்று ப்ரேமையின் பேரிலும் உபாஸிக்கலாந்தான். ஆனால் அப்போது யந்த்ரம் கூடாது; மந்த்ரங்களையும் ஆவாஹனாதிகளுக்கு இழுக்கக்கூடாது. ஏதோ ஒரு படத்தை வைத்து நாலு பூ, நாமாவைச் சொல்லிப் போட்டு, பஜனை-கீர்த்தனை போடுவது என்று வழிபட்டுவிடலாம். 'வழிபட்டு விடலாம்' என்றது, உண்மையான ப்ரேமை பொங்கிக் கொண்டு வராமல், ஆனாலும் விதிப்படி பூஜை பண்ண இஷ்டமில்லாததால், ஏதோ நமக்கு அப்படியே பகவத் ப்ரேமை பொங்கிக் கொண்டிருக்கிற மாதிரி வைத்துக் கொண்டு, ஒரு மேம்போக்கான ப்ரேமையிலேயே உபாஸிக்கிறபோது, ஏதோ கொஞ்சம் வழிபட்டுவிட்டு, ஸாரம் ஒன்றும் உள்ளே போகாமல் விட்டுவிடுவதாகவே தான் இருக்கிறது! ஒரு விதிமுறைக்கு, நியமத்துக்குக் கட்டுப்பட்டு பூஜை பண்ணும் மனப்பான்மை இல்லாதபோது ஸ்ரீ யந்த்ர பூஜை கூடாது. ந ச்ரேயோ நியமம் விநா (நியமமில்லாவிடில் ச்ரேயஸ் இல்லை) என்பது மாத்திரமில்லாமல், நியமம் தப்பினால் விபரீதமே ஆகிற யந்த்ராராதனைக்கு யார் வேணாலும் போய்விடக் கூடாதே! அசட்டுத்தனமாக ஜனங்கள் அப்படிப் போய்க் கஷ்டப்படப் போகிறதுகளே, என்று ஆசார்யாள் நினைத்திருக்கிறார். ஸ்தோத்ரத்தை முடிக்கிற கட்டத்திற்கு வந்துவிட்டார். அதனால் முறைப்படி உபாஸனை பண்ணினால் என்ன பலன் என்று சொல்வதற்கு முன்னாடி முறைதவறிப் பண்ணி விபரீதத்தை ஸம்பாதித்துக் கொள்ளாமல் 'வார்ன்' பண்ண நினைத்திருக்கிறார்.*

*இரண்டு தினுஸில் முறை தவறலாம்: முதல் ஸெக்ஷனில் முக்யத்வம் கொடுத்துச் சொன்ன யந்த்ராராதனையில் நியம நிஷ்டைக்கு லாயக்கில்லாதவர் போய்க் கஷ்டத்தில் மாட்டிக்கொள்வது ஒன்று; இரண்டாம் ஸெக்ஷனில் சொன்ன திவ்ய தாம்பத்ய உறவை ஏதோ நாவல், ஸினிமாக் கேளிக்கை மாதிரி எடுத்துக் கொண்டு, குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொண்ட கதையாகப் பண்ணிக் கொள்வது ஒன்று. ஆசார்யாள் காலத்து மநுஷ்யாள் எது ஸரியான அப்ரோச்சோ அப்படித்தான் போயிருப்பார்கள். என்றாலுங்கூட, தப்பு அப்ரோச்சுக்கு இடம் கொடுக்காமல் எச்சரித்து வைத்துவிடுவது*

*நல்லது என்று ரொம்பவும் பொறுப்போடு நினைத்திருக்கிறார். அப்போதைவிட வ்யவஸ்தைகள் கெட்டுப்போய் எதையும் மனம் போகிறபடி அர்த்தம் பண்ணிக்கொள்ளும் துர்தசை இப்போது ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இப்பவுங்கூட இந்த மாதிரி ஒரு ஸ்தோத்ர பாராயணம் என்று போகிறவர்களில் பெரும்பாலோர் இந்த விஷயம் ஒன்றிலாவது சுத்தமான கண்ணோடுதான் பார்த்துக்கொண்டு போகிறார்கள். ஆனாலும் 'பெரும்பாலோர்' என்றுதான் என்னால் சொல்ல முடிகிறதே தவிர 'எல்லாரும்' என்று சொல்ல யோஜனையாய்த்தான் இருக்கிறது. அது தவிர, ஜனஸமூஹத்தில் இப்படி 'பாராயணம்' என்று பக்தியாகப் படிப்பவர்கள் மட்டுமில்லாமல், க்யூரியாஸிடிக்காகப் படிப்பவர்கள், ஆராய்ச்சி என்று படிக்கிறவர்கள், இலக்கியம் என்றே படிக்கிறவர்கள், தப்புக் கண்டுபிடிப்பதற்கென்றே படிப்பவர்கள் ஆகியவர் இப்போது சேர்ந்திருக்கிறார்கள். ஆகையால் உசந்த மனக் கட்டுபாட்டுடன் பாராயணம் பண்ணுவதற்குத்தான் இந்த ஸ்தோத்ரம் ஏற்பட்டது; திவ்ய தாம்பத்யத்தை ரஸிப்பதானாலும் ஸரி, யந்த்ராராதனை ஆரம்பிப்பதானாலும் ஸரி நல்ல இந்த்ரிய நிக்ரஹத்துடன் தான் செய்யணும் என்று தெரிவிக்க வேண்டியது அவச்யமாகிறது. இதை அன்றைக்கே ஸ்தோத்ரம் எழுதி வைத்தபோது ஆசார்யாள் பண்ணிவிட்டார்.*

*கீழ்த்தர உணர்ச்சிகளைத் தூண்டிவிடுகிறாமோ என்று கவலையேபடாமல். அப்படித் தூண்டிவிட வேண்டுமென்றே இன்டென்ஷனோடு எழுதுகிறவர்கள் இக்காலத்தில் ஜாஸ்தியாகி வருவதாகத் தெரிகிறது. இதை ஜஸ்டிஃபையும் செய்கிறார்கள்; இப்படித்தான் எழுதணும் என்கிறார்கள் என்றும் கேள்விப்படுகிறேன். ஒருத்தர் ஜனங்கள் மனஸ் தப்பிப் போகப் பண்ணுவதற்குக் காரணமாயிருந்து விட்டால் தப்புப் பண்ணும் ஜனங்களுக்கும் பாபம் ஏற்படுகிறதென்றால், காரணமாகத் தூண்டிக் கொடுத்த அவருக்கு மஹா பாபமே காத்துக் கொண்டிருக்கிறதென்று புரிந்துகொள்ளாததால் இப்படிப் பண்ணி வருகிறார்கள். ஆசார்யாளோ ஒரு க்ரந்தகர்த்தாவுக்கு, நூலாசிரியருக்கு இந்த விஷயத்திலிருக்கும் பொறுப்பை உணர்ந்து, படிக்கிறவர்களுக்கு இருக்க வேண்டிய மனப்பான்மையைப் பற்றிச் சொல்லிக் முடிக்கிறார்.*

*'மனக்கட்டுப்பாடு', 'இந்த்ரிய நிக்ரஹம்' என்று சொன்னதைப் பூர்ணமாக ஸாதித்துக் கொள்வது ரொம்பவும் கஷ்டம். அப்படிப் பண்ணினவர்கள்தான் படிக்கலாம், யந்த்ர உபாஸனை பண்ணலாம் என்றால் லக்ஷத்தில் ஒருத்தர்கூடத் தேற மாட்டார்கள்! ஆகையால் முடிந்த அளவுக்காவது இந்தக் கட்டுப்பாட்டுக்கு முயற்சி பண்ணுகிறவர்களும், அல்லது அது ஏற்பட வேண்டும் என்ற தாபமாவது இருக்கிறவர்களும்தான் இவற்றில் பிரவேசிக்கலாமென்று வைத்துக் கொள்ளலாம். படிக்கிற மட்டுமாவது மனக்கட்டுப்பாடு, பூஜை பண்ணுகிற மட்டுமாவது நியம நிஷ்டை அவசியம்,*

*அழகாக, ஆனந்தமாக அம்பாளை வர்ணித்துக் கொண்டே போய்க் கடைசியில் முடிக்கிற ஸமயத்தில் 'வார்னிங்' என்று போக்கை மாற்றினால், நல்ல ராஜபாட்டையில் வண்டியை ஓட்டிக் கொண்டு போய் இறக்கி விடுகிற இடத்தில் ஸடன் ப்ரேக் போட்டு*

*மண்டையில் இடித்துக் கொள்ளப் பண்ணுகிற மாதிரி இருக்கப் போகிறதேயென்று, ரொம்ப ஸொகுஸாக வண்டியை நிறுத்துகிறாற்போல, வார்னிங்கை நைஸ் பண்ணி நாஸூக்காகவே தெரிவித்திருக்கிறார். ''நீங்கள் மனக் கட்டுப்பாட்டோடு உபாஸனை பண்ணுங்கள்'' என்று நம்மைப் பார்ததுக்கூடச் சொல்லாமல் அம்பாளையே பார்த்து, மனக்கட்டுப்பாடில்லாமல் அவளிடம் வருகிறவர்கள் எந்த நிலையில் இருக்கிறார்கள் என்பதை மாத்திரம் சொல்லியே 'குறிப்பாலுணர்த்துவது' என்கிறார்களே, அப்படிப் பண்ணி (95-வது) ச்லோகமாகக் கொடுத்திருக்கிறார்.*

*முப்புரங்களை அழித்தவர் ஸ்வாமி, அவருக்கு அந்தஃபுரத்தில் ஸந்தோஷம் தருபவள் அம்பாள். இப்படி இரண்டு 'புர'ங்களைச் சேர்த்து த்ரிபுரஸுந்தரியான அம்பாளைக் கூப்பிட்டு ஆரம்பிக்கிறார்: ''புராராதே: அந்தஃபுரமஸி''. அந்தஃபுர நாயகியாக உன்னை நினைப்பதை ரக்த-மாம்ஸ ச்ருங்காரமாக்கி விட்டால் மஹா தப்பு, உன்னை இந்த்ரிய நிக்ரஹத்தோடுதான் ஸ்மரிக்க வேண்டும் - ''த்வத் சரணயோ:ஸபர்யா மர்யாதா தரல-கரணானாம் அஸுலபா'': 'உன்னுடைய பாத பூஜையின் ஒழுங்கான க்ரமம் அலை பாயும் இந்த்ரியமுடையவர்களுக்கு எளிதானதில்லை!'*

*-இப்படிச் சொல்லி, 'அதனால்தான் இந்த்ரிய நிக்ரஹம் போதாத இந்த்ராதி தேவர்களும் அந்த அந்தஃபுரத்திற்கு ரொம்ப ரொம்ப, எத்தனையோ கோடி யோஜனை (யோஜனை என்றால் எட்டு, ஒன்பது மைல்; அப்படி எத்தனையோ கோடி யோஜனை) தள்ளியே நிற்கிறார்கள்' என்கிறார்.*

*நவாவரண (ஸ்ரீ)சக்ரத்தில் ஒன்பதாவதாக உள்ளே நடுமத்தியில் இருக்கிற ஸர்வானந்த மய சக்ரத்தில் அம்பாள் பதியோடு ஆனந்தமாயிருந்து கொண்டிருக்கிறாளென்றால் அதிலிருந்து ஒவ்வொரு ஆவரணமாகக் கோடி கோடி யோஜனை தள்ளி முதல் ஆவரணம் இருக்கிறது. அதுதான் அம்பாள் ராஜதானியின் வெளிக்கோடி காம்பவுண்டு. ஒரு காம்பவுன்டு இல்லை; மூன்று சதுரமான காம்பவுன்டுகள். அந்த மூன்றிலும் ரொம்பத் தள்ளி இருக்கும் முதல் காம்பவுன்டில் அணிமாதி ஸித்திகள் தேவதா ரூபத்தில் இருக்கிறார்கள். ஒன்பது ஆவரணங்களிலும் அநேக தேவதைகள் இருக்கிறார்கள். ஒவ்வொரு தேவதையும் மஹாராஜ்ஞியான (மஹாராணியான) அம்பாளுக்கு அடங்கிய அதிகாரியாக உபாஸகர்களுக்கு ஒவ்வொரு இனத்தில் அநுக்ரஹம் பண்ணும். ஸாக்ஷாத் அந்த அம்பாள் தரும் மோக்ஷாநுக்ரஹந்தான் வேண்டுமென்று இருப்பவர்களும் ஸ்ருஷ்டி லீலையில் அம்பாள் எப்படியெல்லாம் நவநவமாக, எல்லையே இல்லாமல் விஷயங்களை விரித்து வைத்திருக்கிறாள் என்று நாடக ரஸத்தை அவளுடைய நினைப்போடு சேர்த்துச் சேர்த்து ரஸிப்பதற்காக நவாவரண பூஜை என்று அந்தப் பெரிய தேவதா பரிவாரத்தில் ஒருத்தரும் விட்டுப் போகாமல் பூஜை பண்ணுவார்கள். பக்தி ரஸத்தோடு சேர்ந்த நாடக ரஸம்! ஆனாலும் பக்தி, நாடகம் என்பதால் 'ஈஸி-கோயிங்'காகப் பண்ணலாம் என்று விடாமல், அதிலேயும் கறாராக இப்படியிப்படி மந்த்ரம், இன்னின்ன உபசாரம் என்ற தர்ம லீலை, சட்ட லீலை எல்லாமும்! எல்லாவற்றையும் அந்த உபாஸகர்கள் முறை தப்பாமல் அநுஸரிப்பார்கள்.*

*பிரெஸிடென்டுக்குப் பார்ட்டி வைத்தால் அவரோடு நிற்காமல் மந்த்ரிகள்,*

எம்.பிக்கள், ஆபீஸர்கள், அவருடைய P.A., கார் ட்ரைவர், வாசல் காக்கிற தர்வான் வரைக்கும் எல்லாரையும் இன்வைட் பண்ணுவது உண்டோல்லியோ? இந்தப் பரிவாரங்களாலும் நமக்கு ஒவ்வொரு நல்லது பண்ணமுடியும். அதற்கான அதாரிடி அவர்களுக்கு அந்த பிரெஸிடென்டே கொடுத்திருக்கிறார். ஆனால் அவரையே தெரிந்தவர்களுக்கு இவர்களிடம் போய் நிற்கணும், இவர்களை உபசாரம் பண்ணணும் என்று இல்லை. அப்படியிருந்தும் பார்ட்டி என்றால், அவர் வைத்த ஸர்க்கார், அவர் செய்த ஏற்பாடு என்ற மரியாதைக்காக எல்லாரையும் கூப்பிட்டு உபசரிப்பது. அப்படி அவளே கதி என்றிருப்பவர்களும் சுற்று தேவதை ஒன்று விடாமல் நவாவரண க்ரமத்தில் பூஜை பண்ணுவது. ப்ரெஸிடென்ட் வரை போகாமல் ஒரு மந்த்ரியிடம் போய் ஒரு லைஸென்ஸ், ஒரு எம்.பி.யிடம் போய் ஒரு அட்மிஷன் என்றும் நிற்பவர்கள் இருக்கிறார்கள். தங்களை ஹிம்ஸிக்கிற ஒரு போக்கிரியை மிரட்டி வைப்பதற்காக அவருடைய தர்வானிடங்கூடப் போய் உதவி கேட்கலாம். இவர்களெல்லாம் லிமிடெட் அதாரிடி உள்ளவர்கள்தான். ப்ரெஸிடென்ட்தான் அத்தனை அதாரிடியும் உள்ளவர் முழு பவரும் அவரிடந்தான்... அமெரிக்க ப்ரெஸிடென்டைச் சொல்கிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள்! அவரிடம் ஆரம்பித்து மந்திரி, எம்.பி., ஆபீஸர் என்று பவர் குறைத்து கொண்டே வந்து தர்வானிடம் ரொம்பக் குறைவாயிருக்கும். வெளி ஜனங்களிலும் அவரவர் அந்தஸ்தைப் பொறுத்தே இவர்களில் ஏதோ ஒரு ஸர்க்கிளிடம் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முடியும். தர்வான் ஸர்க்கிளுக்கு மேலே தொடர்பு வைத்துக் கொள்ள முடியாதவர்கள் என்றால் ஸமூஹத்தில் ரொம்பக் கீழ் ஸ்திதியில் இருப்பவர்கள் என்று அர்த்தம்.

இப்படி நவாவரணத்தின் வெளிக்கோடியில் பொம்மனாட்டி தர்வான்களாக - காவல்காரிகளாக - அணிமாதி ஸித்தி தேவதைகள் இருக்கிறார்கள். ஸாவரின் பவரே பொம்மானாட்டிதானே? அதனால் பரிவாரத்திலும் ஒரே ஸ்திரீ மயம்! அஷ்டமா ஸித்தி, ஸித்தர்கள், சித்து விளையாட்டு என்றெல்லாம் கேள்விப்படுகிறோமல்லவா? அப்படிப்பட்ட, இயற்கைக்கு வித்யாஸமான, ஆச்சர்யமான சக்திகள் எட்டு, அணிமா என்பது அதில் முதல், அதைப் பெற்றால் ஒருவர் அணுமாத்ரமாகச் சுருங்கிவிடலாம். ஒரே பெரிசாகப் பெருக்க 'மஹிமா' என்பதில் ஸித்தி பெறவேண்டும். இப்படி எட்டு. இவற்றோடு இன்னம் இரண்டு கூட்டி அந்த ஸித்திகளுக்கான பத்து தேவதைகளும் நவாவரண வெளியோரக் காம்பவுன்டில் இருப்பதாகச் சொல்லியிருக்கிறது.

இவர்களிடம் யாசித்துக்கொண்டு வந்து நிற்பவர்கள், இவர்களைத் தாண்டி அடுத்த அங்கணத்துக்குப் போக அந்தஸ்துப் பெறாதவர்கள், யார் என்று சொல்கிறார்; ''சதமக முகா:'' என்கிறார்.. 'நூறு யாகம் பண்ணிய இந்திரன் முதலானோர்' என்று அர்த்தம்! ('சத' - நூறு; 'மக' - யாகம்.)

இந்த்ரன் அம்பாளிடமே ஞானோபதேசம் பெற்றுக் கொண்டு ஞானியானவன், முருகனோடும் மஹாவிஷ்ணுவோடும் அவனும் அம்பாளிடம் தாம்பூல உச்சிஷ்டத்திற்காகப் போனான் என்றெல்லாம் சொன்னவர், இங்கே ஏன் இப்படி அவன் காவல்காரிகளிடம் பல்லைக் காட்டுகிறான். அவனுக்கு வெளிக் காம்பவுன்டைத் தாண்டி வர அந்தஸ்து இல்லை என்கிறார்.

*அவர் ஒன்றும் தப்பாகச் சொல்லவில்லை. ஆதி ஸ்ருஷ்டியிலிருந்து இன்று வரை ஒரே இந்த்ரன் இருக்கவில்லை. பல இந்த்ரர்கள் இருந்திருக்கிறார்கள். நமக்கு ஆயிரம் சதுர் யுகமாகவும், ப்ரஹ்மாவுக்கு ஒரு பகலாகவும் உள்ள கல்ப காலம் என்பதில் பதிநாலு மநுக்கள் தோன்றி பூலோகத்தில் ஒவ்வொரு ராஜவம்சத்தை ஆரம்பித்து வைப்பார்கள். ஒரு மநுவின் ஜீவித காலத்திற்கு மன்வந்தரம் என்று பெயர். அப்படிப் புதுப்புது மநுக்கள் வரும்போது தேவலோகத்திலேயும் புதுப்புது ஆஸாமிகள் இந்த்ர பதவிக்கு வருவார்கள். நூறு அச்வமேதம் பண்ணிய ஒருவருக்கே இந்த்ரனாவதற்கு யோக்யதை உண்டு. இப்படி யோக்யதை ஸம்பாதித்த பல பேர் ஸ்ருஷ்டியிலிருந்து இன்று வரையிலான அநேக மன்வந்தரங்களில் இந்த்ரர்களாக இருந்திருக்கிறார்கள். அவர்களில் யாரோ ஒருத்தன்தான் அம்பாளிடம் உபசேதம் பெற்றது; தாம்பூல உச்சிஷ்டத்திற்காகப் போனது. அவன் ஒரு விதி விலக்கான இந்த்ரன் என்று வைத்துக் கொள்ளலாம். பொதுவாக இந்த்ரர்கள் நவாவரணத்தில் வாசல் காவலாளிகளிடம் போய் நிற்கிற அளவுக்குத்தான் இருப்பார்கள். ஏனென்றால், அம்பாள் ''தரல கரணானாம் அஸுலபா'' என்றாரே, அதாவது 'மனஸு கட்டுப்பாடில்லாமல் அலை பாய்கிறவர்களுக்கு அகப்படக் கூடியவள் அல்ல' என்று சொன்னாரே, அதனால்தான்! போகபூமியான தேவலோகத்தில் நித்ய யௌவனத்தோடு இருக்கும் இந்த்ரனும் மற்ற தேவர்களும் இந்த்ரிய ஸௌக்யங்களிலேயே மனஸ் இழுபடுபவர்களாகத்தான் இருப்பது வழக்கம். இவர்கள் நவாவரணக் கோட்டைச் சுவர்களுக்கு வெளிவாசலில்தான் நிற்க வேண்டும்!*

*'இந்த்ர ஜாலம்' என்று ஒரு வார்த்தை சொல்கிறோம். அத்புத அத்புதமாக சித்துக்கள் பண்ணுபவர்களுக்குள் அவன் மஹா கெட்டிக்காரன் என்பதால்தான் அந்த வார்த்தை வந்திருக்கிறது. ஆனால் அவன் மஹா அசடு! தேவராஜாவாக இருந்துங்கூட அம்பாளிடம் போகிற அர்ஹதை - இந்த்ரிய நிக்ரஹம் என்ற யோக்யதை - ஸம்பாதித்துக் கொள்ளாமல் அவளுடைய ராஜதானியின் வெளியெல்லையிலேதான் நிற்கிற அசடு!*

*ப்ரெஸிடென்ட் எல்லார் மாதிரியும் ட்ரெஸ்போட்டுக் கொண்டு அவர் பாட்டுக்க அமரிக்கையாயிருப்பார். தர்வான்தான் அமர்க்களமாக ட்ரெஸ், பாட்ஜ், தொப்பி, டவாலி போட்டுக்கொண்டு மிடுக்காக மார்ச் பண்ணுவான். இங்கே காவல்காரிகளான ஸித்திகள் அப்படித்தான் வெளிப்பார்வைக்கு அதிசயமாக சித்து வேலைகள் பண்ணுபவர்கள். ஆனால் அதில் ஆத்மார்த்த ப்ரயோஜனம் எள்ளத்தனைகூட இருக்காது. அதிசயத்தில் இருக்கிற ப்ரமிப்பினால் இதிலேயே முழுகிப் போய் ஆத்மா பக்கமே திரும்பவிடாமல்கூடத் தடுத்துவிடும்! அவர்களை உபாஸிப்பவர்களுக்கும் அந்த சித்துகளைச் சொல்லிக் கொடுப்பார்கள். இந்தக் குட்டி தேவதைகளை யார் வேண்டுமானாலும் உபாஸிக்கவும் முடியும். வெளிவிஷயமாக உள்ள மந்த்ரம், தந்த்ரம், பலி என்று என்ன உண்டோ அதை யார், எவர் பண்ணினாலும் அதுவே போதும். உள்விஷயமான இந்த்ரிய நிக்ரஹம், சித்த சுத்தி என்பது தேவையில்லை. அதனால் இந்த்ராதி தேவர்கள் இவர்களை உபாஸித்து இவர்கள் பதிலுக்குக் கொடுக்கிற ஸித்திகளைப் பெற்றுக் கொள்கிறார்கள். ''ஸித்திம் அதுலாம்'' என்று ஆசார்யாள் சொல்கிறார்: ''இணையில்லத ஸித்திகள் என்று அர்த்தம். பெரிசாகப் புகழ்கிற மாதிரிச் சொல்கிறார்! ஆனால் இந்த அதுல ஸித்தியுங்கூட அம்பாள் ஸந்நிதியைச் சேர*

*லவவேசமும் உபயோகமாகாது என்று காட்ட, ''தவ த்வாரோபாந்த ஸ்திதிபி: அணிமாத்யாதிபி: நீதா:'' - 'போயும் போயும் உன் வெளிவாசல் காவலாளிகளாயுள்ள அணிமாதிகளினாலேயே இந்த ப்ரமாத 'அதுல ஸித்தி'யை (பரிஹாஸமாகச் சொல்கிறார்!) அடைவிக்கப்படுகிறார்கள்' என்கிறார்.*

*ஆசார்யளுடைய நைஸ¬ம், நாஸ¬க்கும் போகாமலே இங்கே மூன்றாவதாக இன்னொரு வார்னிங்கும் மறைமுகமாக வந்துவிடுகிறது! ஸித்திகளில் போய் மாட்டிக்கப்படாது என்பதுதான் அது. அம்பாளுடைய ஸமூஹத்திற்கு எட்டாத தூரத்திலுள்ள த்வார பாலகிகளே கொடுக்கிறவைதான் அணிமாதி ஸித்தி என்பதிலேயே அவை அவளை அடையப் பண்ணுவதற்கும் எவ்வளவு தூரத்திலிருக்கின்றன என்று குறிப்பாலுணர்த்தி விடுகிறார்! 'போயும் போயும் ஒரு வீட்டு வேலைக்காரி போடுகிற பிச்சையிலா ஆசை வைப்பது?' என்று ஒதுக்கும் படி நயமாகத் தூண்டிக் கொடுக்கிறார்.*

*ஸித்தர்கள் என்று மஹாபுருஷர்களாகப் பல பேர் இருந்திருக்கிறார்கள். இன்றைக்கும் அநேக போலிகளுக்கு நடுப்புற அப்படி இரண்டொருத்தர் இல்லாமல் போகவில்லை. ஆனால் அவர்கள் இந்த்ரிய நிக்ரஹம் பண்ணினவர்கள். ஸ்வார்த்தமாக (ஸ்வய ஆதாயத்திற்காக) சித்து பண்ணுபவர்களுமில்லை. கஷ்டப்படுகிற ஜனங்களுக்கு அத்புத சக்திகளாலும் ஒவ்வொரு நல்லது பண்ணமுடிகிறது என்ற கருணையாலேயே ஸித்திகளைக் கையாளுவார்கள். அதோடுகூட ஈச்வர சக்தி எப்பேர்பட்டதென்று தெரிவிப்பதற்காக அத்புதமாகச் சிலது பண்ணுவார்கள். எல்லாம் நம் புத்திக்குள் வந்துவிடாது; இதற்குப் புரிபடாமல், ஸயன்ஸ¬க்கு அகப்படாமல் அநேக ஸமாசாரங்கள் உண்டு என்று தெரியப்பண்ணவும் ஸித்திகளைக் காட்டுவார்கள். அவர்கள் ஸமாசாரம் மனஸடங்காத பொதுஜனங்களுக்கு லைஸன்ஸ் ஆகாது.*

*அந்தஃபுர தம்பதியாக சிவ-சக்திகளை எப்படித் தத்வார்த்தத்தில் தெரிந்த கொள்ளணுமோ அப்படி மனக்கட்டுப்பாடில்லாதவர்களால் தெரிந்து கொள்ளமுடியாது. காவ்ய ரீதியிலே அப்படி ஸ்தோத்ரத்தில் வர்ணித்திருப்பதைப் படிக்கும்போதுகூட நமக்கு இந்த ஞாபகம் போகப்படாது. மனஸ¬ கட்டுப்படாத இந்த்ராதி தேவாள் நவாவரண சக்ரரூபமான அம்பாளின் ராஜதானியிலே முதல் ஆவரணத்திற்கும் வெளியிலேதான் நிற்கிறார்கள் என்பதால் அந்தக் கட்டுப்பாடு வேண்டுமென்று நிஜமாகவே ஆசைப்படுபவர்கள்தான் சக்ர பூஜை பண்ணவேண்டும். அந்தக் கட்டுப்பாட்டில் ஆசை வந்தால், பூஜைக்கு இப்படி நியமம், இன்ன விதி என்று இருக்கிற கட்டுப்பாட்டோடு அந்தக் கட்டுப்பாட்டுக்காகப் பூஜை பண்ணினால்தான் அது யுக்தமான ஸ்ரீ யந்த்ர பூஜை.*

*கட்டுப்பாடு இல்லாவிட்டால் தப்பு; விபரீத பலன்கூட ஏற்டும் என்று பயமுறுத்துகிற ரீதியில் ஒரு வார்த்தைகூடப் போடாமல் ரொம்ப நயமாக வார்ன் பண்ணி இப்படி ஒரு ச்லோகம்!*

## அம்பிகையின் அதிசயக் கற்பு

*தம்பதிகளாகப் பார்ப்பதில் மனஸின் பரிசுத்தத்தைச் சொல்லிவிட்டதால் படிக்கிறவர்கள் அப்படியே பார்ப்பார்கள் - கொஞ்ச நாழிக்காவது பார்ப்பார்கள் - என்ற*

*நம்பிக்கையில் அப்புறம் மூன்று ச்லோகம் த்ரிமூர்த்திகளையுமே தம்பதியாக ப்ரஸ்தாபித்துச் செய்திருக்கிறார். காவ்ய ரீதியில் கவிகள் எப்படி வேடிக்கை பண்ணுவார்களோ அப்படி!*

*ஒரு ச்லோகத்தில் (96) என்ன சொல்கிறாரென்றால் உசந்த கவிகளை ஸரஸ்வதி வல்லபர் என்று சொல்லும் வழக்கமுண்டு. சாஸ்த்ரோக்தமாகவோ ப்ரஹ்மா ஒருத்தர்தான் ஸரஸ்வதி வல்லபர். அதே மாதிரி மஹாவிஷ்ணுதான் நிஜமாக ஸ்ரீ என்கிற லக்ஷ்மிக்கு ப்ரபுவானதால் ஸ்ரீமான், செல்வச்சீமான் என்றெல்லாம் சொல்கிறோம். இப்படி மநுஷ்யர்களோடு அம்பாளை ஸம்பந்தப்படுத்தி எங்கேயாவது சொல்லும் வழக்கமுண்டா, வசனம் உண்டா? கிடையாது. பரமேச்வரனுடைய மஹா பதிவ்ரதையான பத்னியாக அவள் இருப்பதால் புருஷலோகத்தில் அத்தனை பேருக்கும் அம்மாதானே தவிர, ஒரு பேச்சுக்கு, அதிசயோக்திக்குகூட அவளை ஸரஸ்வதி லக்ஷ்மிகளைப்பற்றி சொல்கிற மாதிரி எதுவும் சொல்வதில்லை.*

*அப்படிப்பட்ட அவளுடைய பாதிவ்ரத்யத்திற்குப் பெருமை தருவதாக ஒரு விஷயம் சொல்கிறார். கர்ப்ப காலத்தில் ஸ்த்ரீகளுக்கு ஏற்படும் மசக்கைக்கு தோஹதம் என்று பெயர். இந்த தோஹதம் வ்ருக்ஷஜாதிகளுக்கும் உண்டு என்றும், அப்போது அவை என்ன ஆசைப்படுகின்றனவோ அது பூர்த்தியானால்தான் அவை புஷ்பித்து, அப்புறம் காய்த்துப் பழம் கொடுக்கும் என்றும் ஒரு லிஸ்ட், இன்ன மரம், செடி, கொடிக்கு இன்ன தோஹதம் என்று கவி மரபிலே சொல்லுவார்கள். அந்த எல்லா மசக்கை ஆசையும் ஒரு மநுஷ ஸ்த்ரீயை ஸம்பந்தப்படுத்தியே இருக்கும். வேடிக்கை வேடிக்கையாகச் சொல்லியிருக்கும். ஒரு ஸ்த்ரீயின் கடாக்ஷம் பட்டாலே ஒன்று புஷ்பிக்கும் இன்னொன்றிடம் அவள் ஹாஸ்யமாக, ச்ருங்கார ஜாடையும் வீசுகிற ஹாஸ்யமாகப் பேசினால் புஷ்பிக்கும்; ஒன்று அவள் ஆடினால் புஷ்பிக்கும்; ஒன்று அவள் பாடினால் புஷ்பிக்கும்; இன்னொரு வ்ருக்ஷத்தின் மேலே அவள் வாயால் ஊதினால் புஷ்பிக்கும்; இன்னொன்று ரொம்ப விசித்ரமாக, அவள் வாயிலே மதுவை விட்டுக் கொண்டு அதன் மேலே கொப்பளித்தால்தான் புஷ்பிக்கும்! அவள் உதைவிட்டால்தான் புஷ்பிக்கிறது என்றுகூட ஒன்று! இப்படி இருப்பதில் குரவகம் என்ற மருதாணி (மருதோன்றி) ஒரு ஸ்த்ரீ அணைத்துக் கொண்டாலே புஷ்பிப்பது. பரமேச்வரனுக்கே தன்னை மனோ-வாக்-காய ஸமர்ப்பணம் பண்ணிக் கொண்டுவிட்ட அம்பாள் ஒரு மருதாணி மரத்திற்கு இருக்கிற இந்த தோஹதத்தைக் கூடப்பூர்த்தி பண்ணமாட்டாள் என்கிறார்!*

*இங்கே அம்பாளைக் கூப்பிடும்போது, 'ஸதி! ஸதீநாம் அசரமே!'' என்கிறார். முதலில் 'ஸதி' என்றது அம்பாள் ஒருத்திக்கே பெயராக இருப்பதைச் சொல்லிக் கூப்பிடுவது. தக்ஷ ப்ரஜாபதிக்குப் புத்ரியாக அம்பாள் இருந்தபோது அவளுக்கு வைத்த பெயர் அது. 'ஸத்' என்பது ஸத்யம், நல்லது என்று இரண்டு அர்த்தம் கொடுக்கும். அதனடியாக அப்படி (ஸதி என்று) பரம ஸத்யமும் மஹா நல்லதுமான ப்ரஹ்ம சக்தியின் அவதாரத்திற்குப் பெயர். அந்த அவதாரத்தை அம்பாள் முடித்தது பரம பாதிவ்ரத்யத்தினாலேயே! பதியைத் தகப்பனார் அலக்ஷ்யம் பண்ணியதால் அப்படியே மனஸு நொந்து அந்தத் தகப்பனார் கொடுத்த தேஹத்தையா தரிப்பது என்று ப்ராண த்யாகம் பண்ணிவிட்டாள். அதிலிருந்து பதிவ்ரதை என்பதற்கே 'ஸதி' என்று பேர் வந்து*

*விட்டது. அம்பாளொருத்தியின் பெயரான 'ஸதி' என்ற* proper noun *உத்தம பத்னி யாரானாலும் அவர்களைக் குறிப்பதான* common noun *ஆகிவிட்டது! ''ஸதீநாம் அசரமே!'' என்று ஆசார்யாள் சொல்லியிருப்பது இந்தப் பொதுப்பெயரை வைத்துத்தான். உத்தம பத்னிகளுக்குள்ளே முதலிடம் பெறுபவளே!' என்று அர்த்தம். 'சரம ச்லோகம்' என்று கேட்டிருக்கலாம். ஒருத்தருக்கு வாழ்க்கை முடிந்தபின் அவரைப் போற்றிப் பண்ணுவது சரம ச்லோகம் 'சரமம்' - முடிவு. 'அசரமம்' - முதல்.*

*சிவன் ஒன்றுக்கும் உதவாதவன்; அம்பாள்தான் அவனை உதவுபடியா ஆக்கினவள் என்பதாக ஸ்தோத்ரத்தை ஆரம்பித்தார். சாக்த சாஸ்த்ரம் அவரை அப்படிச் சொல்ல வைத்தது. கவி மரபும் அதற்குக் கை கொடுத்தது. ஆனாலும் முடிக்கும்போது* - final word *தானே தீர்ப்பு? அப்படித் தீர்ப்புத் தரும்போது - தர்மாசார்யராக இருந்து கொண்டு லோகத்து ஜனங்களுக்கு நடைமுறை வாழ்க்கையில் எது நல்லதோ, எதுதான் வேத சாஸ்த்ர விதியோ, அதைத்தான் சொல்ல வேண்டுமென்று, ஈச்வரனுக்கு முதலிடம் தந்து, அவனே தன்னுடைய ஸர்வஸ்வமும் என்று ஆத்மார்ப்பணம் பண்ணின பதிவ்ரதா ரத்னமாகவே அம்பாளைக் காட்டி இருக்கிறார். இதிலே உச்சிக்குத்தான் அடுத்த ச்லோகத்தில் (97) போகிறார்.*

## பரப்ரஹ்மத்தின் பட்டமஹிஷி

**கிராமாஹுர்-தேவீம் த்ருஹிண-க்ருஹிணீம் ஆகமவிதோ**
**ஹரே: பத்நீம் பத்மாம் ஹர-ஸஹசரீம் அத்ரி-தநயாம் ।**
**துரீயா காபி த்வம் துரதிகம நிஸ்ஸீம மஹிமா**
**மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரஹ்ம-மஹிஷி ॥ 97**

*(ஆகமவித:) சாஸ்திரமறிந்தோர் (அம்பிகையான உன்னையே) (த்ருஹிண க்ருஹிணீம்) பிரும்மாவின் இல்லாளான (கிராம் தேவீம்) வாக்தேவியாகவும் (ஹரே: பத்நீம்) திருமாலின் பத்னியான (பத்மாம்) கமலையாகிய லக்ஷ்மியாகவம், (ஹர ஸஹசரீம்) சிவபெருமானின் இல்லறத் துணைவியான (அத்ரி தநயாம்) மலைமகளாகவும் (ஆஹு:) கூறுகின்றனர். (த்வம்) நீயே (துரியா) (அம்மூவருக்கும் மேம்பட்ட) நான்காமவளாகவும், (கா அபி) இத்தகையவள் எனக் கூறவொண்ணாத, எல்லையற்ற பெருமை பொருந்தியவளாகவும் (பரப்ரஹ்ம மஹிஷி) பரப்பிரம்மத்தின் பட்டத்தரசியான (மஹாமாயா) மஹாமாயையாக (இருந்து கொண்டு) (விச்வம்) பிரபஞ்சத்தை (ப்ரமயஸி) சுற்றிச் சுழற்றுகிறாய்.*

*''பரப்ரஹ்ம மஹிஷி'' என்று ஒரு அஸாதாரணப் பேரை இங்கே அம்பாளுக்குக் கொடுத்திருக்கிறார். பராசக்தியைத்தான் எல்லாவற்றுக்கும் மேற்பட்டதாக சாக்த சாஸ்திரம் சொல்கிறது. இந்த ஸ்தோத்ரமும் அப்படித்தான் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறது. அவள்தான் ஆட்சியதிகாரம் படைத்த ஸாவரின் பவர்; லோகத்திற்கு மாதா-பிதாக்களாகக் காட்டணுமென்பதற்காகத்தான் அவள் பதி ஸ்நானம் கொடுத்துக் காமேச்வரன் என்று ஒருத்தனை வைத்துக் கொண்டிருப்பது என்று நிறையச்*

சொல்லியிருக்கிறேன். ஆனால் இங்கே ''பரப்ரஹ்ம மஹிஷி'' என்பதற்கு என்ன அர்த்தமென்றால் - விஸ்தரித்துச் சொல்லும்போது என்ன அர்த்தமென்றால் - பரப்ரஹ்மமாக இருக்கும் ஈச்வரன்தான் ஆள்கிற ராஜா, அவனுடைய பத்னியாக இரண்டாவது ஸ்தானத்தில் இருப்பவளே அம்பாள் எனறு அர்த்தம். 'மஹிஷி' என்றால் ராஜாவின் பட்டத்து ராணி. தானே ஆட்சி செலுத்துபவளை மஹிஷி என்பதில்லை; மஹா ராஜ்ஞி, சக்ரவர்த்தினி என்றே சொல்வது, ராஜா-ராஜ்ஞி, சக்ரவர்த்தி-சக்ரவர்த்தினி என்று இருக்கிற மாதிரி மஹிஷன்-மஹிஷி என்று கிடையாது. அரசனுக்கு மஹிஷன் என்று பேர் இல்லை. (சிரித்து) அது அஸுரன் பெயர்தான்! எருமையாட்டம் இருப்பவன் 'மஹிஷன்'. அதாவது ராஜாவுக்கு அடங்கி, பத்னி ஸ்தானத்தில் இருக்கப்பட்டவளுக்கே ஏற்பட்ட ப்ரத்யேகப் பெயர் 'மஹிஷி' என்பது அதனால் அதற்கு 'மஹிஷன்' என்று ஆண்பால் இல்லை.

சிவனையே அசைக்கிறவள், ஆட்டிப்படைக்கிறவள் அவன் சாகாமல் ரக்ஷிக்கிறவள் என்றெல்லாம் ஏகமாகச் சொல்லிவிட்டு முடிக்கும்போது ஸ்த்ரீ தர்மத்தைச் சொல்ல வேண்டும் என்று அவனுக்கே சக்ரவர்த்தியாகப் பட்டாபிஷேகம் பண்ணி அவளை அவனுடைய மஹிஷியாக்குகிறார்! அவளுக்கே அதுதான் பிடிக்கும்! அவளேதானே ஆசார்யாளுக்குள்ளே பூந்து (புகுந்து) புறப்பட்டு இப்படிப் பாட வைத்திருப்பது?

ச்லோகத்தில் கடைசி வார்த்தை 'பரப்ரஹ்ம மஹிஷி'. அதை முதலில் சொல்லிவிட்டேன். அதற்கு முன்னாடி என்ன சொல்கிறார்? ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதிகளை த்ரிமூர்த்திளின் பத்னியாகச் சொல்கிறார். அப்புறந்தான் நான்காவதான துரீய ப்ரஹ்மத்தின் பத்னியாய் மூல பராசக்தியான காமேச்வரியைச் சொல்லியிருக்கிறார்.

முந்தைய ச்லோகத்தில், ''ஸரஸ்வதி வல்லபர்களாகவும், ஸ்ரீமான்களாகவும் அநேகர் உண்டு. உன்னை வைத்துத்தான் அப்படிச் சொல்வதற்கில்லாமல் சிவ பத்னியாக மட்டுமே மஹாபதிவ்ரதையாக இருக்கிறாய்!'' என்று சொன்னபோது மற்ற இரண்டு பேரையும் மட்டம் தட்டுகிறாற்போலத் தோன்றுகிறதல்லவா? அப்படியில்லை என்று இந்த ச்லோக ஆரம்பத்தில் க்ளியர் பண்ணுகிறார். அத்வைத ஆசார்யாள் எங்கேயாவது தெய்வபேதம் பண்ணுவாரா? எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு ஏற்றம் கொடுத்து, கேட்கிறவர்கள். அதில் நன்றாக மனஸை வைக்கும்படிச் செய்வதற்காகவே மற்றவர்களை இறக்குகிற மாதிரிச் சொல்வதுண்டு. அப்படித்தான் அங்கே பண்ணினார். இதே ஆசார்யாள்தான் சாரதா மடம், சாரதா பீடம், ச்ருங்கேரியில் சாரதாம்பாளுக்கே எல்லா விசேஷமும் என்பதாக ஸரஸ்வதியிடமுந்தான் பக்தி காட்டியிருக்கிறார். ஸந்நியாஸிகளைப் பத்து க்ரூப்பாக 'தசநாமி' என்று பிரித்த போது இரண்டு க்ரூப்புக்கு 'ஸரஸ்வதி', 'பாரதி' என்று அவள் பெயரையே வைத்திருக்கிறார். வேறே எந்த ஸ்வாமி பெயரும் தசநாமிகளில் இல்லை. அதே மாதிரி, லக்ஷ்மி ஸ்துதிகளில் ரொம்பவும் விசேஷமாயிருக்கும் ''கநகதாரா ஸ்தவ''மே அவர் செய்ததுதான். அதுதான் அவர் பண்ணிய முதல் ஸ்தோத்திரமே!

தெய்வ பேதமே இல்லை என்பதை முதலில் க்ளியர் செய்து விடுகிறார். அம்பாளைப் பார்த்து ''உன்னையேதான் ப்ரஹ்ம பத்னியான வாகீச்வரியாகவும், விஷ்ணு பத்னியான பத்மாவதித் தாயாராகவும் சொல்வது'' என்கிறார். ''கிராம் தேவீம் த்ருஹிண க்ருஹிணீம்... ஹரே: பத்நீம் பத்மாம்.'' இது ஏதோ தாமாகச் சொல்வதில்லை; வேதத்தின் அபிப்ராயமே தெய்வங்களுக்குள் பேதமில்லை என்பதுதான் என்று விநயமாகத் தெரிவிக்கிறார் - ''வேதமறிந்த வித்வான்கள் இப்படித்தான் சொல்கிறார்கள் - ஆகமவித: ஆஹு''.

அப்புறம் ''ஹரஸஹசரீம் அத்ரிதநயாம்'' என்பதாக 'ருத்ரபத்னியான பார்வதியும் நீதான்' என்கிறார். 'அத்ரி தநயா' என்றால் மலைமகள்.

த்ரிமூர்த்திகளோடு முடியாமல் பஞ்சக்ருத்ய மூர்த்திகள் உண்டு என்றும், ருத்ரனும், பார்வதியும் த்ரிமூர்த்திகளில் வருபவர்களே என்றும், காமேச்வர-காமேச்வரிகளோ பஞ்ச க்ருத்யத்திற்கும் 'டாப்'பில் உட்கார்ந்து கொண்டிருப்பவர்களென்றும் சொல்லியிருக்கிறேன். அதனால் த்ரிமூர்த்திகளுடைய பத்னிகளில் ஒருத்தியாக ஸம்ஹாரகர்த்தாவின் சக்தியாயிருக்கிற பார்வதியும் ஸரஸ்வதி-லக்ஷ்மிகள் மாதிரிப் பராசக்தியான காமேச்வரிக்கு வேறேதான்; ஸ்தானத்தில் கீழேதான். ஆனால் அந்த இரண்டு பேரைச்சொன்ன மாதிரியே பார்வதியையும் பராசக்தியேதான் என்று அத்வைதமாகச் சொல்கிறார். பராசக்தியைத் தவிர எதுவுமில்லை; அவளேதான் எல்லாமாகி இருப்பது என்பதால் அத்வைதம்.

அது அவரை அப்படியே அத்வைத சாஸ்த்ர அபிப்ராயமான 'துரீய'த்தில் கொண்டுவிட்டு விடுகிறது. 'பஞ்சக்ருத்யம்' என்று ஐந்து, அதற்கு மேலே மூல ஸத்யமும் அதன் சக்தியும் என்று சைவமும் சாக்தமும் சொல்கிற மாதிரி அத்வைதத்தில் சொல்வதில்லை. நாலோடேயே அது முடித்துவிடும். அத்வைத சாஸ்த்ரத்திற்கு ச்ருதி ப்ரமாணமான மாண்டூக்ய (உபநிஷ)த்தில் அப்படித்தான் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. ஒரு ஜீவனுக்கு ஸ்வப்னாவஸ்தை (கனவு நிலை) என்பது, ஸ்ருஷ்டி என்றும் ஜாக்ரத் அவஸ்தை ஸ்திதி என்றும் ஸுஷுப்தி (தூக்கம்) ஸம்ஹாரம் என்றும் காட்டி, அப்புறம் ஸுஷுப்தியிலும் தூங்காமல் இருந்து கொண்டிருக்கும் உயிர்மூலமான ப்ரஹ்மத்தை நாலாவது நிலையான சதுர்த்தம் என்று சொல்லி அது முடித்துவிடும். அந்தச் சதுர்த்தத்தைத்தான் துரீயம் என்பதும். அந்த அடிப்படையில் இங்கே ஆசார்யாள் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரகர்த்தாக்களின் சக்திகளைச் சொன்னவுடன், பஞ்ச க்ருத்யத்தில் திரோதானம், அநுக்ரஹம் என்று பாக்கி இருப்பவற்றுக்குப் போகாமல் துரீயம் என்கிற ப்ரஹ்மத்திற்குப் போய் விடுகிறார்.

ப்ரஹ்மத்தின் சக்தியைப் பற்றி அத்வைதத்தில் அவர் விசேஷமாகச் சொல்வதில்லை. விசேஷமாகச் சொல்லவில்லை என்று ஏன் சொல்கிறேனென்றால், சில பேர் நினைக்கிறாற்பேல ஒரேடியாகச் சொல்லாமலேயுமில்லை. முன்னேயே இவ்விஷயமாகச் சொல்லியிருக்கிறேன். 'ப்ரஹ்ம ஸூத்ர'த்தின் முதல் ஸூத்ர பாஷ்யத்திலேயே ஆசார்யாள் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணங்கள் சொல்லும்போது அது ''நித்ய-சுத்த-புத்த-முக்த ஸ்வபாவம்'' என்று சொல்வதோடு நிறுத்தாமல், ''ஸர்வஜ்ஞம்''

*என்றும் சொல்கிறபோதே அந்த 'ஏக'த்துக்கு வேறே மாதிரி 'ஸர்வம்' என்று அநேகம் இருப்பதாகவும், அவற்றையெல்லாமும் இது அறிகிறதாயும் ஒருநிலை ஒப்புக்கொள்ளப்பட்டு விடுகிறது. அப்புறம் இன்னும் வெளிப்படையாக ''ஸர்வ சக்தி ஸமன்விதம்'' என்றும் ஒரு லக்ஷணம் சேர்த்திருக்கிறார். ''ஸர்வோபேதா ச தத்-தர்சநாத்* (II.1.30)" *என்ற ஸூத்ரத்தின் பாஷ்யத்திலோ இன்னும் ஸ்பஷ்டமாக த்வைத நிலையை ஒப்புக்கொண்டு, ப்ரஹ்மம் ''விசித்ர (அதாவது வித விதமாக உள்ள) சக்தியோகம்'' கொண்டது என்றே சொல்கிறார்.. ''சக்தியோகம்'' என்றால் சக்தியோடு கூடியிருப்பது. இதையே சாக்த பாஷையில் சொல்வதுதான் இங்கே பரப்ரஹ்மமானது பராசக்தியைத் தன்னுடைய மஹிஷியாகக் கொண்டிருப்பது ஙஎன்பது! ஸர்வஜ்ஞாத்மர் என்று அத்வைத ஆசார்ய புருஷர்களில் ரொம்பப் பெரியவராக ஒருத்தர்; ஆசார்யாளின் நேர் சிஷ்யர், கடைசி சிஷ்யர். அவர், '' சுத்த அத்வைத தர்சனத்திலேயே சக்தி, லீலை ஸ்ருஷ்டி எதுவும் கிடையாதுதான். ஆனாலும் அந்த அத்வைத லக்ஷ்யமே பரம் என்று இருக்கும் 'ச்ரத்தாளுக்களும் கர்மா, உபாஸனை முதலியவற்றுக்கு இடங்கொடுத்து, அந்த வியவஹார* angle *-லிருந்து பார்க்கும்போது, ப்ரஹ்மத்தின் ஞானமான சித் என்பது சக்திமயமாயிருந்து கொண்டு, அவித்யா என்றும் மாயா என்றும் சொல்கிற ஜடசக்தியினால் ஜகத்தை உண்டுபண்ணுவதாக விவரிக்கிறார்கள்'' என்று தெளிவாகச் சொல்லியிருக்கிறார். ஆனாலும் சக்திக் கூத்தில் மனஸைத் திருப்பாமல் சாந்த ப்ரஹ்மத்திலேயே அதை ஐக்யம் பண்ணுவதுதான் அத்வைத புஸ்தகங்களிலே ஆசார்யாளுடைய லக்ஷ்யமாகையால் ப்ரஹ்ம சக்திக்கு முக்யம் தராமல், ஸ்ருஷ்டியை ஒரு மாயையாக ஒதுக்கித் தள்ளிவிட்டு அதற்கு மேலே உள்ள துரீய ப்ரஹ்மத்திலேயே சித்தத்தைச் செலுத்தப் பண்ணுவார். சக்தி என்று ஆண்-பெண்ணில் சேராத வெறும் எனெர்ஜியாகக்கூட அவர் அதிகம் சொல்வதில்லை என்னும் போது அதை ஸ்த்ரீயாக ப்ரஹ்ம பத்னி என்பதற்கு அங்கே இடமேயில்லை!*

*ஆனால் அதே ஆசார்யாள் அங்கே ப்ரஹ்ம வித்யா ஆசார்யாளாயிருந்தவர் இங்கே ஸ்ரீ வித்யா ஆசார்யாளாக இருந்துகொண்டு இதிலேதான் அபிருசி (ஈடுபாடு) என்று இருப்பவர்களுக்கு வழி காட்டும்போது காமேச்வரியான பராசக்தியையே பரப்ரஹ்ம பத்னி, மஹிஷி என்கிறார். ஸ்ரீ வித்யா தந்த்ரமும் அத்வைத ஸாயுஜ்யத்தையேதான் லக்ஷ்யமாகக் கொண்டதாகையால் அத்வைத ஞானவழியிலே வருகிற துரீயத்தையும் எடுத்துக்கொண்டு, த்வைதமான இந்த பக்தி வழியிலே வருகிற சிவ-சக்தி தம்பதி என்கிற அபிப்ராயத்தையும் அதோடு சேர்த்துக் குழைத்துச் சொல்லியிருக்கிறார்.*

*'துரீயா' என்று அவர் அம்பாளைச் சொல்லும்போது, ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி என்ற மூன்றுக்கு அப்புறம் அவற்றுக்கு மேலாக மூலமாக உள்ள நாலாவதான பராசக்தியைச் சொல்கிறாரென்பது மாத்திரமில்லை. துரீயமான ப்ரஹ்மத்தின் சக்தி-பத்னி துரீயா என்பதாலும் அப்படிச் சொல்கிறார்.*

*''அம்பிகை! நீ ஸாக்ஷாத் பரப்ரம்ஹ்மத்தின் பட்ட மஹிஷியாயிருக்கிறாய். நீயே மஹாமாயையாக விச்வம் முழுவதையும் த்வைத இழுபறியில் ப்ரமணம் பண்ணும்படியாக - அதாவது, சுற்றிச் சுற்றி அலையும் படியாக - செய்கிறாய்'' என்கிறார். அதாவது அத்வைதத்தில் முக்யமாகச் சொன்ன மஹாமாயாவாகவே பராசக்தியை*

*'ஐடென்டிஃபை' பண்ணி (அத்வைத) வேதாந்தம் சாக்தம் இரண்டையும் ஸமரஸப்படுத்தி விடுகிறார். அந்த மாயையை ''தூரதிகம நிஸ்ஸீம மஹிமா'' என்று சிறப்பிக்கும்போதோ சாக்த பாஷையில் சக்தியைப் போற்றிச் சொல்கிற முறையில் சொல்லியிருக்கிறார். 'துரதிகமம்' என்றால் 'அடைய முடியாதது' என்று அர்த்தம். அதன் கட்டளையை யாரும் கடக்க முடியாது என்றும் அர்த்தம். நிஸ்ஸீம மஹிமா, எல்லை கட்டமுடியாத அப்பேர்ப்பட்ட மஹிமை, பெருமை கொண்டது என்று அர்த்தம். அத்வைதத்தில் மாயையைத் 'துச்சம்' என்று தள்ளவே சொல்வர். அது இன்னதென்று புரியாத புதிரான அநிர்வசநீயம் என்பார். இங்கே அதையே பராசக்தியாக இப்படியெல்லாம் கொண்டாடி அடைமொழிகள் போடுகிறார்!*

*ஸ்ருஷ்டியில் பலவிதமான ஜீவர்களை அம்பாள் பண்ணிப் போட்டிருப்பதைப் பார்த்து, யாருக்கு எப்படிச் சொன்னால் அவர்கள் இருக்கிற ஸ்திதியில் அவர்களுடைய ஆத்மாபிவ்ருத்திற்கு வழி உண்டாகுமோ அப்படிப் பக்குவமாகச் சொன்ன ஈடிணையில்லாத ஆசார்ய புருஷர் நம்முடைய பகவத்பாத ஆசார்யாள். இப்படிப் பல மார்க்கங்களில் வழி காட்டியவர் அத்வைத்திற்கு நெருக்கமாகவுள்ள ஸ்ரீ வித்யா ஆசார்யராகி இங்கே பேசுகிறபோது அந்த சாஸ்திரத்திலிருந்து சிலது அத்வைத சாஸ்திரத்திலிருந்து சிலது என்று, எதெது இயற்கையாக ஒன்று சேருமோ அப்படிப்பட்டவையாக எடுத்து ஒன்றாகத் திரட்டி, பாலையும் வெல்லத்தையும் சேர்த்துக் கிளறித் திரட்டுப்பாலாக்கிக் கொடுக்கிறது போலக் கொடுத்திருக்கிறார்.*

*அத்வைதத்திலே அவருடைய நிர்குண ப்ரஹ்மம் மாயையோடு ஸம்பந்தமே இல்லாதது. அத்வைத ஞானத்திற்கு அழைத்துக்கொண்டு போகிற சாக்த பக்தியிலே ஈடுபாடுள்ளவர்களுக்காக அந்த ப்ரஹ்மத்தையும் மஹா மாயையும் அகமுடையான்-பெண்டாட்டியாக உறவுபடுத்திச் சொல்லி விடுகிறார்! அது மட்டுமில்லை. அத்வைதத்திற்கு ரொம்ப தூரத்தில் உள்ள சாஸ்த்ர தர்மங்கள்தான் பொது உலகத்திற்கு வழி. அப்படி ஜகத்துக்கு வழி சொல்வதற்கு நம்முடைய ஜகதாசார்யாள் மறக்கவே மாட்டார். அதனால் அகமுடையான்-பெண்டாட்டி என்பதோடு நிறுத்திவிடாமல் அகமுடையானுக்கு அடங்கித்தான் பெண்டாட்டி என்று காட்டுவதற்காக ப்ரஹ்மத்தையே சக்ரவர்த்தியாக்கிப் பராசக்தியை அவனுடைய மஹிஷியாகச் சொல்கிறார்!*

*அவருடைய மனஸு எத்தனை விசாலம், அது எத்தனை விசாலமாகத் திறந்து எல்லாவற்றுக்கும் இடம் கொடுத்து எல்லாருக்கும் வழி காட்டுகிறது என்று பார்த்தால் - தமக்கு என்று இதுதான் ஸித்தாந்தம் என்று முரட்டுப் பிடியாக ஏதோ ஒன்றையே பிடித்துக் கொள்ளாமல் எப்படி ஸித்தாந்தங்களையெல்லாம் அவர் ஸமரஸப்படுத்துகிறார் என்று பார்த்தால் - பார்க்கப் பார்க்க 'இப்படி ஒரு ஆசார்யாள் நமக்குக் கிடைத்தாரே!' என்று பெருமையாக இருக்கிறது.*

*ஆரம்பத்திலே அசையாத சிவனொருத்தனைப் பராசக்தி அசைவிப்பதாகச் சொன்னவர் முடிக்கும்போது விச்வம் முழுதையும் அவள் அசை அசை என்று அசைத்துச் சுழட்டி வைக்கிறாள் - ''விச்வம் ப்ரமயஸி'' - என்கிறார். அந்த ஒரு சிவப்ரம்மம் ப்ரமணமானதும் (சுழற்சியடைந்ததும்) அத்தனை விச்வ ஸ்ருஷ்டியும் ஏற்பட்டு எல்லாம்*

*சுழலுகின்றன, ஸதா சலிக்கின்றன! ஒரு அணுவுக்குள்ளே எலெக்ட்ரான் ஸெகண்டுக்கு 1,86,000 மைல் வேகத்தில் சுற்றுவதிலிருந்து, பெரிய பெரிய நக்ஷத்ர மண்டலங்களான காலக்ஸிகள் வரை நம்முடைய பூமி முதலான ஸகல க்ரஹ நக்ஷத்ரங்களும் தங்களைத் தாங்களே சுற்றிக்கொண்டு, அதோடு ஆகாச வீதியிலேயும் ஓட்டமாக ஓடிக் கொண்டிருக்கும்படியாக, சொல்ல முடியாத பவரோடு ஸகலத்தையும் அசை, அசை என்று அசைத்துக் கொண்டிருக்கிறாள்! இந்த அத்தனை சலனத்தையும் சேர்த்து வைத்து ஒவ்வொரு ஜீவ மனஸும் ஸதா சஞ்சலிக்கிறது! 'விச்வம் ப்ரமயஸி'' என்று ஸரியாகத்தான் போட்டார்! பகவானும் கீதையில் ''ப்ராமயன் ஸர்வ பூதாநி'' என்று சொன்னாலும், அவர் ஜீவ குலத்தின் சித்தம் ஸதா சலிப்பதை - (சிரித்து) நம் அத்தனை பேருக்குமே 'சித்த ப்ரமை' என்ற ப்ரமணம் இருக்கத்தான் இருக்கிறது! அதை - மட்டுமே சொன்னார். ஜீவர்களின் ஹ்ருதயத்திலே இருந்து கொண்டு அவர்களை ஈச்வரிஆட்டி வைப்பதை மட்டும் சொன்னார். ஆசார்யாள் சேதனம் அசேதனம் எல்லாவற்றையுமே சேர்த்து 'விச்வம்' என்று போட்டு விட்டார்.*

*மஹாமாயையாக இப்படி ஆட்டி வைப்பவள் பரமாநுக்ரஹ ரூபிணியாக இந்த மாயா லோகத்திலே பலவித அருள்களைப் பண்ணி முடிவிலே ஆடாத அசையாத பரானந்த ரஸமான சிவமாக - ப்ரஹ்மமாக - ஜீவனைப் பண்ணுவதை அடுத்த ச்லோகத்திலேயே தெரிவிக்கிறார்.*

## அனைத்துப் பலன் அருளும் அன்னை வழிபாடு

*ஒரு ஸ்தோத்ரத்தை முடிக்கும்போது 'இதன் பாராயணத்தால் இன்ன இன்ன பலன்' என்பதாக பலச்ருதி என்று ச்லோகம் கொடுப்பது வழக்கம். ஆசார்யாளோ விநய மூர்த்தி. அதனாலே கடைசியில் இது ஒன்றும் தாமாகப் பண்ணிவிட்ட ஸ்தோத்ரமில்லை; அவளுடைய அருளேதான் தம்மை ஏதோ துளி ப்ரபாவத்தை எழுத வைத்தது என்று முடிக்கவே ப்ரியப்பட்டு அப்படியே நூறாவது ச்லோகத்தைப் பாடியிருக்கிறார். அதற்கு முந்தைய ச்லோகந்தான் (99) பலச்ருதி மாதிரிப் பண்ணியிருக்கிறார். அஸல் பலச்ருதியில்லை. பலச்ருதி மாதிரியானதுதான்! அம்பாள்தான் அவரைப் பாடப் பண்ணினாலும் லோகம் அவரையேதான் ஸ்தோத்ரகர்த்தா என்று சொல்லும் என்று அவருக்குத் தெரியும். அப்படியிருக்கும்போது 'இதற்கு இன்னவெல்லாம் பலன்' என்று சொன்னால் தம்முடைய வாக்குக்கு அந்த சக்தியிருப்பதாகத் தாமே தம்பட்டம் அடித்துக்கொள்கிற மாதிரிதான் என்று நினைத்திருக்கிறார். அப்படியொரு அடக்கம்! அதனால், 'இந்த ஸ்தோத்ர பாராயணத்திற்குப் பலன்' என்று சொல்லாமல், - ஸ்தோத்ரம் அம்பாள் உபாஸனையில் ஜனங்களைச் செலுத்தத்தானே ஏற்பட்டது? - அந்த உபாஸனைக்கு இதெல்லாம் பலன் என்று சொல்லி விடலாம் என்று தீர்மானித்து அப்படியே பண்ணியிருக்கிறார். 'இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் பண்ணுகிறவன் இன்ன பலன் அடைகிறான்' என்காமல், 'உன்னை உபாஸிக்கிறவன் - த்வத் பஜநவான் - இந்தப் பலன்களை அடைகிறான்' என்று பாடியிருக்கிறார் (ச்லோ-99)*

*ஸூக்ஷ்மமாகக் கவனித்தால், இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் பண்ணுவதே அம்பாளை பஜிப்பதுதான், உபாஸிப்பதுதான்! அவளிடமே சொக்கித் தோய்ந்து*

*போவதற்கு இந்த ஸ்தோத்ரம் ரொம்பப் பேருக்கு உபகரிக்கிற அளவுக்கு மற்ற பூஜை, ஜபம், த்யானம் எதுவும் பண்ணுமா என்பது ஸந்தேஹம். இப்படி அவள் நினைவாகவே சொக்கியிருப்பது உபாஸனை இல்லை என்றால் வேறே எதுதான் உபாஸனை?*

*இன்னொன்று - ஸ்தோத்ரத்தின் முதல் ஸெக்ஷன் அவளுடைய மந்த்ர தந்த்ர ரூபம். இரண்டாம் ஸெக்ஷன் ஸௌந்தர்ய ரூபம். அதனால் ஸ்தோத்ரமே அம்பாள்தான்! அப்போது அதன் பாராயணமே உபாஸனைதானே? பாராயணம் பண்ணுகிறவனே 'பஜனவான்' தானே?*

*ஸரி, அம்பாளை உபாஸிப்பதால் என்ன பலன் கிடைக்கிறதென்றால், 'என்ன பலன்தான் கிடைக்காமலிருக்கும்?' என்றே பதில் சொல்ல வேண்டியிருக்கிறது! இஹ பர நலன் அத்தனையும் தருகிறவள் அவள். பர நலன்தான் நலன், இஹ நலன் நலனேயில்லை என்பதிருக்கட்டும். ஞானிகள், மஹான்கள் அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கட்டும். அதுவே நமக்கும் முடிவான லக்ஷ்யமாயிருக்கட்டும். ஆனால் இப்போது இந்த லோக நலன் எதுவும் நமக்கு வேண்டாமென்று தள்ளுகிற பக்குவம் நமக்கு இருக்கிறதா என்ன? அல்லது 'சூ, மந்திரகாளி!' போட்டு உடனே அந்தப் பக்குவத்தை உண்டாக்கிவிட முடியுமா? அதனால் இஹத்திலிருந்தே பரத்திற்கு* gradual *ஆக, நிதானமாக, அவளை நம்பிக் கொண்டு போவோம். இதிலே மேலும் மேலும் புதைந்து போகாத அளவுக்குப் பாதுகாத்துக் கொண்டு மெதுவாகவே ஒரு மாம்பிஞ்சு கட்டக் கசங்காயாக, அப்புறம் மதுரமாக ஆகிற மாதிரி நிதானமாக, இயற்கையை - இஹத்தை - அநுஸரித்துப் போயே இதிலிருந்து கனிந்த மாம்பழம் இற்று விழுகிற மாதிரி விடுபடுவோம். இந்த இஹ நாடகம் அவள்தானே மெனக்கிட்டுப் பண்ணி வைத்திருக்கிறாள்? லேசில தப்பிக்க விடுவாளா?*

*இந்த ஸ்டேஜில்தான் இஹ பர நலன் எல்லாம் அவள் தருவதாகச் சொல்லி உத்ஸாஹப்படுத்துவது. ஆசார்யாளும் அப்படித்தான் உத்ஸாஹப்படுத்துகிறார். அம்பாள் பரநலன் தருவதை, அவள் மோக்ஷ ப்ரதாயினி என்பதை மட்டும் அவர் சொல்லி நிறுத்தினால் யாருமே உபாஸிக்க வரமாட்டார்கள்.*

*இஹ நலன்கள் அத்தனையும் நாலுக்குள்ளே அடக்கி விடலாம். அறிவு, ஐச்வர்யம் (அதாவது, செல்வச் செழிப்பு), அழகு, ஆயுஸ் என்கிற நாலு. அறிவு லௌகிகத்தோடும் (இஹத்தோடும்) சேரும், பாரமார்த்திகமாகவும் (பரத்தோடும்) சேரும். லௌகிகத்தில் முன்னேறுவதற்கும் அறிவுத்திறன் வேண்டித்தானே இருக்கிறது?*

*அறிவு கல்வியாலேயே உண்டாவது. அதனால் வித்யாதாயினியான ஸரஸ்வதியோடு ஸம்பந்தப்படுத்தி அதைச் சொல்கிறார். இங்கே எல்லா நலனும் கொடுப்பது அம்பாள் ஒருத்திதான். ஸரஸ்வதி முதலானவர்களில்லை. செய்வது அம்பாளுபாஸனைதானே? அதனால் அவளே ஸரஸ்வதி அளிப்பதான அறிவையும் அளிக்கிறாள். எந்த அளவுக்கு என்றால் ப்ரஹ்மாவே அஸூயைப் படுமளவுக்கு ஏகமாக அள்ளி அளிக்கிறாளாம்! ப்ரஹ்மாவை ஏன் இழுக்கணுமென்றால்: ஸரஸ்வதீ விலாஸம் பரிபூர்ணமாய் இருக்கும் ஸ்தானம் அவளுடைய பதியான ப்ரஹ்மாவாகத்தானே இருக்க முடியும்? நாலு வேதத்தை நாலு வாயால் அவர் சொல்லிக்*

கொண்டேயிருக்கிறாரென்றால் அதற்கு மிஞ்சியொரு ஸரஸ்வதி விலாஸமுண்டா? ஆனால் அதையும் மிஞ்சிய வித்வத்தை, அறிவை, அம்பாள் தன்னுடைய பக்தனுக்கு அனுக்ரஹித்து விடுகிறாள். அவனைப் பார்த்துத்தான், ''நம்முடைய பத்னியின் விலாஸம் நம்மைவிட ஜாஸ்தியாய் இவனிடம் இருக்கிறதே!'' என்று ப்ரஹ்மா அஸூயைப்படுகிறார்!

அடுத்தபடி ஐச்வர்யம் - பணம், காசு, ஸொத்து முதலானது.

ஆசார்யாள் இப்படி (அறிவுக்கு அடுத்தபடியாக ஐச்வர்யத்தை) சொல்லியிருந்தாலும் நம் 'சாய்ஸு'க்கே விட்டால் இதைத்தான் முதலில் கேட்போம்! நாம் ஆசைப்படுவது ஐச்வர்யத்திற்குத்தான்! அப்புறந்தான் அறிவைக் கேட்டால் கேட்போம். எது கேட்டாலும் தருகிறேன் என்று சொல்லிக்கொண்டு இப்போது இங்கே பகவான் ப்ரஸன்னமானால் முக்காலே மூணுவீசம் பேர் பணத்தைத்தான் கேட்போம். அது எவ்வளவு இருந்தாலும் போதுமென்று தோன்றாமல் இன்னும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றச் செய்வது?

அறிவு, ஐச்வர்யம், அழகு மூன்றுமே நமக்கு வேணும் என்றுதான் இருந்தாலும் ஐச்வர்யத்திற்குத்தான் நம் சாய்ஸில் முதலிடம். இதிலே ஒரு வேடிக்கை! நாம் எப்போதுமே, இப்போதுங்கூட, அறிவாளிதான் என்ற எண்ணம் நமக்கு இருக்கிறது! நம்மை அறிவாளியாகவே லோகத்திற்குக் காட்டிக்கொள்ளப் பார்த்து ஜாஸ்தி அசடு வழிகிறோம்! அறிவை நிஜமாகவே பெறுவதற்கு அப்படியொன்றும் தாபப்படுவதோ, முயற்சி பண்ணுவதோ இல்லை. பணத்திற்குத்தான் தாபம், முயற்சி எல்லாம்! அதே மாதிரி நாம் ரொம்ப அழகு என்றும் எண்ணம் நமக்கு இருக்கிறது. நம்மை லோகமும் அப்படியே நினைக்க வேண்டுமென்று எண்ணுகிறோம். ஆனால் இங்கே அறிவுக்கு முயற்சி பண்ணாத மாதிரி சும்மாயிருந்து விடுவதில்லை. நம்மை எப்படியெல்லாம் அலங்காரம் பண்ணிக்கொண்டு அழகுபடுத்திக் கொள்ளலாமோ அவ்வளவும் பண்ணிக் கொள்கிறோம்! அதனாலேயே பிறத்தியாரின் பரிஹாஸத்திற்கு ஆளாகிறோம்! இப்படி இந்த இரண்டில் இருந்தாலும் ஐச்வர்ய விஷயத்திலே மாத்திரம் வித்யாஸமாயிருக்கிறது! நமக்கு நிரம்ப அறிவு, அழகு இருக்கிறதென்று நினைக்கிற மாதிரி, நிரம்ப ஐச்வர்யம் இருப்பதாக ஒருநாளும் நினைப்பதில்லை; த்ருப்திப்பட்டு விடுவதில்லை. கோடி ரூபாயிருந்தாலும், 'வேண ஐச்வர்யமிருக்கு; இன்னம் வேண்டாம்' என்று தோன்றுவதேயில்லை! லோகத்திற்கோ நம் ஐவேஜியைக் காட்ட நாம் இஷ்டப்படுவதில்லை. எத்தனை இருந்தாலும் இல்லாத மாதிரியே வேஷம் போடுவோம்! பஞ்சப்பாட்டே பாடிக் கொண்டிருப்போம்! ஆக ஐச்வர்யந்தான் நம்முடைய first preference.

ஆனாலும் ஆசார்யாளோ முதலில் அறிவைச் சொல்லி அப்புறமே ஐச்வர்யத்தைச் சொல்கிறார். ஏனென்றால் என்னதான் நமக்காக விட்டுக்கொடுதது அவர் இஹ நலன்களையும் சொன்னாலும் அவற்றுக்குள்ளே உத்க்ருஷ்டமாக இருக்கப்பட்ட அறிவைப் பின் ஸ்தானத்திற்குத் தள்ள அவருக்கு மனஸ் வரவில்லை! அதோடு நம் நல்லதையே நினைக்கிற அவருடைய அருள் மனஸுக்கு, ''அறிவை முதலில் தராமல்

*ஐச்வர்யத்தைக் கொடுத்தால் அதை ரொம்பவும் ஆத்ம ஹானிகரமாக அல்லவா ப்ரயோஜனப்படுத்திக் கொள்வார்கள்? அவர்கள் ஸ்வயமாக எதை முதலில் கேட்டாலும், நாம் அவர்களுக்கு முதல் பக்ஷமாகக் கேட்கச் சொல்லித் தர வேண்டியது அறிவைத்தான். அறிவைத் தந்து அப்புறம் ஐச்வர்யம் தந்தால்தான் பணத்தை தார்மிகமாகச் செலவு பண்ணி அதையும் ஆத்ம அபிவிருத்திக்கு அநுகூலமாக்கிக் கொள்வார்கள்'' என்று நினைத்து முதலில் அறிவு தேவதையான ஸரஸ்வதி விலாஸத்தைச் சொல்லி அடுத்த படியாகவே ஸம்பத்துகளுக்குத் தெய்வமான லக்ஷ்மி விலாஸத்திற்கு வருகிறார். தைத்திரீயோபநிஷத்தில் அறிவை 'மேதை' என்று சொல்லி, ப்ரார்த்தித்துவிட்டு* (I.4.1) *'அதற்கப்புறம் (ததோ) ஸ்ரீயைக்கொடு என்று பிரார்த்தனை வருகிறது. அதற்குப் பாஷ்யம் பண்ணும்போது ஆசாரியாள் இப்படி ஏன் சொல்லியிருக்கிறதென்றால் அமேதஸோ ஹி ஸ்ரீ: அநர்த்தாய ஏவ இதி'' - 'அறிவில்லாதவனுக்குப் பணத்தைக் கொடுத்தால் அனர்த்தமே உண்டாகும் என்பதாலேயே இப்படிச் சொன்னது' என்கிறார்.' 'பஜ கோவிந்த' ஸ்தோத்ரத்திலும் ஆசார்யாள், ''அர்த்தம் எனப்படுகிற செல்வம் வாஸ்தவத்தில் அனர்த்தந்தான் என்று ஸதாவும் நினைவில் வைத்துக்கொள் - அர்த்தம் அநர்த்தம் பாவய நித்யம்'' - என்கிறார்.*

*ஸரஸ்வதீ விலாஸம் ப்ரம்மாவிடம் பூர்ணம் என்றால் லக்ஷ்மீ விலாஸம் பூர்ணமாயிருப்பது மஹாவிஷ்ணுவிடம். அதனால்தான் அவர் கிரீட, குண்டலாதி ஆபரணங்கள், கௌஸ்துபம், பீதாம்பரம் எல்லாம் போட்டுக்கொண்டு வைகுண்ட சக்ரவர்த்தியாய் தர்பார் நடத்துகிறார். அம்பாளை உபாஸித்து அவள் அநுக்ரஹத்தில் ஐச்வர்யவானாகிறவன் அந்தப் பெருமாளையும் மிஞ்சி விடுகிறானாம்! அதனால் அவரும் அவனைப் பார்த்து, 'நம்முடைய பத்னியின் விலாஸம் நம்மைவிட ஜாஸ்தியா இவன்கிட்டே இருக்கே!'' என்று அஸூயைப்டுகிறாராம்!*

*அம்பாளுக்கே இரண்டு பக்கமும் லக்ஷ்மியும் ஸரஸ்வதியும் சாமரம் போடுவதாக ஸஹஸ்ரநாமத்தில் இருக்கிறது: ''ஸ சாமர ரமா வாணீ ஸவ்ய தக்ஷிண ஸேவிதா''. இவளுக்கு அவர்கள் சேடிகள் என்கிறபோது இவளுடைய உபாஸகனுக்கும் அவளுடைய விலாஸம் யதேஷ்டமாகக் கிடைப்பதில் ஆச்சர்யம் இல்லைதானே?*

*இதற்கு முன்னாடி, 'நீயே ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி எல்லாரும்; மூலத்தில் நீயே துரீய பரஹ்மத்தின் மஹிஷி' என்றபோது, ஸரஸ்வதி லக்ஷ்மிகளை வித்யா தேவதை, ஐச்வர்ய தேவதை என்று வைக்காமல் ஸ்ருஷ்டிகர்த்தாவின் சக்தி, ஸ்திதிகர்த்தாவின் சக்தி என்றே வைத்துச் சொன்னார். அவள் ஒரு க்ருத்யமும் இல்லாத நிஷ்க்ரிய ப்ரஹ்மத்திற்குள் அடங்கியிருந்த ஸர்வ சக்தி, அவள்தான் அத்தனை க்ருத்யத்திற்கும் மூலம் என்று காட்டினார். இங்கே ஸரஸ்வதியும் லக்ஷ்மியும் அவர்களாகவே எது எதற்கு தெய்வமோ அந்த வித்யைக்கும் ஐச்வர்யத்துக்கும் அம்பாள்தான் மூலம்; இவளை உபாஸிப்பதாலேயே அவையும் கிடைக்கின்றன என்று தெரிவிக்கிறார்.*

*அப்புறம், அம்பாள் இன்னம் எந்த தேவதைக்கு முக்யமாக யஜமானியாயிருக்கிறாள்? காமனுக்கு. இவள் பேரே காமேச்வரி, காமாக்ஷி, காமகோடி என்பதுதானே? அவனைத்தானே இவள் உயிர்ப்பத்து 'ரீயின்ஸ்டேட்' (அதிகாரத்தில்*

மீண்டும் நியமனம்) செய்தது? அவனும் இவளுடைய பக்தன். மூன்றாவதாக விரும்புகிற அழகைக் கொடுத்து அவனை 'மன்மதாகாரம்' என்னும்படியே ஆக்கி விடுகிறாள்! அம்பாளுக்கே ஸௌந்தர்யத்தை ப்ரதானமாகச் சொல்லும் ஸ்தோத்ரத்தில் உபாஸகனுக்கும் திவ்ய ஸௌந்தர்யம் கிடைப்பதாகச் சொல்கிறார். ஸரஸ்வதி லக்ஷ்மிகள் ஸ்த்ரீ தேவதைகள். அதனால் அவர்களுடைய பதிகளுக்கு அஸூயை ஏற்படுகிற அளவுக்கு தேவீ பக்தன் அறிவும் ஐச்வர்யமும் பெறுவதாகச் சொன்னார். புருஷ தேவதையான மன்மதனின் விலாஸம் பூர்ணமாக ஏற்படுவதைப் பற்றிச் சொல்லும்போது, மன்மத பத்னியான ரதி அந்த உபாஸகனைப் பார்த்து தன்னுடைய பதியேதானோ என்று நினைப்பதாகச் சொல்லியிருக்கிறார்.

நிறைந்த அறிவு, நிறைந்த ஐச்வர்யம், நிறைந்த ஸௌந்தர்யம் கிடைச்சாச்சு. இன்னும் ஏதாவது வேண்டுமா? ஜோஸ்யர் ஜாதகம் பார்த்துவிட்டு ஒருத்தனுக்குப் பலன் சொன்னாராம். ''எல்லாம் பேஷாயிருக்கு ஒண்ணே ஒண்ணு ! உன் பிள்ளைக்குக் கர்மத்துக்கு அதிகாரம் வந்துடுத்து'' என்றாராம்! அந்த ஒண்ணே பாக்கி எல்லாவற்றையும் அடித்துக்கொண்டு போய்விடுகிறதல்லவா? அம்பாள் பக்தனுக்கும் அப்படி ஆகிவிட்டால் என்ன ப்ரயோஜனம்? ஆவதில்லை என்கிறார். அவனுக்கு தீர்க்காயுஸும் கிடைக்கிறது. சிரஞ்ஜீவியாயிருக்கிறான் என்கிறார். ''சிரம் ஜீவந்நேவ''. அழகான நல்ல தேஹகாந்தியோடு ஒருத்தன் தீர்க்காயுஸாயிருக்கிறான் என்பதிலேயே அவனுக்கு நல்ல ஆரோக்யமும் அநுக்ரஹிக்கப்படுவதாக ஆகிவிடுகிறது. 'நோயற்ற வாழ்வை'த் தானே 'குறைவற்ற செல்வம்' என்பது? அதுவும் அம்பாள் பக்தனுக்கு கிடைப்பதாக ஆகிறது.

இன்னும் என்ன வேணுமென்றால், இனிமேல்தான் அம்பாளுபாஸனை தருகிற பர நலனை, தலையான பெரிய நலனைச் சொல்கிறார். அறிவு, ஐச்வர்யம், அழகு முதலியவற்றோடு தீர்க்க காலம் ஜீவிக்கிறபோது, தானாகவே ஒரு கட்டத்தில் அந்த அறிவு, 'இந்த அழகையும் ஐச்வர்யத்தையும் வைத்துக்கொண்டு என்ன ஸாதித்தோம்? நித்ய ஸுகத்திற்கு ஒன்றும் வழி பண்ணிக் கொண்டதாகத் தெரியவில்லையே! போதும் இதெல்லாம்! அதற்கு மார்க்கம் தேடிக் கொள்வோம். புது மார்க்கம் என்று எதற்கும் போகவேண்டாம். இவற்றுக்காக, இஹத்துக்காக இத்தனை காலமாகச் செய்து வந்த அம்பாளுபாஸனையையே இனிமேலே பரத்துக்காகச் செய்வோம். அவளிடம் அதையே வேண்டுவோம்' என்று நினைக்க ஆரம்பிக்கும் போது அம்பாள் தன்னுடைய பரமாநுக்ரஹத்தைப் பண்ணுவாள். அம்பாளை உபாஸிப்பதனால் இல்லாமல் பூர்வ கர்மாநுஸாரமாகவே ஒருத்தருக்கு அறிவு, பணம், அழகு, ஆரோக்யம் எல்லாம் வாய்க்கிற பக்ஷத்தில் எத்தனை வயஸானாலும்கூட ஆத்ம சிந்தனை வராமல், இதுகளோடேயே நின்றுவிடுவதாக இருக்கும். ரொம்பப் பேருக்கு அப்படித்தான் பார்க்கிறோம். ஆனால் பக்வ புஷ்டியில்லாத ஸ்டேஜில் அவளை உபாஸித்தே இவற்றைப் பெற்றவர்களுக்கு அப்புறம் அவை திகட்டிப்போய் பாரமார்த்திகத்தில் மனஸு திரும்புகிற பக்வம் வராமல் போகாது. அப்போது என்னவாகிறதென்றால்

**''சிரம் ஜீவந்நேவ க்ஷபித-பசு-பாச-வ்யதிகர:**
**பராநந்தாபிக்யம் ரஸயதி ரஸம் த்வத்-பஜநவாந் ॥**

*- 'உன்னை பஜிப்பவன், உன் உபாஸகன், சிரஞ்ஜீவியாக இருந்துகொண்டு, பசு-பாசங்களின் ஸம்பந்தம் விலகப் பெற்றவனாகி, ப்ரஹ்மானந்தம் என்று புகழ்பெற்ற ரஸத்தை ரஸிக்கிறான்'.*

*பசு-பாசம் என்னவென்றால்: ஒரு ஜீவன் மனஸடக்கமில்லாமல் இயற்கையும் இந்த்ரியமும் ஆட்டிவைக்கிற படியே போய்க் கொண்டிருக்கும் வரையில் ம்ருக ப்ராயமாகவே அவனைச் சொல்வது. அந்த நிலையைத்தான் 'பசு' என்பது. அப்போது கர்மா என்ற கயிறு ஜன்மா என்ற முளையோடு கட்டிப் போட்டிருக்கிறது. அந்தக் கயிறுதான் 'பாசம்' இவனுடைய ஆசை என்பதேதான் அப்படிப் பாசமாகி (ஆசாபாசம் என்கிறோமே, அப்படி) இவனை ஸம்ஸார சக்ரத்திலேயே சுற்றிச் சற்றி வரும்படிப் பண்ணுகிறது. ஞானம் என்கிற கத்தி அந்தக் கயிற்றைத்தான் துண்டித்து ஜீவாத்மப் பசுவை ஜன்மச் சுழலிலிருந்து விடுவித்து விட அருளுவது. அப்போது அவன் பசுவேயில்லை. பசுபதியான சிவமே ஆகிறான். ''பரானந்தம்'' - உயர்ந்த ஆனந்தம் - என்று ச்லோகம் சொல்கிற ப்ரஹ்மானந்த ரஸத்தை அத்வைதமாக அந்த ரஸமே ஆகி அநுபவிக்கிறான். அந்த அநுபவத்திற்கு முடிவேயில்லை. அது சாச்வதம்: நித்யஸுகம். ''சிரம் ஜீவன்'' - சிரஞ்ஜீவியாக என்றும் இருந்துகொண்டு அந்த ஆனந்த ரஸ ரூபமாக ப்ரகாசிக்கிறான். அதுதான் அத்வைத மோக்ஷானந்தம் பரானந்த ரஸத்தை அந்த பக்தன் குடிக்கிறான் (''பிபதி'') என்றோ, ருசிக்கிறான் (''ஆஸ்வாதயதி'') என்றோ போடவில்லை. அப்படிப் போட்டால் அந்த ஆனந்தம் வேறே, அதை அநுபவிக்கிறவன் வேறே என்றாகிறது. ''ரஸம் ரஸயதி'' என்று ஆசார்யாள், 'ரஸம்' என்ற பதத்தையே அதை அநுபவத்திலும் திருப்புவதால் அநுபவிக்கிறவனும் அதோடு அத்வைதமாகிவிடுகிறான் என்று காட்டியிருக்கிறார்.*

*'ஆகிவிடுகிறான்' என்றால் அவனாகவே அப்படி ஆகிவிடுவானா என்ன? அவள்தான் ஆக்குகிறாள்! உபாஸனா பலனாக இப்படி ஆகிறான் என்றால் உபாஸ்ய தெய்வம் அப்படி ஆக்குகிறது என்றே அர்த்தம். அத்வைதத்திலிருந்து த்வைதமாக இவனை எவள் இவல்யூஷனில் வெளியிலே விட்டாளோ அவளே தான் இன்வல்யூஷனில் இவனை உள்ளே இழுத்துக்கொண்டும் அத்வைதமாக்க முடியும். அவளே கதி என்று உபாஸிக்கிறவனை, பஜிக்கிற பஜனவானை அப்படிப் பண்ணுகிறாள் என்கிறார்.*

*ஆனாலும் அத்வைத ஆசார்யாள் இங்கேயும் தம்முடைய ஸமய ஸமரஸத்தில் 'பசு', 'பாசம்' என்று பிற்காலத்தில் சைவ ஸித்தாந்தத்தில் பெரிசாக டெவலப் ஆன தத்வங்களின் பெயரையே குறிப்பிட்டிருக்கிறார். சக்தி மஹிமையை ஓஹோ என்று சிவனுக்கு மேலே சொல்லிக் கொண்டே போனவர் கடைசியில் அவளை சிவனுக்கு அடங்கிய பத்னியாகவே கொண்டுவந்ததற்கேற்க, சாக்த தத்வங்களை நிறையச் சொல்லிக் கொண்டு வந்தவர் முடிக்கும்போது சைவ ஸமயத் தத்வங்களில் இரண்டைச் சொல்லியிருக்கிறார்.*

*ஒன்று தோன்றுகிறது. மஹா சக்தியான பராசக்தியை ஏன் அவளுடைய ஸ்தோத்ரத்தின் முடிவில் சிவனுடைய தர்ம பத்னி என்றே வைத்துக் கொஞ்சம் அடக்கிச் சொல்லணும்? ஒரு காரணம் சொன்னேன், லோகத்திற்கான ஸ்த்ரீ தர்மத்தைக்*

*காட்டித்தான் முடிக்கணும் என்பதால், என்று. இன்னொன்று என்ன தோன்றுகிறது என்றால்: ஆசார்யாள் விநய ஸ்வரூபம், விநய ஸ்வரூபம் என்று திரும்பத் திரும்பச் சொல்லிவந்திருக்கிறேனல்லவா? அதனாலே அவருக்கு இஷ்ட தெய்வமான அம்பிகையையும் முடிவாக விநய மூர்த்தியாகவே காட்டவேண்டும் என்று தோன்றியிருக்கலாம்! இன்னொரு தினுஸில் சொன்னால்: அம்பாளேதானே அவராகி, அவரைப் பாடப் பண்ணினதும்? அவளுக்கு முடிவிலே தன்னைப் பதியான பரமேச்வரனுக்கும் ஆத்மார்ப்பணம் பண்ணி விநயத்தோடு அடங்கியிருக்கிற ஸதியாகக் காட்டினால்தான் த்ருப்தியாயிருந்திருக்கும்! அதனால் இப்படிப் பாடச் செய்திருப்பாள்!*

## கர்ப்பூர ஆரத்தி

*பரம மங்களமான ஸ்தோத்ரத்தின் பூர்த்தி ஸ்தானத்திற்கு வந்துவிட்டோம். லஹரி-ப்ரவாஹம் என்றால் அது ஒரு ஸமுத்ரத்தில் போய் ஸங்கமித்துப் பூர்த்தியாகத்தானே வேண்டும்? அப்படி இந்த வாக் லஹரியானது சப்த ப்ரஹ்ம ரூபிணியான ஸமுத்ரத்தில் ஸங்கமிப்பதாகப் பூர்த்தி பண்ணியிருக்கிறார். 'ஜல நிதி' என்று ஸமுத்ரத்தைச் சொல்வது தெரிந்திருக்கலாம். 'ஸலிலம்' என்றாலும் ஜலந்தான். ''ஸலில நிதி'' என்றே ஆசார்யாளும் நூறாவது ச்லோகத்தில் சொல்லி, சதமாக முடித்திருக்கிறார்.*

**ப்ரதீப-ஜ்வாலாபிர்-திவஸகர-நீராஜந-விதி:**
**ஸுதாஸூதேச்-சந்த்ரோபல-ஜல-லவை-ரர்க்ய ரசநா ।**
**ஸ்வகீயை-ரம்போபி: ஸலிலநிதி-ஸௌஹித்ய-கரணம்**
**த்வதீயாபிர்-வாக்பிஸ்-தவ ஜநநி வாசாம் ஸ்துதிரியம் ॥ 100**

*(வாசாம் ஜனனி) வாக்குக்குப் பிறப்பிடமான தாயே! (திவஸகர) பகலைப் பிறப்பிப்பவனான ஸூர்யனுக்கு (ப்ரதீப-ஜ்வாலாபி:) விளக்கின் ஒளியால் (நீராஜந விதி:) தீபாராதனை உபசாரம் செய்வது போலவும், (ஸுதா ஸூதே:) அமுதைப் பிறப்பிக்கும் சந்திரனுக்கு (சந்த்ரோபல) சந்திரகாந்தக் கல்லின் (ஜல லவை:) நீர்த்துளிகளால் (அர்க்ய ரசநா) அர்க்ய உபசாரம் செய்வது போலவும், (ஸ்வகீயை:) அதனுடையதேயான (அம்போபி:) நீரால் (ஸலில நிதி) கடலுக்கு (ஸௌஹித்யகரணம்) தர்ப்பண உபசாரம் செய்வது போலவும் (த்வதீயாபி:) உன்னுடையதேயான (வாக்பி:) வாக்குகளாலேயே ஆன (இயம்) இந்த (தவ) உனது (ஸ்துதி:) துதி (உள்ளது)*

*'மற்றக் கவிகளுக்கு வித்யாஸமாக ஒன்றைச் செய்து காட்டுவதில் ஆசார்யாள் நிபுணராச்சே! மற்றவர்கள் முடிவாகச் சொல்லும் பலச்ருதியில் அவர் என்ன விநோதம் பண்ணியிருப்பார்? மற்ற ஸ்தோத்ரகர்த்தாக்கள் ஸ்தோத்ர தேவதைகளுக்கு அடிமையிலும் அடிமையாயிருக்கிற பக்தர்கள் தானென்றால் இவரோ அந்த தேவதையும், அவளும் ஆச்ரயித்திருக்கிற ஈச்வரனும் ஒன்று சேர்த்த அவதாரமாச்சே! மற்றவர்களே தங்களுடைய ஸ்தோத்ரங்களுக்குப் பெரிசாகப் பலன்கள் சொல்லும்போது, இவர் இன்னும் எத்தனை உசத்தியாகச் சொல்லியிருப்பார்?' என்று நினைத்து நாம் கடைசி ச்லோகத்தைப் பார்த்தால்-*

*மற்ற எல்லாக் கவிகளை, ஸ்தோத்ர கர்த்தாக்களையும் விட ஒரே எளிமையாக, நாம் ஒன்றுமேயில்லை என்று ஆசார்யாள் தம்மைத் தெரிவித்துக்கொள்கிறார்! ''ஏதோ நானும் ஸ்தோத்ரம் என்று ஒண்ணைப் பண்ணினால் இதுக்குப்போய்ப் பலனாவது, ச்ருதியாவது? அதெல்லாம் ஒண்ணும் சொல்ல எனக்கு லாயக்கில்லை. அவளை உபாஸிக்கிற பஜனவானுக்கு அவள் தருகிற பலன்களைச் சொன்னேனல்லவா? அது போறும். அதோட நிறுத்திக்கறேன். கடைசியா இப்ப என்ன பண்ணப் போறேன்னா லோகத்திலே ஒசத்தியோ, தாழ்த்தியோ எது எங்கே யாராலே நடந்தாலும் அடியாதாரத்திலே அதெல்லாமும் அவ கொடுக்கற சக்தியிலே, அவளுடைய ஸங்கல்பத்துலே நடக்கறதுதான். எல்லாமே ஒசத்தியா இருந்தா அவளோட லீலா வைசித்ரியத்துக்கு (விளையாடலின் விதவித ருசிக்கு)ப் போறல்லே-ங்கறதுக்காகத் தாழ்த்தியாயும் அநேகம் தூண்டிவிட்டுப் பண்ண வெச்சு, அதனாலேயே ஒசந்ததுகளை இன்னம் எடுப்பாகத் தூக்கி வெச்சுக் காட்டறா. அப்படி இது ஏதோ காமா சோமான்னு அவ தூண்டி வெச்சு வரப்பண்ணின ஸ்தோத்ரம். தரம் எப்படியிருந்தாலும் ஸகலத்துக்கும் பிறப்பிடம் அவள் தான்-ங்கிறதுனாலே இதுக்கும் அவ தாய், 'வாக்குக்கெல்லாம் அவ பிறப்பிடம்: இது வாக்கலான ஒரு ஸமாசாரம்'னா இதுக்கும் அவ தாய். அவளுக்கு இது கொழந்தைதானே? இந்தக் கொழந்தையை அவகாலிலேயே போட்டு ஸமர்ப்பணம் பண்ணித்தான் முடிக்கப் போறேன்'' என்கிற ரீதியிலே நினைத்து நூறாம் ச்லோகத்தைச் செய்திருக்கிறார். முன்னே ''ஜபோ ஜல்ப:'' ச்லோகத்திலே (ச்லோ-27) அம்பாளுக்கு ஆத்ம ஸமர்ப்பணம் செய்தவர் இங்கே முடிவாக ஸ்தோத்ரத்தையும் ஸமர்ப்பணம் பண்ணியிருக்கிறார்.*

*இது அம்பாளுக்கு ஸமர்ப்பிக்க யோக்யதை வாய்ந்தது என்ற அளவுக்குக்கூட அவருக்கு அஹம்பாவ எண்ணம் இல்லை. இதைப்போய் ஒரு பெரிய விஷயமாக அந்த மஹா பராசக்திக்கு ஸமர்ப்பணம் பண்ணுவது அசட்டுத்தனம் என்றே நினைத்திருக்கிறார். ஆனாலும் ஏற்கெனவே அவர் லோகத்தில் இப்படிப்பட்ட மூன்று அசட்டுத்தனங்களைப் பார்த்திருந்த தைர்யத்தில்தான் இப்படிப் பண்ணுகிறார். அந்த மூன்று* precedent *(முன்னோடிகள்) என்ன?*

*முதலில்: ''ப்ரதீப ஜ்வாலாபி: திவஸகர நீராஜன விதி:'' - 'கர்ப்பூர தீபம் ஏற்றி ஸூர்யனுக்கு நீராஜனம் என்று. பொழுதை உண்டாக்குவதால் ஸூர்யன் 'திவஸகரன்'. 'திவாகரன்' என்றும் சொல்வது.*

*ஸங்க்ராந்தி பூஜை ஆசார்யாள் நிறையப் பார்த்திருக்கிறார். அவரே பண்ணியும் இருப்பார். அதிலே ஒரு கோலத்திலே ஸூர்ய பிம்பம் எழுதி அதற்கே பூஜை பண்ணினாலும் கர்ப்பூராரத்தி மட்டும் ஆகாசத்திலே ப்ரத்யக்ஷமாகத் தெரிகிற ஸூர்யனுக்கும் காட்டுவது வழக்கம்.*

*மற்ற மூர்த்திகளை, அதுவும் இருட்டாக கர்ப்ப க்ருஹத்திலிருக்கிற மூர்த்திகளை கர்ப்பூராரத்தி வெளிச்சம் போட்டுப் காட்டும். ஆனால் ஸூர்யனை?*

*ஸ்வயஞ்-ஜ்யோதிஸாக ப்ரகாசத்தோடு இருக்கிற அதை இந்த இத்தனூன்டு கர்ப்பூர வில்லை வெளிச்சம் போட்டுக் காட்டணுமா என்ன? அதை இது ப்ரகாசிப்பிப்பதில்லை என்பது மாத்திரமில்லை; அந்த ஸூர்யனின் ப்ரகாசத்தில் இதற்கு ஸ்வயமாக உள்ள ப்ரகாசம் மங்கிப்போய் அழுது வடிகிறது! ''வாக்சக்தியின் பூர்ண ஜ்யோதிஸான அம்பாள் முன்னே கர்ப்பூர வில்லை அளவேயுள்ள நம்முடைய ஸ்தோத்ர வாக்கை ஸமர்ப்பிப்பதில் அவளை ஒன்றும் ஸ்தோத்ரம் ப்ரகாசமாக விளக்கிவிடவில்லை; ஸ்வபாவமாக இந்த வாக்குக்கு உள்ள விளக்க சக்தி கூடக் கூசிக் குறுகி மங்கிப் போய்விட்டது!'' என்று ஆசார்யாள் நினைக்கிறார். அப்படியிருந்தும் சிஷ்டர்களே முதற்கொண்டு ஸங்க்ராந்தி பூஜையில் ஸூர்ய பகவானுக்குக் கர்ப்பூரம் காட்டுவதைப் பார்த்து தஹித்தெடுக்கிற ஸூர்யனே அதை ஏற்றுக் கொள்ளும்போது, குளிர்ந்த மனஸு படைத்த அம்பாளும் கருணையோடு இதை ஏற்றுக்கொள்வாள் என்பதால் ஸ்தோத்ர ஸமர்ப்பணம் செய்கிறார்!*

*எப்போதும் உஷ்ணமான ஸூர்யனைச் சொன்னால் உடனே சீதள சந்த்ரனைச் சொல்வது ஆசார்யாள் வழக்கம் அப்படியொரு குளிர்ந்த நெஞ்சு! இங்கேயும் இரண்டாவது* precedent *சந்த்ரனை வைத்துச் சொல்கிறார். யாரோ பெரியவர் அம்பாளுக்குப் பௌர்ணமி பூஜை பண்ணுவதை அவர் பார்த்தார். அப்போது பரிவார பூஜையிலே அம்பாளின் வாஸ ஸ்தானமாக பாவிக்க வேண்டிய பூர்ணிமை சந்த்ரனுக்கும் அந்தப் பெரியவர் பூஜை பண்ணினார். ஒரு பூஜை என்றால் அதில் தீர்த்தத்தைக் கொண்டு மூன்று உபசாரங்கள் உண்டு. முதலில் 'பாத்யம்' என்ற பாதத்தை அலம்புவது; அப்புறம் 'அர்க்யம்' என்று ஹஸ்தத்தில் தீர்த்தம் விடுவது; மூன்றாவதாக 'ஆசமநீயம்' என்று முகத்திலே கொடுப்பது. 'அர்க்யம்' என்றால் 'மதிப்புமிக்கது' என்று அர்த்தம். அதனால் அந்த உபசாரத்திற்கு விசேஷம் அதிகம். அந்தப் பெரியவர் அர்க்யத்திற்கு என்ன பண்ணினாரென்றால், அவர் பக்கத்திலே ஒரு சந்திரகாந்தக்கல் இருந்தது..*

*சந்த்ரகாந்தம், ஸூர்யகாந்தம் என்று இரண்டு கல்லு பழைய புஸ்தகங்களில் சொல்லியிருக்கிறது. அந்த நாளில் இருந்து இப்போது இல்லாமல் போய்விட்டவை என்று வைத்துக்கொள்ளலாம். ஸூர்யகாந்தம் ஸூர்யரச்மிகளைக் காந்தம் மாதிரி ஆகர்ஷித்து இழுத்து வைத்துக்கொண்டு நெருப்பாகக் கக்கும். லென்ஸில் ஸன்லைட்டை கான்ஸென்ட்ரேட் பண்ணினால் பொறி வரவில்லையா? அதையே இன்னும் தீவிரமாகப் பண்ணுவது ஸூர்ய காந்தம். சந்த்ரகாந்தம் இதற்கு நேர்மாறு. சந்த்ரிகையைத் தனக்குள்ளே ஆகர்ஷித்து ஜில்லென்று ஜலமாக வடிக்கும்.*

*அப்படி ஒரு சந்த்ரகாந்தக் கல் அந்தப் பௌர்ணமி சந்த்ர கிரணங்களை உள்ளே வாங்கிக்கொண்டு ஜலம் வடிப்பதைப் பெரியவர் பார்த்தார். உடனே அந்த ஜலத்தையே எடுத்து சந்த்ரனுக்கு ''அர்க்யம் ஸமர்பயாமி'' என்று கொடுத்துவிட்டார்: ஸுதாஸூதேச்-சந்த்ரோபல ஜலலவை: அர்க்ய ரசநா'' என்று இதைத்தான் ஆசார்யாள் சொல்கிறார். 'சந்த்ர உபலம்' ஸந்தியில் 'சந்த்ரோபலம்' ஆகிறது. 'உபலம்' என்றால் கல்.*

*சந்த்ரகாந்தத்தைத்தான் அப்படிச் சொல்கிறார். அம்ருதத்தை உண்டாக்குவதால் சந்த்ரனுக்கு 'ஸுதாஸுதி' என்று பேர்.*

*ஸூர்யனுக்கு கர்ப்புரம் காட்டுவதைவிடவும் இப்படி சந்த்ரனுக்கு சந்த்ரரோபல ஜலத்தால் அர்க்யம் தருவதை அசட்டுத்தனமாகச் சொல்லலாம். ஸூர்யன் இல்லாவிட்டால் கர்ப்பூரம் என்றே ஒன்றில்லை என்று சொல்ல முடியாது. நாலு நாள் வெயிலடிக்காவிட்டால் கர்ப்பூரம் பிடித்துக்கொள்ளாது என்ற அளவுக்குத்தான் அந்த இரண்டுக்கும் ஸம்பந்தம். ஆனால் சந்த்ர காந்த ஜலமோ சந்த்ரன் இல்லாமல் உண்டாகவே முடியாது. அந்த ரச்மி இந்தக் கல்லுக்குள்ளே போய்தான் அப்படி ஜலமாக வடிகிறது. — ஸூர்யன் மஹா ஜ்யோதிஸ், கர்ப்பூரம் சின்னூண்டு சுடர் என்கிற மாதிரியே அம்பாள் வாங்மயீ, இந்த ஸ்தோத்ரமோ ஏதோ கொஞ்சம் வார்த்தைகள்தான் என்று முதல் உபமானம். இந்த இரண்டாம் உபமானத்தில் அந்த அம்பாளுடைய க்ருபை என்ற பூர்ண சந்த்ரனின் கிரணத்தில் ஏதோ சிலது சந்த்ரோபலம் மாதிரிக் கல்லாயிருக்கிற தன்னுடைய மனஸுக்குள்ளேயும் புகுந்துதான் கவிதா தீர்த்தத்தை பெருகப் பண்ணியிருக்கிறது என்கிறார். எது இல்லாவிட்டால் இது உண்டாகியே இருக்காதோ அந்தத் தாய்ச் சரக்குக்கே இதனால் உபசாரம் என்றால்? ரொம்பவும் அசட்டுத்தனந்தானே? ஆனாலும் ஆசார்யாள் ஒரு பெரியவரே சந்த்ரோபல ஜலத்தால் சந்த்ரனுக்கு அர்க்யம் கொடுத்ததைப் பார்த்ததால்தான் தாமும் இப்படிப்பண்ணலாமென்று தைர்யம் பெற்றிருக்கிறார். அவரே சொல்கிறதற்கு உள்ளார்த்தம் அதுதான்!*

*தமக்கு தைர்யம் கொடுத்த மூன்றாவது த்ருஷ்டாந்தத்தை அப்புறம் சொல்கிறார். என்ன அது? ஆசார்யாள் ஆஸேது ஹிமாசலம் தேசத்தைச் சுற்றினவரல்லவா? ஸேதுவுக்கு - அதுதான் ராமேச்வரம் - போனார். அங்கே ஸமுத்ர ஸ்நானம் விசேஷம். மற்ற இடங்களில் சில புண்யகாலங்களில் மாத்திரந்தான் ஸமுத்ர ஸ்நானம் பண்ணலாம். ராமேச்வரத்திலோ ஸமுத்ரமே புண்ய தீர்த்தமானதால் எல்லா நாளிலுமே அதில் ஸ்நானம் செய்யலாம். 'செய்யலாம்'' என்று ஆப்ஷனல் மட்டுமில்லை. 'செய்தே ஆகணும்' என்று ஆப்ளிகேடரி! அப்படி, தேசம் பூராவிலிருந்தும் வந்த யாத்ரிகர்கள் அங்கே ஸ்நானம் பண்ணுவதை ஆசார்யாள் பார்த்தார். அவரும் அப்படிப் பண்ணினவர்தான். ஸ்நானம் மாத்ரமில்லாமல் அங்கே ஸமுத்ர ராஜனான வருணனுக்குப் பூஜையும் எல்லாரும் பண்ணுகிறதைப் பார்த்தார். அவருங்கூடப் பண்ணினார். பூஜை என்றால் அதில் அங்கமாக ஸ்நானோபசாரமும் வரத்தானே செய்யும்? அத்தனாம் பெரிய ஸமுத்ரத்திற்கு எப்படி ஸ்நானம் பண்ணுவித்தார்கள்? அதுதான் ரொம்ப வேடிக்கை! ரொம்ப ரொம்ப அசட்டுத்தனமென்றும் சொல்லலாம். அந்த மஹோததியிலிருந்தே அதன் ஜலத்தையே துளிப்போற எடுத்து, ''ஆபோ ஹி ஷ்டா மயோ புவ:'' என்று அதன் மேலே தெளித்தார்கள். இதுதான் ஸ்நானமாம்! ''இத்தனை கோடி பேர் இத்தனை காலமாக இது க்ரமமான பூஜை என்று பண்ணியிருக்கிறார்களென்றால், தாம் ஏன் அம்பாள் என்கிற வாக் ஸாகரத்திலிருந்தே எடுத்த சில தூளி வாக்கைக் கொண்டு அவளை ஸ்தோத்ரிக்கப்படாதாம்?'' என்று ஆசார்யாளுக்கு ஸமாதானம் கிடைத்துவிட்டது!*

*அதைத்தான் மூன்றாம் வரியில் சொல்லியிருக்கிறார்: ''ஸ்வகீயை: அம்போபி: ஸலிலநிதி ஸௌஹித்ய கரணம்'' - 'ஸலிலநிதி'யான ஸமுத்ரத்திற்கே ஸொந்தமான ஜலம். ''ஸ்வகீயை: அம்போபி:'' அதற்கே ஸொந்தமான ஜலத்தால், ''ஸௌஹித்ய கரணம்'' - ஸ்நானம் பண்ணுவிக்கிற கார்யம்.*

*'ஸௌஹித்யம்' என்றால் பொதுவாகச் சொல்கிற அர்த்தம் 'தர்ப்பணம்' என்பதுதான்; ஸ்நானமில்லை. 'அமர'த்திலேயே ''ஸௌஹித்யம் தர்ப்பணம் த்ருப்தி:'' என்று இருக்கிறது. அதனால் ''ஸமுத்ர ஜலத்தையே எடுத்து அதற்கே தர்ப்பணம் பண்ணுகிற மாதிரி'' என்றே அர்த்தம் சொல்வது வழக்கம். நான்தான் ''தர்ப்பணம் என்பது யாருக்கானாலும் ஒரு உத்தரிணி பண்ணினாலே போதுமே! ரிக்வேதிகளின் ப்ரஹ்ம யஜ்ஞத்தில் ஒரு ஸமுத்ரம் மட்டுமில்லை, அத்தனை ஸமுத்ரங்களுக்குமே சேர்த்து ''ஸமுத்ரஸ்-த்ருப்யது'' என்று ஒரே உத்தரிணிதான் தர்ப்பணம்! ஆனபடியால், தர்ப்பணமானாலும் அதன் ஸொந்த ஜலத்தையே எடுத்து அதற்குப் பண்ணுவது அசட்டுத்தனந்தான் என்றாலும், இன்னம் படு அசடாக அத்தனாம் பெரிய ஸமுத்ரத்திற்கு இத்தனூண்டு ஜலத்தாலே ஸ்நானம் பண்ணிவைப்பது என்று இருக்கட்டும்'' என்பதால் ''ஸ்நானம்'' என்று சொன்னேன்.*

*'ஸௌஹித்யம்' என்றால் நேர் அர்த்தம் ரொம்பவும் ஹிதத்தைப் பண்ணுவது. உஷ்ண தேசமான நம் ஊரில் குளிர ஸ்நானம் பண்ணுவிப்பதும் 'ஸௌஹித்யம்' தானே? 'தர்ப்பணம்' என்றாலும் 'த்ருப்தி' செய்வதுதான். த்ருப்திக்காக ஸ்நானம் செய்வித்ததாகத்தான் இருக்கட்டுமே! எத்தனைக்கெத்தனை பக்தி ஜாஸ்தியோ அத்தனைக்கத்தனை அசட்டுத்தனம் பண்ணணும்; புத்திமான்கள் என்ன பரிஹாஸம் பண்ணி 'தூ' என்றாலும், அந்த புத்தியையே 'தூ' என்று தூக்கி போட்டுவிட்டு முழு அசடாக, முட்டாளாக இருக்க இருக்கத்தான் நிஜ பக்தி என்று அர்த்தம் என்பதால் மாற்றிச் சொன்னேன்.*

*ஸூர்யனும் கர்ப்பூரமும் முழுக்க வேறே வஸ்துக்கள் சந்த்ரோபல ஜலம் சந்த்ரனிலிருந்து முழுக்க வேறே இல்லை. சந்திர கிரணம் அந்தக் கல்லுக்குள்ளே போய்த்தான் அது உண்டானது. ஆனாலும் அந்தக் கல்லு சந்த்ரனுக்கு வேறேதானே? அப்படியொரு மீடியம் தேவைப்படுகிறது. ஆனால் ஸமுத்ரத்திற்கு ஸ்நானமோ, தர்ப்பணமோ பண்ணுகிற ஜலம் அஸலே அந்த ஸமுத்ர ஜலந்தான்! வேறே மீடியத்தின் வழியாகக்கூட வராமல் ஸாக்ஷாத் அதிலிருந்தே எடுத்துத்தான் அதற்கே ஸ்நானம், தர்ப்பணம் பண்ணுவது.*

*இங்கே ஆசார்யாள் தம்முடைய கல் மனஸிலிருந்து அம்பாள் கவிதையைப் பிறப்பித்ததாகச் சொன்னதற்கு மேலே, தாம் என்கிற ஒன்றே இல்லை என்று சரணாகதியில் தம்மை இல்லாமலே ஆக்கிக்கொண்டு, தாம் செய்த ஸ்தோத்ரமென்பது உண்மையில் வாக் ஸமுத்ரமான அவளிடமிருந்தே எடுத்த அவருடைய ஸாக்ஷாத் வாக்கிலே சிறிதளவே என்கிறார். ச்லோகத்தை ஆழ்ந்து ஆழ்ந்து பார்க்க அதற்குள்ளேயே*

*ஸமுத்ரமாக இன்னும் இப்படி அநேக அர்த்தங்கள், தத்வங்கள், அலங்காரங்கள் முத்தும் பவளமுமாகக் கிடைக்கும்.*

*''அசட்டுத்தனமோ, கெட்டிக்காரத்தனமோ எதுவானாலும் அதுவும் உன்னைத்தவிர வேறே இல்லையே ''த்வயி பரிணதாயாம் ந ஹி பரம்'' என்று (ச்லோ-35ல்) சொன்னபடி உன்னுடைய பரிணாமமாயில்லாமல் எதுவாவது ஒன்று உண்டா என்ன? நான் அசடாகவே இருந்தாலும் உனக்கு வேறாகத் தானாக உண்டான ஸ்வயம்பு அசடு இல்லையே! நீயேதானே நான் ஆனதும்? உன்னை விட்டு 'நான்' என்று நினைக்கவே ஆளில்லையே? அப்போது இந்த வாக்கு மட்டும் என்னவாம்?*

*''அசட்டுத்தனம் என்று பார்க்காமல் ஸூர்ய பகவான் கர்ப்பூர நீராஜனத்தை அங்கீகரிக்கிற மாதிரி, சந்த்ரமஸ் சந்த்ரகாந்த ஜல அர்க்யத்தை அங்கீகரிக்கிற மாதிரி, வருண பகவான் அவருடைய ஜலத்தையே ஸௌஹித்யமாக அங்கீகரிக்கிற மாதிரி, அவர்களுக்கெல்லாம் அப்படி அங்கீகரிக்கிற அருள் குணத்தையும் பெருந்தன்மையையும் கொடுத்தவளான நீயும் இந்த ஸ்தோத்ரம் என்ற நீராஜனம் அர்க்யம், ஸ்நானம்-தர்ப்பணம் எல்லாமாயிருக்கிற வாக்பூஜையை அஙகீகரிக்கணும்'' என்று ஆசார்யாள் ஸமர்ப்பணம் பண்ணுகிறார்.*

*''த்வதீயாபி: வாக்பி: தவ ஜநநி வாசாம் ஸ்துதிரியம்'' - 'வாசாம் ஜனனி!' என்று அத்தனை பேச்சுக்கும், பாஷைக்கும் ஜன்ம ஸ்தானமான தாயைக் கூப்பிட்டு ''உனக்கே ஸொந்தமான வாக்கினால் உனக்கு ஏற்பட்ட ஸ்துதி இது. நான் ஒன்றுமே பண்ணவில்லை. உன்னுடையதே இது'' என்று சரணாகத பராகாஷ்டையில் பூர்த்தி பண்ணியிருக்கிறார்! பண்டித-பாமரர்கள் எல்லோரையும் ஆகர்ஷிக்கிற அம்ருத ஸௌந்தர்யமான இந்த ஸௌந்தர்யலஹரியின் கர்த்தா என்று கொஞ்சமும் உரிமை பாராட்டி கொள்ளாமல் பரம விநயமாக அம்பாளிடம் அர்ப்பணம் பண்ணியிருக்கிறார். அவருடைய விநயம் நமக்குப் புரியாதாகையால் 'அர்ப்பணம்' என்கிறோம். 'அது (அர்ப்பணம்) பண்ணக்கூடத் தாம் யார்? அவளுடையதேயே அவளுக்கு என்று சொல்வதற்கு 'அர்ப்பணம்' என்றே பெரிய வார்த்தையைச் சொல்லவாவது?' என்றுதான் அவர் நினைப்பார்! ச்லோகத்திலும் அவர் 'அர்ப்பணம்', 'ஸமர்ப்ணம்' என்றெல்லாம் ஒரு வார்த்தையும் போடவில்லை. ஆனால் தம்மையே அவர் அம்பாளுக்கு அர்ப்பணம் பண்ணிக் கொண்டிருப்பது மட்டும் அதில் நன்றாகத் தெரிகிறது.*

*ஞானத்தில் போனால் பூர்த்தி ஸ்தானம் 'தானே பரமாத்மா' என்று தெரிந்து கொள்கிறது. பக்தியில் போனால் பூர்த்தி ஸ்தானம் 'தானே இல்லை' என்று சரணாகதியில் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணி அழித்துக் கொண்டுவிடுவது. இப்படி ஜீவாத்மாவாக ஒருவன் இல்லாமலாக்கிக் கொண்டவுடன்,* vacuum *-ல் (வெற்றிடத்தில்) காற்று வந்து ரொப்பி விடுகிறாற் போல, பரமாத்மாவே அங்கே ரொம்பிக் கொண்டு நிறைந்து ஞானத்தில் ஏற்பட்ட அதே ப்ரஹ்மானந்தம் இங்கேயும் ஏற்படுகிறது. ஸௌந்தர்யலஹரி பக்தி ஸ்துதி. ஆகையால் பக்திக்கான ஆத்ம ஸமர்ப்பண வழியிலே அத்வைத*

*ஸாக்ஷாத்காரத்தைக் காட்டி முடித்திருக்கிறார்.*

*எல்லாவற்றிலும் பெரியவராயிருந்த ஆசார்யாள் அந்த எல்லாவற்றையுமே தமதில்லை என்று ஆக்கிக் கொள்கிற த்யாகத்திலேயும் விநயத்திலேயுங்கூடப் பெரியவராக இருந்திருக்கிறார்! ''வித்யா விநய ஸம்பன்ன'' என்றபடி வித்யையின் பரிபூர்ண மூர்த்தியாயும் விநயத்தின் பரிபூர்ண மூர்த்தியாயும் ஒருத்தரே இருந்தாரென்றால் அது நம் ஆசார்யாள்தான்.*

*நாம் அவருடைய நிஜ சிஷ்யாளானால் இந்தப் பாடத்தைத்தான் கற்றுக்கொள்ளணும். அத்வைத பாடம் நமக்கு ஏறுமோ, ஏறாதோ? இந்த அடக்கப் பாடத்தை ஏற்றிக்கணும். ஏதோவொன்றில் கொஞ்சம் ஸாமர்த்யம் இருந்துவிட்டால்கூட நமக்குத் தலை கனத்துப் போகிறது! ஒரு ஸாமர்த்யமும் இல்லாவிட்டாலுங்கூட அஹம்பாவத்தில் ஸமர்த்தர்களாயிருக்கிறோம்! 'இப்படி நினைப்பதற்கு என்ன ந்யாயம்? என்ன யோக்யதை?' என்று துளி நினைத்தாலும் அவள் போடுகிற பிச்சைதவிர ஒன்றுமில்லை என்று அந்தத் தலை அவள் சரணத்திலே சாய்ந்து லேசாகும். அதிலே உள்ள ஆனந்தம் எந்தப் புகழிலும் பொன்னாடையிலும், டைட்டிலிலும் இல்லை என்று தெரியும். அவள் கொடுக்காமல் வாக்கு இல்லை என்று இங்கே ஆசார்யாள் சொன்னது மற்ற எல்லாவற்றுக்குமே பொருத்தும். அவள் கொடுக்காட்டால் எந்த சக்தியுமே இல்லை. வாக்கு மட்டுமில்லை; மூச்சுகூட அவள் கொடுக்காமல் இல்லை. நாமாக மூச்சு இழுக்கிறோம் என்றால் சாகவே மாட்டோமே! இப்படி உயிரே நம்முடையதில்லை என்கிறபோது என்ன கவலை, பயம் இருக்கமுடியும்? இப்போது படுகிற கவலையெல்லாம், பயமெல்லாம் சுற்றிச் சுற்றி இந்த உயிரை ரக்ஷித்துக் கொள்வதற்குத்தானே? இதை அவள் ஸமாசாரம் என்று தள்ளி விட்டோமானால் அப்புறம் எத்தனை விச்ராந்தி?*

*இப்படிப் பராசக்திக்கு அடங்கி இருக்க ஆரம்பித்தால் முடிவிலே அவளுக்குள்ளேயே அத்வைதமாக அடங்கி விடுவோம். அந்த அடக்கப் பாடத்தை இந்தக் கடைசி ச்லோகம் கற்பிக்கிறபோது ஸகல வித்யைகளுக்கும் ஸாரமான ப்ரஹ்ம வித்யை இருக்கிறதே, அதற்கும் ஸாரமான அத்வைத அநுபவத்திற்கே வழி பண்ணிவிடுகிறது. இதுதான் ஆசார்யாள் சொல்லாத பலச்ருதி: பலனே வேண்டாத பெரிய பலன்! கர்த்தா என்று ஒரு 'நான்' இருந்தால்தானே கார்யத்திற்குப் பலன் கேட்பது? அவனே அடங்கி, அட... ங்கி இல்லாமல் போய் விட்டால்?*

*அடங்க வழி என்ன? அவளை நினைப்பதுதான். அகண்ட பராசக்தி எப்படி இருப்பாளென்றே நமக்குப் புலப்படாததால் நினைக்க முடியாதுதான். இங்கேயோ புரிந்துகொள்கிற விதத்தில் ஆசார்யாள் பராசக்தியை ஸௌந்தர்ய ரூபத்தில் பிடித்துக் கொடுத்திருக்கிறார். தம்முடைய வாக்காலேயே கேசாதி பாதம் அங்க அங்கமாகப் பராசக்தியை அழகு ரூபம் பண்ணி, அழகுக்கு அழகு சேர்ப்பதாக அவளுடைய சிரஸில் ''கிரீடம் தேஹைமம்'' என்று ஸ்வர்ண மகுடத்திலிருந்து, கழுத்துக்கு புஜத்துக்கு,*

மணிக்கட்டுக்கு, இடுப்புக்கு, சரணங்களுக்கு என்பதாக, - அந்த சரணத்தின் அடியில் இட்டிருக்கிற அரக்கு நலங்குவரை வாக்கால் அலங்காரம் பண்ணி, சொல்லணி, பொருளணி என்ற இரண்டு அணியாலும் அலங்கரித்து, முடிவாகத் தன்னையே பெரிய ஆபரணமாக அந்தச் சரணத்திலே வைத்து இழைத்துக் கொண்டிருக்கிறார்! அப்படி அவளை எண்ணத்தாலும் வாக்காலும் அலங்காரம் பண்ணிப் பார்ப்பதுதான் நம் அஹங்காரம் அடங்க மருந்து. நம்மிடம் அஹங்கர ஹேதுவாக இருக்கிற புத்தி, வாக் சாதுர்யம் முதலானவற்றையே அவள் விஷயமான அலங்காரமாக்கி, அவள் நமக்குக் கொடுத்ததை அவளுக்கே திருப்பிவிட்டால் அவையே அஹங்கார நாசத்தை உண்டாக்கிவிடுகின்றன. வாக்குதான் என்றில்லை, எந்த ஆர்ட், எந்த ஸயன்ஸானாலும், 'அவள் சரக்கு' என்று அவளுக்கே அலங்காரமாகச் சூட்டுகிற அடக்க பாவத்திலே அவற்றில் ஈடுபட்டால் அவையெல்லாமும் ஆத்மாபிவ்ருத்திக்கு உபகரணமாகிவிடும். எந்த தொழிலும் அவளை அடைய ஸாதனையாகிவிடும்.

பரம ஸௌக்யமான ஸாதனையாக அதை நமக்கு ஆசார்யாள் ஆக்கிக் கொடுத்திருக்கிறார். அழகு ரூபமான ஒரு தாயாரை அழகான வார்த்தைகள், வர்ணனைகள், உணர்ச்சி பாவங்களால் நாமும் ஆனந்தமாகப் பிடிக்கும் படிப் பாடிக்கொடுத்து ஸஹாயம் பண்ணியிருக்கிறார்.

படிக்கும்போதே அவளிடம் அன்பு ஊறி அந்த அன்பே நமக்கு அலங்காரம் பண்ணுகிறது. அவளை அவர் அலங்கரிக்கிறபோதே நமக்கும் ப்ரேம பக்தியினால் அலங்காரம்! அந்த அன்புதான் நிஜ அழகும் அலங்காரமும்! முதலிலேயே சொன்னாற்போல அம்பாளுடைய அன்புதானே அவளுடைய அழகு ரூபமான ப்ரவாஹமாக ஸௌந்தர்ய லஹரியாக ஆயிற்று? ஆனபடியால் பாராயணம் பண்ணி அன்பிலே நாம் ஊறுகிறோமென்றால் நாமெல்லாமும் - பாராயணம் பண்ணும் ஒவ்வொருத்தருமே - ஸௌந்தர்யலஹரியாகி விடுகிறோம்! இப்டி ஒரு அத்வைதம், ஸ்தோத்ரம்-ஸ்தோத்ர தேவதை-பாராயண பக்தர் எல்லாம் ஸௌந்தர்ய லஹரியாகி! ஸ்தோத்ர கர்த்தாவை விட்டுவிட்டேனே! அவர் 'நான் கர்த்தாவே இல்லை' என்றாலும் நாம் அப்படி விடமுடியுமா? அவர்தான் பெரிய ஸௌந்தர்ய லஹரி! ஒரு பக்கம் அம்பாளிடம் பக்தி என்ற அன்பினால் ஸௌந்தர்ய லஹரியாயிருப்பவர்; இன்னொரு பக்கம் நம் எல்லாரிடமும் கருணை என்கிற அன்பினாலும் ஸௌந்தர்ய லஹரியாயிருப்பவர். இரண்டு பக்கத்துக்காரர்களையும் ஒன்று சேர்ப்பதற்குத்தான் அவர் இந்த ஸ்தோத்ர ஸௌந்தர்ய லஹரியைக் கொடுத்திருப்பது. பாலம் போட்டு ஒன்று சேர்க்கிறது வழக்கம் என்றால், எதையும் புதுமையாகப் பண்ணும் ஆசார்யாளோ லஹரியை - வெள்ளத்தைப் பெருக்கவிட்டே ஒன்று சேர்த்திருக்கிறார்.

ஸௌந்தர்ய லஹரியில் நீராடி நீராடி, தோய்ந்து தோய்ந்து நாமும் அதுவாகணும். அப்படியானால் நமக்கும் இங்கே அம்பாளை வர்ணித்திருக்கிற மாதிரியே ஒவ்வொரு அவயவமும் ஸௌந்தர்யமாகிவிடுமா என்றால் - தேஹ அமைப்பில் வாஸ்தவமாவே அப்படி ஆகணுமென்று இல்லை. ஆனால் லோகத்தின் பார்வையில் நம்முடைய

*ஸர்வாவயவமும் (ஸர்வ அவயவமும்) அப்படிப்பட்ட அழகாகத்தான் தெரியும், அன்பு என்பது அவற்றுக்குக் கொடுத்திருக்கிற அலாதி சோபையால்! அம்பாளுடைய பரம பக்தராக ஒரு மஹான் இருக்கிறாரென்றால் அவரை ஏன் 'வைத்த கண் வைக்காமல் பார் பார்!' என்று இழுக்கிறது? தாயைப்போல் பிள்ளை என்று அவருடைய ரூபத்தில் ஏற்பட்டிருக்கிற ஸௌந்தர்யம் இப்படிப் பண்ணுகிறது அம்பாள் ஸ்வரூபத்தில் ஒருத்தன் மனஸ்லயித்து அவன் ஹ்ருதயத்திலே அவள் சரணம் ப்ரதிஷ்டையாகிவிட்டால் வெளி ரூபத்திலே அவன் எத்தனை கோணல், விகாரம், கறுப்புத்தோல், நொள்ளைக் கண்ணு, தெற்றுப்பல்லு, சூணா வயிறாயிருந்தாலும், அவன் ஞானப்பால்-ப்ரேமப்பால் குடித்த குழந்தையாக ஸர்வாங்கமும் பால் வழிய கள்ளங் கபடு இல்லாமல் அப்படியே ஆனந்தம் ஸ்புரித்து அலைமோதிக் கொண்டு, அன்பு பொங்கிக் கொண்டு இருப்பானாகையினாலேயே எத்தனை கூட்டமானாலும் குதி காலில் நின்று கொண்டு 'பார்க்கணும், பார்க்கணும், இன்னம் பார்த்துண்டே இருக்கணும்' என்று அவனை அழகு ரூபமாக அநுபவிக்கிறது! வழுக்கை மண்டையாயிருக்கட்டுமே, அது அம்பாள் சரணத்திலேயே தாழ்ந்திருப்பதாலேயே, ''கிரீடம் தேஹைம்'' என்று ஸ்வர்ண மகுடம் சூட்டிக் கொண்டுள்ள அவளுடைய சிரஸாகவே நம்மை ஆகர்ஷிக்கிறது! மூஞ்சி அஷ்ட கோணலாயிருக்கட்டுமே! ஆனாலும் அவளை அன்போடு ஸ்மரித்து ஸ்மரித்து எத்தனை ப்ரஸன்னமாயிருக்கிறது? ''தவ வதன ஸௌந்தர்ய லஹரீ'' என்று இவனைப் பார்த்தும் பாடலாமென்றுதானே அது பண்ணுகிறது? கண் நொள்ளையானால் என்ன? அவளுடைய க்ருபையை இதுவும் ''தரதளித நீலோத்பலம்'' தான்! சப்பை வாய், சாள வாயானாலும் அந்தத் தாயாரின் வாக்காகவே எத்தனை ப்ரிய வசனம் பொழிகிறது? அதுதான் ''வித்ருமலதா''வுக்கும் ''பிம்ப''த்துக்கும் (பவளக் கொடிக்கும், கோவைப் பழத்திற்கும்) மேலே என்று ஆசார்யாள் வர்ணிக்கிற அவளுடைய வாயாகவே தெரிகிறது! அவன் சரீரம் கன்னங் கரேலென்றே இருக்கட்டும். பக்தி ப்ரேமையிலேயும் அதன் ப்ரதிரூபமான ஸர்வ ஜன காருண்யத்திலேயும் முழுகி முழுகி அதுவும் ''ஜயதி கருணா காசித் அருணா'' என்றேதான் அருண ஜ்யோதிஸாக உள்மனஸில் போகிறது! அவனுடைய ஒவ்வொரு கையசைப்பிலேயும் லோகத்துக்கு ஆசீர்வாதம் நடந்து ஸௌபாக்யங்களை அளிக்கிறதென்றால், இதைவிட ஒரு ''லக்ஷ்மீ சரண தல லாக்ஷாரஸம்'' (லக்ஷ்மியின் திருவடிச் செம்பஞ்சக் குழம்பு) சேர்ந்த ''நவ நளின ராகம்'' (அன்றலர்ந்த தாமரையின் சிவப்பு) உண்டா? அவன் அடியெடுத்து வைக்கிற இடமெல்லாம் மானஸிகமாகப் புரண்டு அப்போதைக்காவது அந்தஃகரணம் லயிக்கிறோமோ இல்லையா? அதுதான் ''கரண சரண ஷட்சரண'' மான (புலன்கள் என்ற ஆறுகால் கொண்ட வண்டான) ஜீவன் லயித்துப்போகிற அவளுடைய பாத பத்மம்.*

*ஒருத்தன் அம்பாள் குழந்தை என்றால் அவன் நம் மாதிரி இல்லாமல் அவன் ரூபமே வேறே என்றாகிவிடும்! அவன் கண்ணே வேறே, முகமே வேறே, வார்த்தையே வேறே, கை காலை அசைத்துப் பண்ணுவது அத்தனையும் வேறே என்று அகத்தின் அழகு முகத்தில் மட்டுமில்லாமல் பாதாதிகேசமும் தெரிந்து கொண்டு குழந்தைக்குக்*

*குழந்தையாகவும், தாய்க்குத் தாயாகவும் அவனே இருந்து கொண்டு, பல தினுஸில் தாபப்பட்டுக் கொண்டிருக்கிற ஜனங்களை ஆற்றிக் கொடுப்பான்.*

*நாமும் அப்படி ஸௌந்தர்யலஹரியாகணும். அதற்கு இந்த ஸ்தோத்ர ஸௌந்தர்யலஹரியில் முழுகி முழுகி ஸ்நானம் பண்ணி, அவள் குழந்தையாகணும். ''வாசாம் ஜனனி'' என்று அம்பாளைக் கூப்பிட்டு, ''இதோ உன் வாக்கு ஸ்துதி!'' - ''வாக்பி: ஸ்துதிரியம்'' என்று ஆசார்யாள் இந்த ஸ்தோத்ர வாக்கிய குழந்தையை அதன் அம்மாவிடம் சேர்த்து முடித்திருக்கிறார். 'சிவாநந்த லஹரி' ஸ்தோத்ரத்தை ஒரு கன்யாப் பெண்ணாகச் சொல்லி ஈச்வரனுக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்து முடித்தார். புருஷ தெய்வமென்றால் நாயிகாபாவந்தான் ஆத்ம ஸமர்ப்பண ஸ்தானம் என்பதால் அப்படிப் பண்ணினார். ஸ்த்ரீ தெய்வமானால் அவள் மாதா; நாம் ஒன்றும் தெரியாத குழந்தை - 'அம்மா என்ன, எப்படிப் பண்ணுகிறாளோ அப்படியே!' என்று கிடக்கிற குழந்தை - என்று இருப்பதுதான் ஆத்ம ஸமர்ப்பணம். அதனால்தான் ஸௌந்தர்யலஹரியைக் குழந்தையாக்கி 'வாசாம் ஜனனி'யிடம் ஒப்படைத்துப் பூர்த்தி பண்ணியிருக்கிறார். அதன் வழியாகவே நம் எல்லாரையும் குழந்தையாகி அவளிடம் போய் ஒட்டிக் கொள்ளச் சொல்லியிருக்கிறார். சொன்னது மாத்ரமில்லை. ஒட்ட வைப்பதற்கே இந்த உத்தம ஸ்துதியைப் பரம கருணையோடு நமக்கு அநுக்ரஹித்து வழியும் திறந்து விட்டிருக்கிறார்.*

*ஆசார்யாள் நமக்காக அருளியிருக்கும் ஸௌந்தர்ய லஹரியின் பயன், நாமெல்லாம் அம்பிகையின் குழந்தையாக இருந்துகொண்டு, எந்த நாளும் அந்த ஜகன்மாதாவை ஸ்தோத்ரம்-நமஸ்காரம் பண்ணிக்கொண்டு, இந்த ஸ்தோத்ரத்தாலேயே நமஸ்காரம் பண்ணிக்கொண்டு, ஸௌந்தர்ய ரூபம் எடுத்திருக்கிற அந்த ஸச்சிதானந்தத்தில் ஆத்மாவைக் கரைத்து ஆனந்த மயமாகிறதுதான்.*

*அதற்கு ஆசீர்வாதமாகத்தான், சுப ஸூசகமாகத்தான் இந்த ஸ்தோத்ரத்தாலேயே அவளுக்குப் பூஜை பண்ணியிருக்கிற ஆசார்யாள் முடிக்கிற ச்லோகத்தில் ''நீராஜன விதி:'' என்று மங்கள ஹாரதியை வைத்திருக்கிறார்! திருக்கார்த்திகையில் ஏற்றி வைக்கிற தீபம் அதன் வெளிச்சம் படும் இடமெல்லாம் பூச்சி-பொட்டு, மரம்-மட்டை உள்பட எல்லாவற்றுக்கும் ஜனன நிவ்ருத்தி அளித்துப் பேரின்பம் அளிக்கும் என்கிறபடி, ஸாக்ஷாத் ஜகன்மாதாவுக்கு ஜகதாசார்யாள் பண்ணும் இந்த தீபாராதனை - அதாவது இந்த ஸ்தோத்ரத்தின் அருளொளி - ஸமஸ்த ப்ராணிகள் மேலேயும் வீசி அன்பு என்கிற ஸௌந்தர்யம் லோகமெல்லாம் நிறைந்திருக்க வேண்டும்.*

**நம: பார்வதீ பதயே ।**<br>**ஹர ஹர மஹாதேவ ॥**

—★—

# ஸௌந்தர்யலஹரீ

## இரண்டாம் பாகம்

### ஒன்பது உரைகளின் கருத்துச் சுருக்கம்

### வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ, ஸ்ரீரங்கம்

## கதைர்மாணிக்யத்வம்

சுலோகம் -42

*வானில் பன்னிரண்டு ஸுர்யர்கள் உள்ளனர். மித்ரன், ரவி, ஸுர்யன், பானு, ககன், பூஷா, ஹிரண்யகர்ப்பன், மரீசி, ஆதித்யன், ஸவிதா, அர்க்கன். பாஸ்கரன் என. ஆரோகன், ப்ராஜன் படரன், பதங்கன், ஸ்வர்ணரன், ஜ்யோதிஷீமான், விபாஸன், கசியபன் என எட்டு ஸுர்யர்கள் வானில் வலம் வருவதாக மேருவைத் தாண்டமுடியாததால் சுற்றிச் சுற்றி வருவதாக வேதத்தின் அருணம் கூறும். தேவியை பானு மண்டலமத்தியஸ்தா (ல,ஸ) சூர்ய மண்டலத்தின் நடுவிலிருப்பதாகத் தியானிப்பர். ஸுர்யனுக்கும் ஒளி தருபவள். இவள் எதிரில் ஸுர்ய ஒளி இயல்பாகத் தனித்துத் தெரியாது. இவளை வழிபட ஸுர்யன் தேவியின் அருகில் வரும்போது மாணிக்யரத்னமாக மாறி வருவான். பன்னிரு ஸுர்யர்களும் பன்னிரு மாணிக்யக்கற்களாகக் கிரீடத்தில் பதிக்கப்பட்டுள்ளனர். சந்திரனும் மன்மதனின் வில்போல், கிரீடத்திலுள்ள நவரத்தின ஒளியும் தன் மீது பிரதிபலிக்க இது சந்திரகலையா? வானவில்லா, மன்மதனின் வில்லா என்ற ஐயம் தோன்றுகிறது. அந்த சந்திரனின் கலையும் கிரீடத்தில் அமைந்த ரத்தினத்தைப் பதிப்பதற்காக உள்ள தங்கக்குப்பியில் பதிந்து ஒளித்துடிப்பை வெளிப்படுத்துவதாகத் தெரிகிறது. கிரீடத்தை உற்றுப் பார்த்து வர்ணிக்கத் தொடங்கிய கவி. இது இதுதான் என்று நிர்ணயம் செய்ய முடியாதபடித் தயங்கி நிற்கிறுன். ஸஹஸ்ராதித்ய தேஜஸே ஹைமகிரீடாய நம: என இதனையும் ஸாதகன் வணங்குவார். கிரீடம் கண்கள் லம் மனத்தில் பதிய டிய கண்களுடன் செய்கிற தியானத்தில் தேவி கிரீட ஒளியுடன் புலப்படுவாள்.*

*லலிதையின் நாமங்கள் இதே வரிசையில் தொடங்குகின்றன. குருவிந்த மணிச்ரேணீ கநத் கோடீர மண்டலா - செந்தாமரை, நிறம் கொண்ட ரத்தின வரிசைகளால் ஒளிவீசுகிற கிரீடமணிந்தவள்.*

## துநோது த்வாந்தம்

சுலோகம் -43

*பூமணம் பெறப் பெண்கள் தலையில் பூவைச் சூடிக்கொள்வர். தேவியின் கேசமணம் பெற தேவலோகத்து நந்தவனப் பூக்கள் தேவியின் கேசங்களை அலங்கரிக்கின்றன. கடும் இருள் வண்ணம் கொண்ட கேசம் நம் அகத்து இருளைப் போக்குகின்றது. தேவர்களும் ஏனையர்களும் தேவியை அலங்கரிக்க நந்தனவனத்துப்*

*பூக்களைக் கொணர்ந்து மாலையாகத் தொடுத்துக் கேசங்களை அலங்கரிக்கின்றனர்.* **சம்பகாசோக புந்நாகஸௌகந்திகலஸத்கசா. (ல,ஸ)** *சம்பகம் அசோகம் புன்னை செங்கழுநீர் இவற்றின் பூக்களால் அழகுற்ற கூந்தலுள்ளவள்.*

## தநோது க்ஷேமம் ந:

### சுலோகம் -44

*வெள்ளத்தால் நிரம்பிய நீர்த்தேக்கம் கரை கடந்து கரைகள் உடையுமென பயத்தால் வடிகாலாக சிறுவாய்க்கால்கள் அமைப்பர். நீர்த்தேக்கத்திலிருந்து வெள்ள நீர் கடும் வேகத்துடன் அதில் பாயும். அது போல தேவியின் முக அழகு அளவிற்கு மீறி முகத்தில் தேங்கியதன் வடிகாலாக வகிடு பிரிந்து அதில் அழகு நீர் வேகத்துடன் பாய்கிறது. மற்றொரு புறம் இருளிற்கு ஸூர்யனிடம் கடும் கோபம். தன்னை விரட்டி விரட்டி ஓடச் செய்கிறான். இவனைப் பிடித்துச் சிறையில் போட ஆசை. ஆனால் இயலாத செயலாகிவிட்டது. எதிரியைப் பிடிக்க முடியாதபோது அவனது மகனை அல்லது அவனது படையினரில் ஒருவரைச் சிறை பிடிப்பது போல் இருள் இளஞ்சூரியனைப் பிடிக்க முற்பட்டு அதுவும் முடியாமல் இருபுறமும் கிரணங்களைச் சிறை பிடித்தது. வகிடு பிரித்து இருபுறமும கேசம் ஒதுங்கியிருப்பதைப் பார்த்தால் எதிரியைச் சிறைபிடிக்க அணிவகுத்து நிற்பது போன்று தோன்றுகிறது. வகிட்டின் முனையிலிட்ட சிந்தூரம் கேசத்தால் சிறைப்பிடிக்கப் பட்டது போன்று உள்ளது!* **நிஜாருணப்ரபாபூர மஜ்ஜத் ப்ரம்ஹாண்ட மண்டலாவாக** *இருந்தவளின் முகத்தில் கேசம் இருபுறமும் சூழ நடுவிலிட்ட சிந்தூரம் அந்த அருணனின் கிரணங்கள் சிறைப்பட்டது போலானது. (பொருளைக் கோடிக்கணக்கில் சேமித்தாலும் (யோகம்) அதனை வைத்துக் காப்பதும் நல்ல வகையில் தானும் தன்னைச் சார்ந்தவர்களும் இன்புறச் செலவிடுவதுமான க்ஷேமமின்றிக் குவித்த பணம் நெற்பதர் போன்று காற்றில் பறந்துவிடும்). அந்த க்ஷேமத்தை நமக்கு அருள அந்த முகம் நம்மை நோக்கித் திரும்பட்டும். முன் வினைப்பயனாகத் தேவியிடம் பக்தி என்ற யோகம் கிட்டியுள்ளது. அது வாழ்க்கை மேம்பட பக்தி வலிவடைந்து தேவியின் அருளுக்குப் பாத்திரமாவதான க்ஷேமத்தைத் தரட்டும்.* **ஸிந்தூரதிலகாஞ்சிதா.** *(ல,ஸ)*

## அராளை: ஸ்வாபாவ்யாத்

### சுலோகம் -45

*முகத்தைச் சூழ்ந்துள்ள சுருண்ட கேசங்கள் கொழுத்த கருவண்டுகள் போல் உள்ளன. முகமும் தாமரை போன்றுள்ளது. தாமரையின் நறுமணம் அது மலர்ந்தும். வெளிப்பட்டு உலர்ந்ததும் மறைந்துவிடும். மணமுள்ளவரைதான் வண்டுகள் சூழும் முகத் தாமரை எப்போதும் நறுமணம் வீசுகிறது. முகத்தாமரையிலே சுருண்ட கேசங்களாகிய வண்டுகள்*

*எப்போதும் சூழ்ந்துள்ளன. முகத்தாமரை குளத் தாமரையைப் பரிகாசம் செய்வதில் வியப்பேது? தாமரை சந்த்ரனைக் கண்டதும் குவிந்து தலை தாழ்ந்துவிடும். முகத் தாமரை சந்திரனோடு நெருங்கி நிற்கிறது. சுருள் வண்டைப் பரிஹஸிக்க, முகம் தாமரையை பரிஹஸிக்கத் தாமரையும் வண்டும் விலகிவிட்டன. மன்மதனையே சுட்டெரித்த சிவன் மன்மத தாபம் கொண்டதும் அவரது கண்களாகிய வண்டுகள் மது பருகிக் கிரங்கியவை போல தேவியின் முக அழகைப் பருகுகின்றன. முகத் தாமரையின் கோதுகள் போன்ற பற்கள் மென்புன் சிரிப்பால் மலர்ந்த முகத்தில் தென்படுகின்றன. நறுமணம் குன்றாது எப்போது முகத்தில் குடிகொண்டுள்ளது. மனத்தை அடக்கி மௌனத்தில் ஆழ்ந்த சிவன் தேவியின் முகத்தழகால் ஈர்க்கப்பட்டு கிரங்கி முன் நிற்கிறார். கேசங்களின் சுருள், புன் சிரிப்பு, அதனால் வெளிப்பட்ட பற்கள், நிலைத்த நறுமணம் எனச் சிவனது மனத்தைக் சுவர்வதில் தாமரைபோன்ற முகம் வெற்றி கண்டுவிட்டது.* **மந்தஸ்மித ப்ரபாபூர மஜ்ஜத் காமேசமாநஸா.** *(ல.ஸ).*

## லலாடம் லாவண்ய

### சுலோகம் -46

*கிரீடத்தில் சந்திரனின் பாதி பதிக்கப்பட்டுள்ளது.* அஷ்டமீசந்த்ரவிப்ப்-ராஜதளிகஸ்த்தல சோபிதா - *(ல,ஸ)* பாதியாகச் *சந்திரனை உடைக்க சந்திரனின் நடுவே கஸ்தூரிப் பொட்டால் நடுப்பகுதிக்கு அடையாளமிட்டு கீழே புருவத்தால் கோடிட்டுச் சந்திரனின் நடுப்பகுதியில் பிளந்து இரண்டாக்கி ஒன்றை நெற்றியாகவும் மற்றொன்றை கிரீடத்தில் சந்திர லேகையாகவும் அமைத்துள்ளனர். இரண்டாகப் பிளக்கப் பெற்ற சந்திரனின் இரண்டு துண்டுகளின் இரு கோடிகளும் மேல் நோக்கியே அஷ்டமீசந்திரன் போல் வைக்கப்பட்டுள்ளதால் இருதுண்டுகளையும் பொருத்திப் பூர்ணிமை சந்திரனைக் காணமுடியவில்லை. யாரேனும் ஒருவர் கிரீடத்திலுள்ள பாதியை முனை திருப்பி நெற்றியின் இருமுனைகளுடன் இணைத்து அமுதச் சுண்ணும்பு பூசி ஒட்டிவிட்டால் பூர்ணிமையின் முழு சந்திரனாகும். கிரீடத்தில் அஷ்டமீசந்திரனின் இருமுனைகளும் மேல் நோக்க நெற்றியில் இருமுனைகளும் கீழ் நோக்கியுள்ளது. இரண்டையும் பொருத்த சந்திரனிடமிருந்து பொழிகிற அமுதத்தையே பூச்சுக்கலவையாக்கிப் பூசி ஒட்டி முழுச் சந்த்ரனாக்கலாம்.* முக சந்திர கலங்காப ம்ருகநாபிவிசேஷகா. *(ல.ஸ) மிருகநாபி கஸ்தூரி.*

## ப்ருவௌ புக்நே

### சுலோகம் -47

வதன ஸ்மர மாங்கல்ய க்ருஹ தோரண சில்லிகா *(ல.ஸ) என மன்மதனின் மங்களவீடான முகத்தின் வாயில் தோரணமாகப் புருவத்தை வர்ணிப்பர். ஆசார்யாள் இதனை மன்மதனின் வில் என்கிறார். உயிரினமனைத்தும் பிறப்பிறப்பைக் கண்டு பயப்படுவதைத் தடுப்பதில் ஈடுபாடு கொண்டதில் செயல் முறைப்பற்றிச் சிந்திப்பதால் தேவியின் புருவம் வில் போன்று நெரிகிறது. அது நாணேற்றப்பட்டு வளைந்த மன்மதனின் வில்லோ ? வில்லில் நடுப்பகுதி வில்லாளியின் இடது கைப்பிடியால் மறைந்திருக்கலாம்*

- நாணின் நடுப்பகுதி வலது கைப்பிடியால் மறைந்திருக்கலாம். கரு வண்டு போன்ற கருவிழிகளான நாணின் நடுப்பகுதியும். அது வலது கைப்பிடியால் மறையலாம். நடுவே கைப்பிடியளவு தெரியாமலுள்ளது இயல்பே. அதனால் அது மன்மதனின் வில்லே. சிவனைக் கவர உன் முகம் மன்மதனின் வில்லின் பணியைச் செய்கிறது.

## அஹஸ் ஸூதே

சுலோகம் -48

தேவிக்கு த்ரிநயநா த்ரிலோசநா (ல,ஸ) என இரண்டு பெயர்கள். வழிகாட்டி அழைத்துச் செல்லவும் தானே உணர்ந்து கொண்டு வழிபடவும் இந்த முக்கண்ணி அருள் புரிகிறாள். முகத்தின் அழகைக் கண்கள்தான் உணர்த்துகின்றன. தேவர் இனத்தைச் சேர்ந்தவளானதால் (அநிமிஷா) கண் கொட்டாமலிருப்பாள். ஆனால் உலகின் தாயானதால் கண்களின் அசைவாலேயே வழிகாட்டிக் கண்கொட்டாமல் உற்பத்தியையும் மறைவையும் உண்டாக்குபவளுமானாள். அவளது ஸ்தனங்களே இரு கண்களான ஸூர்ய சந்திரர்கள். (சசிமிஹிவபக்ஷோருஹ யுகம்) பாலூட்டி உயிரினத்தை வளர்க்கச் சூரியனையும் சந்திரனையும் வெளியிட்டவள். வக்த்ர லக்ஷ்மீ பரீவாஹசலன்மீநாபலோசநா. (ல,ஸ) முககாந்திப் பிரவாஹத்தில் கண்கள் மீன்கள் போல் நீந்துகின்றன. ஓய்வில்லை. கண்கொட்ட வேண்டிய அவசியமில்லாத மீனாக்ஷி அவள். வலது கண்ணை ஸூரியனாக்கி ஸூர்யனால் பெறுகிற போஷிப்பையும் வளர்ச்சியையும் தருகிற பகலை வெளிப்படுத்துகிறாள். இடது கண்ணைச் சந்திரனாக்கி இரவாக மலர்ந்து அதனால் உலகைப் போஷிக்கிறாள். இரவில் வலது கண் தெரியாது. பகலில் இடது கண் தெரியாது என்ற நிலையில்லை. ஸூர்யனும் சந்திரனும் நித்யமான ஜ்யோதிகள். இங்கு தெரியாமல் மறைந்த ஸூர்யன் எங்கோ ஒரு தேசத்தில் பிரகாசிக்கிறான். சந்திரனும் அப்படியே. தேவியின் ன்றுவது நெற்றிக்கண் அக்னியாகி சிறிதே மலர்ந்த தங்கத் தாமரை போன்ற ஒளியுடன் ஸூர்யனும் சந்திரனும் ஒளிராத காலை, மாலை ஸந்திகளில் காக்கிறாள். சிவனும் இவ்வாறே முக்கண்ணன். இருவரிடையே வேறுபாடு இல்லை.

## விசாலா கல்யாணீ

சுலோகம் -49

தேவியின் பார்வை விசாலமானது. (சாலா - தடை - விசாலா குறுக்கீடற்றது) உள்ளத்தின் மலர்ச்சியால் பார்வை விரிவடைகிறது. நம் பார்வை, ஓரளவுதான் விரியும். நம்மைச் சுற்றியுள்ள இடத்தில் நம் முன்புறமுள்ளதை மட்டும் கண் நோக்கும். கழுத்து இறுகினால் அந்தப் பார்வையின் விரிவு மேலும் குறையும். பின்னுள்ள பகுதி பெரும்பாலும் புலப்படாது. அதனால் நம் பார்வை தடையுள்ளது. (விசாலா) தேவியின் பார்வைக்கு முன் பின் என்ற இடக் குறுக்கீடு இல்லை. அதனால் விசாலா, உள்ளத்தில் எண்ணக் குமுறலிலும் விழிசுருங்கும். எதிரிலிருப்பது கூடத் தென்படாது. தேவியின் மனம், பார்வை எல்லாமே விசாலம். தேவிக்கு விசாலாக்ஷீ (ல,ஸ) என்றே பெயருண்டு. என்றும் மலர்ந்த உள்ளமும் அதனைத் தெரிவிக்கும் கண்களும் கொண்டதால் விசாலா. விசாலா என்ற நகரமுண்டு. விசாலாவின் சிறப்பையும் வென்றதால் இவளது பார்வை விசாலா.

வியப்பும் மங்கள சிந்தனையும் தெரிகிற பார்வை கல்யாணீ, மங்களத்தை (கல்ய) எப்போதும் தெரிவிப்பதால் (அணீ) கல்யாணீ. அஸூயையின்றி கேடு நினைக்காத தெளிவு மிக்க பார்வை கல்யாணீ. கல்யாணீ என்ற கந்தர்வர்களின் தலை நகர் கல்யாணீ. அதனைத் தன் மங்களத் தன்மையால் கல்யாணீ என்ற தேவியின் பார்வை வெல்கிறது.

உலகம் முழுதும் சூழ்ந்தாலும் (குவலயை:) வெல்லமுடியாத நகரமானதால் ஸ்ரீ ராமன் ஆண்ட நகரம் அயோத்யா. அதே போன்று எங்கும் எப்போதும் வெற்றி கொண்ட பெருமிதம் பார்வையில் தெரிகிறது. கண்ணோரம் புன்சிரிப்பால் மலர்ந்த பார்வை அது. கருணைக்கே இருப்பிடமாகி கருணையை எப்போதும் தாரையாகப் பொழிவதால் போஜனின் தலைநகரான தாராநகரைத் தன் விரிவால் வென்ற பார்வை தாரா. உள்ளத்திற்கும் கண்களுக்கும் இனிய நகரம் மீனாக்ஷியும் கிருஷ்ணனும் வசிக்கிற மதுரா. தன் இனிமையால் அவ்விரண்டையும் வென்றது தேவியின் மதுரா என்ற பார்வை. (மது வென்ற அரக்கனை வென்ற ஸ்ரீ ராமனின் புத்திரன் லவன் அமைத்த நகரும் மதுராதான்)

போகவதீ என்ற பாதாளத்தில் உள்ள தலைநகரம். அதில் உயிரினம் நாடுகிற அனைத்து இன்பங்களும் கிட்டுகின்றன. தேவியின் பார்வையும் நாடுவதனைத்தையும் அருள்வதே. அவந்தீ - உஜ்ஜயினி என்ற விக்ரமார்க்கனின் தலைநகர். நகரிலிருப்பவர்களனைவரையும் கட்டிக் காப்பதால் அது அவந்தீ. அதையும் வென்ற தேவியின் பார்வை தாய்மையுடன் பாசத்துடன் காக்கிறது. இவ்வகை பெயர் பெற்ற பெருநகரங்கள் பல உண்டு. அவற்றையும் வெல்கிற தேவியின் பார்வை அந்நகரங்களின் புகழ் பெற்று அப்பெயர்களாலேயே வழங்கப்படுகிறது.

## கவீநாம் ஸந்தர்ப்ப

சுலோகம் -50

தேவியின் எதிரே அமர்ந்து அவளைப் புகழ்கின்றனர். வஸிஷ்டர் ஸன காதிகள் வியாஸர் முதலானோரது துதிகள் தேவியின் காதுகளுக்கு இனிதாக உள்ளன. அவை குவிந்து அதனை அக்கரையுடன் கேட்பதைக் கண்ட கண்கள் (இடதும் வலதும்) காதுகள் வரை நீண்டு குறுகி அவையும் ஆனந்தம் பெறுகின்றன. கண்கள் வரில் இருவர் அன்பும் பரிவும் மிக்கதாக தனித்து இன்பம் அனுபவிப்பதைக் கண்ட நெற்றிக்கண் தான் அந்த இன்பத்தில் பங்குபெற இயலாததால் அஸூயையால் சிவந்துள்ளது. இதனைப் பொருட்படுத்தாத இருகண்களும் கொழுத்த வண்டுகள் போல காதுகள் பெறும் இன்பத்தைத் தாமும் சுவைக்கின்றன. குவிந்த காதுகள், காதுகள் வரை நீண்டு இன்பம் துய்ப்பவையாகக் காட்சித் தருகிற கண்கள், அக்னியான நெற்றிக்கண் பற்றி எரியாமல் தாமரைபோல கொஞ்சம் சிவந்து அனுக்ரஹ வடிவமாக உள்ளது. என்றிவை ஒரு அரிய காட்சியாகத்தென்படுவதை ஆசார்யாள் காட்டுகிறார்கள்.

## சிவே ச்ருங்காரார்த்ரா

சுலோகம் -51

தேவியிடம் பக்தியால் உள்ளம் நிறைந்து நெருங்கும்போது தாய் என்ற அபிமானம் ஏற்படுகிறது. தனது ஏக்கத்தையும் எளிமையையும் உணர்ந்த அந்தத் தாய் தன்னைக்

*கருணையுடன் நெருங்குகிருள். கருணையுடன் கருண ரஸமும் ததும்புகிறது அவளது பார்வையில். ஐயோ! பாவம்! குழந்தை மிகவும் வேதனைப்படுகிறது என்ற இரக்கமும் கரிசனமும் கொண்ட கருண ரஸம் தளும்புகிறது. உள்ளம் களிப்பால் தேவியைப் பற்றிய பல கற்பனைச் சித்திரங்களை வரைகிறது. சிவன் அதோ வருகிருர் எனக் கேட்டதும் பரபரப்புடன் வரவேற்ற தேவி (ச்லோ. 29) சிவனை நேரில் கண்டதும் வணங்கி எழுந்த தேவி மனத்தில் காமத்தின் குறுகுறுப்பு தளும்ப அவரை அன்பு ததும்பப் பார்க்கிருள் என்று கண்டதும் ச்ருங்காரத்தில் அவள் பார்வை மலர்வதைக் காண்கிருர்.*

*வேறு யாரோ தேவர் அங்கே குறுக்கிட்டுத் தேவி! என்று தன்னை அழைத்ததும் அழைப்பவனது முகம் சிவனேடு இணைப்பிற்கு இடையூருக, அவனிடம் வெறுப்படைகிருள். சிவனது சிரஸை நிமிர்ந்து பார்த்தவளுக்கு கங்கை தெரிகிருள். தன் ஸஹோதரி. ஆனுல் அவள் எப்போதும் சிவனது தலையில் குடியிருக்கிருள். தனக்கு ஏற்படுகிற பிரிவால் ஏற்படும் துக்கத்தை அறியாதவள் என்ற உணர்வால் வெறி போன்ற கோபம் ஏற்படுகிறது.*

*கணத்தில் தன் கணவரது லீலாவிலாஸங்கள் நினைவில் வரும்போது, இவரால் எப்படி இவ்வாறு செயல்பட முடிகிறதென்ற வியப்பு, திகம்பரராக, தோலாடை உடுத்துபவராக, பாம்பணி பூண்டவராக உள்ளவரே காமேசுவரராக மன்மதனை விடப்பலமடங்கு அழகராக கல்யாணஸுந்தரராக ஸுந்தரேசராகக் காட்சி தருவதில் வியப்பு எல்லை கடக்கிறது. புன்சிரிப்பும் புருவ உயர்வும் கண்மலர்ச்சியும் அம்பாளிடம் அழகூட்டுகின்றன. ஹரனுக உலகை மாய்ப்பவனுக பாம்பணி பூண்டவரின் மார்பில் கையில் தலையில் என எல்லா அங்கங்களிலும் பாம்புகள் அணிகளாக அடங்கி ஒடுங்கி நின்ருலும் பாம்பென்ருல் படையும் நடுங்கும் என்பதைப்போல் அவரிடம் பயந்து ஓதுங்குவாள். சிவனை வரவேற்க வந்த தேவியிடம் இத்தனை ரஸபாவங்கள் மாறி மாறிக் காண்பதைக் கண்ட அவளது தோழிகள் தமக்குள் தன்னைப் பற்றிக் கிசுக்கிசு எனப் பேசுவதைக் கண்டவள் தன்னைக் குறித்து என்ன பேசுகிருர்கள் என்றறியாத குறுகுறுப்பில் பரிஹஸிப்பார்களோ எனப் புருவமும் கண்களும் துடிக்க அசட்டுச் சிரிப்புடன் தோழிகளைப் பார்க்கிருள். (ஸ்மேரா) இத்தனை எண்ணக் குமுறலிலும் தாமரைகளுக்கு ஸௌபாக்யத்தை அருள்கிற நெகிழ்ச்சியும் உள்ளது. தாயே! உன் பார்வையில் என்மீது கருணையின் கனிவு தெரிகிறதே என ஆசார்யாள் வியக்கிருர்.*

## கதே கர்ணுப்யர்ணம்

### சுலோகம் -52

*சிவன் திரிபுரஸம்ஹாரத்திற்காக, வேறு உதவி எதனேயும் புறக்கணித்து தன் சக்தி ஒன்றையே முன்னிட்டு அதனேக் கோரச் சிரிப்பு லம் வெளிப்படுத்தி திரிபுரங்களே அழித்தார். அந்த உக்கிரம் தணியாத நிலேயில் சித்தத்திலுள்ள கடுமை இளகச் செய்வதற்கு மன்மதன் தன் காதுவரை இழுத்த நாணிலிருந்து அம்பை எய்கிருன். அந்த அம்பு தேவியின் கண்களே, கண்களாகிய அம்பின் பின்பகுதி காதுவரை இழுக்கப்படுகிறது. (காது வரை கண்கள் நீள்கின்றன) தேவியின் புருவ மயிர்கள் அம்பில் கட்டியுள்ள சிறகுகளாக அம்பின் வேகத்தை அதிகப்படுத்துகின்றன. பூக்களான பாணங்கள் ஐந்தும் பயனளிக்காத போது தேவியின் கடாக்ஷத்தையே அந்த பாணங்களின் பிரதிநிதியாக்கி மன்மதன் எய்கிருன். அந்த*

பாணத்திற்கு இரும்பாலான கூர் முனை (பலம்) அமைக்கப்பட்டுள்ளது. கூர்முனை மார்பில் பட்டதும் சிவனது இதயம் நெகிழ்ந்து விடும். (சித்தவித்ராவணம்) கடாக்ஷம் இரு கண்களிலிருந்து விடுபடுகிற இருபாணங்கள். தேவி பூமியைத் தாங்குகிற மலையரசனின் தலையில் கொண்ட மலர் கிரீடமானவளானதால் வன்முறையில்லாத கடாக்ஷ பாணப் போர் நிகழ்கிறது.

## விபக்த த்ரைவர்ண்யம்

### சுலோகம் -53

ஸதாசிவன் ஈசானன் (ஈசுவரன்) மும்ர்த்திகள் என ஐம்பணிகளைச் செய்பவர். ஈசானன் மும்ர்த்திகளையும் வெளிப்படுத்திப் படைத்துக் காத்து அழித்ததும் மும்ர்த்திகளையும் உலகையும் மறையச் செய்பவர். அவரது அன்புக்குரியவளாகத் தேவி இங்கு அறிமுகமாகிறாள். ஈசான தயிதா. அவளது ன்று கண்களிலும் மையிடப்பட்டுள்ளதால் சிகப்பும் வெண்மையும் கருமையும் நன்கு பிரிந்து பளிச்செனத் தெரிகின்றன. அதைக் கண்டதும் ஆசாரியாளின் உள்ளம் கற்பனையில் ழ்கிறது. மும்ர்த்திகளும் பிரளயத்தில் ஈசானனிடம் ஒடுங்குகின்றனர். மறுபடி படைப்பு தொடங்கியதும் தேவியிடமிருந்தும் வெளியாகி படைப்பு முதலிய பணிகளைத் தொடங்குகின்றனர். அவரவர் பணிக்கேற்ப பிரும்மா ரஜோ குணத்தையும் விஷ்ணு ஸத்வ குணத்தையும் ருத்ரன் தமோகுணத்தையும் ஏற்கின்றனர். அம்பாளின் கண்களில் காண்கிற வர்ணங்களே மும்ர்த்திகளாக முப்பணிகளாக வடிவெடுக்கத் தனித்தனியாக அமைந்துள்ளன.

## பவித்ரீ கர்தும் ந:

### சுலோகம் -54

தேவி தன் உள்ளத்தைச் சிவனது வசத்தில் விட்டுவிட்டவள். கண்களிலுள்ள சிகப்பும் வெளுப்பும் கருப்பும் கொண்ட பகுதிகளைக் கொண்டு ஒரு புதிய பிரயாகையைப் படைத்தாள். ஸரஸ்வதியும் கங்கையும் யமுனையும் ன்று நிறங்கள் கொண்ட நீரோட்டம் கொண்டவை. அவற்றில் ஸரஸ்வதி வெளிப்படாமல் மறைந்துவிட்டாள். அதனால் தேவி ஒரு புது பிரயாகையை சோண நதி (ஸோனே) கங்கை யமுனை என்ற ன்று நதிகளை இணைத்து அறிமுகப்படுத்தினாள். சோணம் சிகப்பு, கங்கை வெளுப்பு, யமுனை கருப்பு. சோணம் என்றால் சிகப்பு நிறம். இந்த நதியின் கூழாங்கற்களைப் பஞ்சாயதன பூஜையில் கணபதியாக வழிபடுவர். (மேற்கு நோக்கி ஓடுகிற நதியானதால் சோண: எனப் புல்லிங்கச் சொல்.) பயம் நீக்குகிற மற்றொரு நதிக்கலவையாகக் கண்களின் சிகப்பு-வெளுப்பு-கருப்புப் பகுதிகளாக்கிப் பிரயாகையாக இணைத்துள்ளாள். நதிகளுக்குப் பல சக்திகளிருந்ததால் தயை ஒன்றையே தோழியாக்கித் தந்துள்ளாள். நம்மைத் தூய்மைப்படுத்துவதற்கே இந்த நதிகளின் இணைப்பு.

## நிமேஷோந்மேஷாப்யாம்

சுலோகம் -55

உந்மேஷ நிமிஷோத் பந்ந விபந்ந புவநாவளி: *(லஸ)* தேவி கண்களை டினல் பிரளயமும் திறந்தால் உலகின் தோற்றமும் என நல்லோர்கள் கூறுவர். பிரளயமே நேரக் கூடாதென நினைத்த கண்கள் டுவதை நிறுத்தி விட்டன. வெகு நேரம் உற்று நோக்கியும் கண்கள் டவில்லை. அதனல் ஆசார்யர்களுக்கு இந்த எண்ணம் தோன்றியது போலும். மீனக்ஷியும் கண்களில் மீனின் செயலைக் கொள்வதால் மீன்களின் இமைகொட்டாத இயல்பைத் தானும் ஏற்றுள்ளாள் என்பர்.

## தவாபர்ணே கர்ணே

சுலோகம் -56

கவிகள் கண்களுக்கு உவமைப் பொருளாக மீனையும் குவளைப் பூவையும் சொல்வர். கண்களின் அழகு மீன்களிடமும் குவளைப் பூவிலும் இருப்பதைப் பறிக்கக் கண்கள் முற்படுகின்றன. தகுந்த யோசனை கேட்கக் காதுகளை நெருங்கி ஏதேதோ கோள் சொல்கின்றன. இதைக் கவனித்த மீன்கள் நீரின் மேல் மட்டத்திற்கு வராமல் கண் கொட்டாமல் நீரினுள் மறைந்து விட்டன. குவளைப் பூவும் தன் வீட்டுக் கதவைத் திருடனிடம் பயத்தால் டுவது போல் டிக் கொண்டு விட்டதால் எப்போதும் குவளைப் பூவையே தன்னிருப்பிடமாகக் கொண்ட லக்ஷ்மீ தேவி இரவில் மெள்ள வாயிலைத் திறந்து உள் நுழைந்து விடியற்காலையில் ஒருவருமறியாதபடி வெளியேறி விடுகிருள். இரவில் குவளைப் பூ மலரும். விடியற்காலையில் டிக்கொள்ளும்.

## த்ருசா த்ராகீயஸ்யா

சுலோகம் -57

தேவியின் தாய்மையையும் பரிவையும் உணர்ந்த பக்தர்கள் துதி வழிபாடு முதலியவற்ருல் தேவியை அணுக இயலும். அவ்வாறு இல்லாதவன் தேவியை அருகில் நின்று காண வேண்டுமென்ற தவிப்புடன் அதற்குத் தன் தகுதியின்மையை உணர்ந்து கண்களுக்கெட்டாத தூரத்தில் நிற்பான். தேவியின் பார்வைக்கு உட்படாத இடமே இல்லை. தேவிக்கும் காணமல் தவிப்பவனுக்குமிடையே எத்தனை தூரமிருந்தாலும் தவிப்பவனைச் சென்றடையவென பார்வையும் விரிந்து நீண்டு கொண்டே போகும். அதற்கொரு எல்லையில்லை. மிக மிக நீளமான பார்வை த்ராகீயஸீ அந்த எளியவனும் வெகுதூரத்திலிருப்பவன். (தவீயாம்ஸம் தீநம்) வெகு தூரத்தில் நிற்கிற தன்னையும் கண் குளிரப் பார்க்கும்படி வேண்டுகிருர். பலர் அந்நிலையிலுள்ளனர். குறிப்பாகத் தன்னைப் பார்க்காவிடினும் கண்ணேட்டமாகப் பார்க்கலாமே. இது அவசியமா எனில் அவசியமே. நான் கொடுத்து வைத்த தன்யனகி விடுவேன். தேவிக்கு அவ்வாறு காண்பதால் என்ன லாபம் எனில் எதிலும் லாபம் தான் முக்கியமா ? நஷ்டமேதுமில்லையே. அவ்வாறு எண்ணுகிற பிரபு உலகில் உள்ளாரா எனில் சந்திரன் உள்ளான். காட்டிலும் உப்பரிகை

மாடியிலும் நிலவு ஒரே விதமாகத் தான் விழுகிறது. தேவியோ சந்திரனைக் கண்ணில் புருவத்தில் நெற்றியில் கிரீடத்தில் மார்பில் இடது பக்கத்தில் எனப் பல இடங்களில் கொண்டுள்ளாள். அந்த சந்திரனுக்கே இந்த ஸமப்பார்வை உள்ளது எனக் கோடி காட்டுகிருர்.

## அராளம் தே பாலீயுகலம்

### சுலோகம் -58

பாலீ என்பது கண்ணிற்கும் காதுக்கும் இடையே உள்ள கன்னமேடு. காதின் மேல் பகுதியிலிருந்து கீழ்வரை தொங்குகிற காதணி என்பதுமுண்டு. இப்பகுதியும் அந்த ஆபரணமும் வில் போல் வளைந்துள்ளன. கடாக்ஷ வீச்சு வில்லில் அம்பு தொடுக்கிற மாதிரி அமைந்துள்ளது. சிவனைக் குறியாக்கி மன்மதன் வில்லை நாணேற்றி அம்பைத் தொடுக்கிறுன். கடைக் கண்ணின் காது வரை உள்ள தொடர்பும், கடாக்ஷ நெருப்பும் இதனை நிரூபிக்கிறது.

## ஸ்புரத் கண்டாபோக

### சுலோகம் -59

கன்னப்பகுதி கண்ணுடி போன்று அப்பழுக்கின்றி மழமழப்புடன் உள்ளது. காதில் தாடங்கம் மேலும் கீழுமுள்ள இருவட்டப் பகுதிகளால் அழகுற்றது. அந்தத் தாடங்கம் கன்னமாகிய கண்ணுடியில் பிரதிபலிக்கிறது. தாடங்கத்தின் இருவட்டப் பகுதிகளும் இருகன்னங்களில் பிரதிபலிக்க, முகமாகிய தேரின் நான்கு சக்கிரங்கள் போன்று தெரிகின்றன. தேவியைப் பார்க்கத் திரிபுராரியான சிவன் சூர்யனையும் சந்திரனையும் சக்ரமாகக் கொண்ட பூமியாகிய தேரில் ஏறிவருகிருர். மன்மதனைக் கண்டதும் போருக்கு ஆயத்தமாகிருர். மன்மதனும் கன்னத்தில் பிரதிபலிக்கிற நான்கு தாடங்கச் சக்கிரங்கள் கொண்ட முகமாகிய தேரில் பெரும் வீரனுக அமர்ந்து முன்னேறுகிருன். சிவனது தேருக்கு ஸூரியனும் சந்திரனுமாகிய இரு சக்கிரங்கள். தேவியால் படைக்கப் பெற்ற பூமி தேர். இங்கு தேவியின் முகமே தேர். முகமாகிய தேரால் தேவியே மன்மதனைத் தாங்குகிருள். மன்மதனுக்கு வலிவு அதிகம்.

## ஸரஸ்வத்யா: ஸூக்தீ:

### சுலோகம் -60

ருத்ரனுக ஸம்ஹார காலத்தில் உலக உருவைச் சிதைக்கிற சிவன் சர்வர். எப்போதும் எதிலும் சர்வனது அனைத்துப் பணிகளிலும் சக்தியாகத் துணையிருக்கிற தேவி சர்வாணீ. ஸரஸ்வதி தன்னைப் பாராட்டுவதைக் காது குவித்துத் தேவி கேட்கிருள். ஸரஸ்வதியின் வாக்காகிற அமுதத்தைப் பருகுகிற சிறு கிண்ணம் போல் தேவியின் காது குவிகிறது. அவள் பேச்சின் உண்மையறிந்து அதை ஆமோதித்துத் தலையாட்டுகிருள். காதில் தொங்குகிற குண்டலம் ஆடி அதன் மணிகள் ஜண் ஜண் என ஒலிக்கும் போது ஸரஸ்வதியின் பேச்சைக் குண்டலங்களும் கேட்டுக் கைதட்டுகின்றன போலும்.

## அஸௌள நாஸாவம்ச:

சுலோகம் -61

*தேவி ஹிமவானின் குலத்தின் பெருமையை வானளாவி நிற்கிற கொடியாக வெளிப்படுத்துபவள். அவளது க்கு ங்கில் குருத்து போல் நீண்டு அழகாக உள்ளது. அதன் நுனியில் முத்தணி தொங்குகிறது. எனக்கு அதைப் பார்த்ததும் இவ்வாறு தோன்றுகிறது. சந்திர நாடி வழியே உள்ளே ச்சு செல்லும் போது காற்றிலுள்ள ஜலாம்சம் அதிகம் ஆகும். அந்த ஜலம் இறுகி முத்துக்களாகி உள்ளே நிரம்பி இடமின்றி வெளியே வழிந்து முத்துமணியாகத் தோன்றுகிறதென. (சிசிரதர என்ற பாடமுண்டு - மிகவும் சில்லிட்ட ச்சுக்காற்று இறுகி முத்தாகிறது என்று பொருள்.) அந்த க்கு தன்னைப் போன்று அண்டியவர்கள் கோருகிறதைக் கைக் கெட்டுகிற கனியாக - உடன் பயன் தரத்தக்கதாக அருகாமையில் கொணர்ந்து அருளட்டும்.*

## ப்ரக்ருத்யா ரக்தாயா:

சுலோகம் -62

*தேவியின் உதடு சிவந்து அழகாக உள்ளது. அந்தச் சிவப்பிற்கு இணையான பொருளைக் காணோம். பவழம் உள்ளதே எனில் பவழக் கொடியின் சிறப்பு ஈடாகாது. (பவழம் - ஒரு பூச்சியின் எலும்புக் கூடு) அது வரண்ட நிறம். கொடி போன்று காணப்படுவதால் வித்ருமலதா - பவழக் கொடி என்பர். அது தாவரமான கொடியாகிக் காய்த்துப் பழுத்த கனி உண்டானால் அது ஈடாகலாம். கொடியின் சிகப்பை விடப் பழத்தின் சிகப்பு கூடும். மற்றொரு உதாரணப் பொருள் கோவைப்பழம். இங்கோ கோவைப் பழமே உதட்டின் எதிரில் நின்று உதட்டின் சிகப்பு தன் மீது பிரதிபிம்பமாகவாவது படரட்டுமே என எதிர்பார்க்கிறது. இயல்பான சிகப்பிற்கு பிரதி பிம்பச் சிகப்பு ஈடாகுமா ?*

## ஸ்மிதஜ்யோத்ஸ்நா

சுலோகம் -63

*தேவியின் புன் சிரிப்பு சந்திரனது ஒளி கொண்டது. சந்திரனது கிரணம் அமுதம் பொழிவதைப் போல் இதுவும் அமுதம் பொழிகிறது. சகோரபட்சிகள் சந்திரனின் கிரணத்திலிருந்து பெருகுகிற அமுதத்தைப் பெற கிரணங்களையே பருகும் என்பர். வேறு உணவை அவை ஏற்காது. வழக்கமாக அந்த அமுதத்தைக் குடித்த அவை ஒரு நாள் தேவியைக் கண்டன. தேவியின் சிரிப்பே சந்திரனாகத் தோன்றவே அதன் அமுதத்தைப் பருகின. அதன் அதிக இனிப்பு பறவையின் வாய்க்கு மிகவும் பிடித்து விட்டது. அதனையே மேலும் மேலும் பருகப் பருக நாக்கின் ருசி உணர்வு மறத்துப் போய் விட்டது. அந்த இனிமையை உள்ளம் விரும்ப, நாக்கு ஒத்துழையாத போது, நாக்கின் உணர்வின்மையைப் போக்க அதற்குப் புளித்த காடி தேவைப்பட்டது. அப்போது நிலவமுதமே புளித்த காடியாக அதற்குப் பயன்பட்டது. மிகவும் இனிய நிலவமுதமே புளித்ததாயின் தேவியின் சிரிப்பாகிய சந்திர நிலவு மிக மிக மிக இனியதாயிருக்கிறது என்று ஆகிறதல்லவா ?*

## அவிச்ராந்தம் பத்யு:

சுலோகம் -64

*தேவியின் நாக்கின் நுனியில் ஸரஸ்வதி அமர்ந்திருக்கிருள். தேவி எப்போதும் தன் பதியான சிவனின் பெருமையைப் பற்றித் திரும்பத் திரும்ப ஜபம் போல் பேசிக் கொண்டிருக்கிருள். தொடர்ந்த பேச்சால் நாக்கு சிவக்கிறது. அதன் ஒளி ஸரஸ்வதியின் மேல் படர்ந்து வெள்ளை நிறமுள்ள அவளைச் சிவந்தவளாக ஆக்குகிறது. சிகப்புப் பொருளின் மீது வைக்கப் பெற்ற ஸ்படிகக் கல் சிவந்ததாகக் காணப்படும். மறுபடி ஸரஸ்வதி தன் வெண்ணிறத்தை மீண்டும் பெறுவாளா ? தேவியும் பதியைப் பற்றிய பேச்சை நிறுத்தப் போவதில்லை. ஸரஸ்வதியும் தன் வெண்ணிறத்தை மீண்டும் பெறப் போவதில்லை.*

## ரணே ஜித்வா

சுலோகம் -65

*குகனும் இந்திரனும் ஹரியும் அஸுரர்களுடன் போரிட்டுத் திரும்பி தேவியிடம் போர் முடிவைத் தெரிவிக்க அவளை அணுகும் போது அவரவர் தன் தன் தலைக்கான கவசத்தைக் கழற்றி, உடலில் பூண்ட கவசத்தைத் தரித்த படியே உள்ளே நுழைகின்றனர். தேவி தாம்பூலம் தரித்து உமிழ்கிற தாம்பூலக் கலவையை அதன் களாஞ்சி ஏந்தியவரிடமிருந்து பெறுகின்றனர். பச்சைக் கர்பூர மணத்துடன் உள்ள துப்பிய தாம்பூலத்தை நாக்கால் சுவைத்து அவர்கள் விழுங்குகின்றனர். இவர்கள் சிவனிடம் சென்று போர் முடிவைப் பற்றித் தெரிவிக்கவில்லை. சிவ ஸந்நிதியில் சிவனது அருட்பிரஸாதம் முதலில் சண்டிகேசனுக்கு அளித்த பிறகே மற்ற எவருக்கும் அளிக்கப் பெறும். அது அங்குள்ள வழக்கம். குகனுக்கோ விஷ்ணுவிற்கோ ஏற்பதற்கியலாதது.*

## விபஞ்ச்யா காயந்தீ

சுலோகம் -66

*தேவி ஸபையில் வீற்றிருக்க, அவளது எதிரில் அமர்ந்த ஸரஸ்வதீ வல்லகீ, பரிவாதினீ விபஞ்சீ என்று புகழ்பெற்ற என்ற வீணையை மீட்டிச் சிவனின் பெருமை பற்றிப் பாடுகிருள். தேவி அதனைத் தலையாட்டிக் கொண்டு கவனத்துடன் கேட்கிருள். உருக்கமான கதைப் பகுதியைக் கேட்டதும் தேவி ஸரஸ்வதியின் குரலையும் சொல்வன்மையையும் பாட்டையும் புகழத் தொடங்கிஞள். உடன் ஸரஸ்வதி தனது வீணை தன் இனிமை இழந்து விட்டதோ, தன் குரல் அபஸ்வரமாகி விட்டதோ என்ற பதற்றத்துடன் பாட்டை நிறுத்தி வீணையை அதன் ஒளி நீட்டிப்பு அடங்கும்படி உறையிலிட்டு விடுகிருள். தேவியின் குரலின் இனிமையில் வீணையின் மீட்டல் ஒலியலையும் தானே மங்கிவிட்டது. ஸரஸ்வதியும் உறையைப் போட்டு அதனை மேலும் அடக்கிவிட்டான்.* நிஜஸல்லாப மாதுர்ய விநிர்ப்பர்தஸித கச்சபீ *(ல.ஸ)*

## கராக்ரேண ஸ்பருஷ்டம்

சுலோகம் -67

தேவியின் முகவாயைத் தொட்டுப் பார்க்க இருவரால் முடியும். ஹிமவான் தன் அன்புக்கு முழு உரிமை பெற்றவள் என்பதால் அவர் தேவியைக் கொஞ்சி விளையாட வாத்ஸல்யத்துடன் கைவிரல் நுனியால் தொட்டு முகத்தைப் பார்த்து மகிழ்வார். மற்றொருவர் சிவன். இவர் இரு காரணங்களுக்காக முகவாயை விரல் நுனியால் தூக்குவார். ஒன்று ஆசையுடன் முத்தமிட. இரண்டு முகம் கண்ணாடி போன்றிருப்பதால் அதில் தன் முகத்தின் பிரதிபிம்பத்தைக் காண்கிற பரபரப்பு. மற்ற அவயவங்களுக்குக் கவிகள் காட்டுகிற உவமைப் பொருள் போன்று முகவாய்க்கட்டைக்கு ஏற்ற உபமானப் பொருள் இல்லை. சிவனுக்கும் ஹிமவானுக்கும் மட்டும் ஏகபோகமாக உள்ள தேவியின் முகவாய்க் கட்டைக்கு ஈடான உபமானப் பொருள் இல்லை என்றே உறுதியாகக் கூறலாம். அநா கலித ஸாத்ருச்ய சிபுக ஸ்ரீவிரா ஜிதா: *(ல.ஸ)*.

## புஜாச்லேஷாந் நித்யம்

சுலோகம் -68

தாமரை மலரைத் தாங்குகிற தாமரைத் தண்டு பச்சை நிறமுள்ளது. தண்டு முழுவதிலும் கூரான முனையுள்ள வியர்வைக் குரு போன்ற முண்டுகள் நிறைந்திருக்கும். ஒடித்தால் உள்ளே மிகமெல்லிய நூல் போன்ற தாது தெரியும். தேவியின் முகம் தாமரை போன்றுள்ளது. அதன் கீழுள்ள தண்டு போல் கழுத்துள்ளது. சிவனது புஜ அணைப்பால் ரோமாஞ்சம் ஏற்பட்டு தண்டு மேலுள்ள முள் போன்று கழுத்தைச் சுற்றிலும் சிலிர்ப்பு தெரிகிறது. இயல்பாக வெண்ணிறம் கொண்ட கழுத்தின் மீது காரகிலாலான பூச்சு பாசி படர்ந்தது போல் பசுமையுடன் தெரிகிறது. தாமரைத் தண்டின் அழகை மார்பின் மீது படிந்துள்ள ஹாரம் தாமரை நூலாகத் தெரிவிக்கிறது. முகம் தாமரையானால் அதன் மற்ற பகுதிகளும் கழுத்திலும் மார்பிலும் புலப்படுகின்றன.

## கலே ரேகாஸ் திஸ்ரோ

சுலோகம் -69

தேவியின் கழுத்தில் ன்று குறுக்குக் கோடுகள் உள்ளன. திருமணத்தின் போது சிவன் கட்டிய மங்கள ஸூத்திரத்தின் ன்று சுற்றுகள் போல் அவை காணப்படுகின்றன. கதி கமகம் கீதம் என்ற ஸங்கீதத்தின் முக்கிய நிலைகளை அவை தெரிவிக்கின்றன. வைகரீ என்ற சப்தத்தின் முழு உருவம் வெளிப்படுகிற இடம் தொண்டை. அதனைச் சுற்றி ரக்ஷைக் கயிறு போன்ற இந்தத் திருமாங்கல்யச் சரடு உள்ளது. இன்றைய திருமாங்கல்யச் சரடு மார்பு வரை தொங்குவதாக அமைந்துள்ளது. கழுத்தைச் சுற்றி ன்று சரடுகள் முடிப்புகள் ஆசார்யர்கள் காலத்தில் இருந்திருக்கலாம். பிரும்மா, விஷ்ணு, சிவன் என்று அந்த ன்று சரடுகளை வணங்குவர். நூலைத் திரித்து ன்று தடவை மடித்துத் திரித்து மறுபடி ன்றாக மடித்துத் திரித்து மறுபடி திரித்ததாக அந்த ஸூத்திரம் அமையும். இது தேசத்திற்குத் தேசம்

மாறுபடுகிறது. தொண்டை ஸங்கீதத்தின் விரிவிற்கு முக்கிய ஸ்தானம். ஏழு ஸ்வரங்களையே கொண்டிருந்தாலும் நூற்றுக்கணக்கான ராகங்களை உருவாக்கி வெளியாக்குகிற சுரங்கம் தொண்டை. அது மனோதர்மப்படி விரிவதாயினும் அது ஒரு எல்லைக் கோட்டை வகுத்துக் கொண்டுள்ளது. அதனை மீறாமல் கட்டுப்படுவதே அதற்கு அழகு, கடமையும் கூட. அது போல் பதிவிரதா தர்மத்தின் எல்லைக் கோடு போடும் நூலே தாலிக்கயிறு. தாலிக் கயிற்றின் ன்று சுற்றுக்களின் அடையாளமே கழுத்தில் உள்ள ன்று வரிக்கோடுகள். **காமேசபத்தமாங்கல்ய ஸூத்ர சோபிதகந்த்தரா** (ல.ஸ)

## ம்ருணாலீம்ருத்வீநாம்

 சுலோகம் -70

பிரும்மா செய்த தவறுக்காக சிவன் பிரும்மாவின் ஒரு தலையைக் கிள்ளி எறிந்தார். படைப்பிற்கான பரபரப்பில் மீண்டும் தான் தவறிழைக்கக் கூடுமென்று பயந்து தேவியிடம் சென்று தன் நான்கு தலைகளாலும் அவளது திருவடிகளில் வணங்கி எழுந்த போது தன் நான்கு தலைகள் மீது தேவி தன் நான்கு கைகளை வைத்தருள வேண்டித் துதிக்கிறார். தேவியின் கரஸ்பர்சம் பட்டபின் சிவன் அதனிடம் பரிவு காட்டுவார், தண்டிக்கமாட்டார். ஒரு கையே அபயமளிக்கப் போதுமெனினும், நான்கு தலைகளிலும் ஒரே சமயத்தில் அருள் புரிய நான்கு கைகளையும் வைப்பாள் என்று எதிர்பார்த்து நான்கு தலைகளாலும் துதிக்கிறார். ஒரே கை நான்கு தலைகளில் அருள் புரிவதால் தாமரைத் தண்டு போல் மென்மை மிக்க கைகள் துவண்டு போகுமோ என்ற தாயிடம் பிரும்மாவிற்குள்ள கரிசனமும் தெரிகிறது.

## நகாநாமுத்யோதை:

சுலோகம் -71

சிவனின் நகங்கள் சிக்ஷணத்தால் சிவந்தன. உன் நகங்களோ தம் சிவந்த ஒளிக்கதிர்களால் அன்றலர்கின்ற தாமரையின் சிகப்பை இயல்பாகவே எள்ளி நகைக்கின்றன. நகச்சிகப்பையே முழுவதும் உணராத நிலையில் அதனைத் தாங்குகிற கைகளின் காந்தியும் ஒப்புவமையற்றுள்ளது. தாமரை மீது அமர்ந்திருப்பவள் லக்ஷ்மீ தேவி. தன் மேனியொளியால் தாமரையை மேலும் சிவக்கச் செய்கிறாள். அத்துடன் விளையாட்டால் சரணங்கள் மேலும் சிவக்கின்றன. சரணங்களுக்குக் கொம்பரக்கின் சாயம் வேறு பூசப்பட்டுள்ளதால் சிகப்பின் உச்ச நிலை. அது அவள் அமர்ந்துள்ள தாமரை மீது படர்ந்தால் தாமரை செந்நிறத்தின் உச்சத்தையடையும். அந்தத் தாமரை ஒருக் கால் ஏதேனும் ஒரு அம்சத்தில் தேவியின் கைகளின் சிகப்பிற்கு ஒப்புவமை பெறலாம்.

## ஸமம் தேவி ஸ்கந்த

சுலோகம் -72

தேவியின் ஸ்தன்யத்தை ஸ்கந்தனும் ஆனைமுகத்தோனும் ஒரே நேரத்தில் பருகுகின்றனர். சின்னக் குழந்தையானதால் ஸ்கந்தன் முந்திக் கொள்கிறான் போலும். சிறு

குழந்தை நிலையில் வேறு சிந்தனையின்றிப் பாலைக் குடிக்கிறான். த்தவருக்கோ நடுநடுவே தன் தலையைத் தடவிக் கொள்ளும் பழக்கம். தேவியின் மார்பகத்தையும் தன் மத்தக மேடுகளையும் பரபரப்புடன் மாறி மாறிப் பார்க்கும் போது கணேசருக்கு ஒரு ஸந்தேகம் ஏற்படுகிறது. தன் மத்தகமேடு பால் குடிக்கும்போது தாயின் மார்பில் ஒட்டிக் கொண்டதோ என சந்தேகத்துடன் தன் தலையைத் தடவுகையில் தாயின் மார்பகம் தன் தலையில் ஒட்டிக் கொண்டுவிட்டதா என. மறுபடி சந்தேகம். சிறுவனின் இந்தப் பரபரப்பைக் கண்டபெற்றோர் கணேசனின் பேதைமையை ரசித்துச் சிரிக்கின்றனர். தேவியின் மார்பகம் யானை மத்தகம் போன்றுள்ளது. பாலர்களுக்கிடையே போட்டி என்றவாறு கவியின் உள்ளம் இக்காட்சியைக் காண்கிறது. விரஸ சிந்தனையின்றி இந்த சுலோகத்தைக் கொண்டு தேவியின் தாயுள்ளத்தைக் காணலாம்.

## அ தே வக்ஷோஜௌ

### சுலோகம் -73

தேவியின் மார்பிலிருந்து பெருகிற ஸ்தனங்கள் என்ற அமிருத ரஸத்தை உள்ளடக்கியிருக்கிற மாணிக்கத்தாலான குடுவை(பை)கள். அதில் ஐயத்திற்கு இடமில்லை. இந்த அமுதம் சாவா மருந்துமட்டுமல்ல. ஜ்ஞானப் பாலும் கூட. தலையும் உடலும் பொருந்தாதவர் கணபதி. மனித (தேவ) உடலும் யானைத் தலையும் எனில் தலை (லை) இட்ட கட்டளையை உடலால் நிறைவேற்ற இயலாது. உடலுக்கு இதமானதைத் தலை சிந்தியாது. இவ்விரண்டும் ஒன்றிச் செயல்படுத்தத் தேவியின் ஸ்தன்யம் ஆற்றல் தருகிறது. இளையவன் தன் கையால் க்ரௌஞ்ச மலையைப் பிளந்து சிதைக்கிற ஆற்றல் பெற்றதும் இந்தப் பாலின் பெருமை தான். மலையரசனின் பேரன் மலையைப் பிளக்கிறான். மற்றும் ஒரு அதிசயம் அவர்கள் பெண்ணுறவை அறவே நீத்தவர்கள் எனில் பெண்ணின் பால் பெண்ணுறவைத் தவிர்க்கச் செய்ததாகிறது. இதுவும் விந்தை தானே ! (கணேசருக்கு ஸித்தியும் புத்தியும் வல்லபையும் மற்றும் பலரும் தேவியர் - முருகனுக்கு வள்ளியும், தேவஸேனையும் என்பது அவதார நிலை போன்ற நிலை மாறுதல். வாமனர் பிரும்மசாரி, ராமர், ஏகதாரவிரதர், கிருஷ்ணர் எண்ணற்ற பெண்களுடன் என்றாலும் ல வஸ்து பரவாஸ¬ தேவன் என்பது போல் கொள்ளத்தகும்).

## வஹத்யம்ப

### சுலோகம் -74

கஜாஸ¬ரனை வென்ற கணபதி அவன் மத்தகத்தைப் பிளந்தெடுத்த முத்து மணிகளைக் கொண்டு ஹாரம் செய்து தேவியிடம் அளித்தார். (யானை மத்தகம், ங்கில், பாம்பின் தலை, சிப்பி, மேகம், கரும்பு, என முத்து தோன்றுமிடங்கள் பல உண்டு.) மார்பகத்தில் தொங்குகிற முத்தாரத்தின் மீது சிவந்த உதடுகளின் ஒளிபட்டு நடு நடுவே செந்நிறம் தெரிகிறது. சிவனின் புகழ் வெளுத்தது. அவரது பேராற்றல் சிவந்தது. இவ்விரண்டும் மணியாகி அந்த ஹாரம் இவற்றால் அமைந்ததோ ?

## தவ ஸ்தந்யம் மந்யே

சுலோகம் -75

*மலைமகளின் மார்பிலிருந்து பாற்கடல் போல் பால் பெருகுகிறது. தேவியே பரிவுடன் தாயாகி ஒரு திரவிட தேசத்துச் சிசுவை மடியில் அமர்த்திப் பால் அருந்தச் செய்திருக்கிறாள். ஒரு பெருங்கவியாகி அந்தப் பாலன் வயது முதிர்ந்த பெரும் கவிகளுடைய நன்மதிப்பைப் பெற்றிருக்கிறான்.*

*ஆசார்யாளுக்கு முன்னிருந்த எல்லையற்ற காலவரையில் அப்படி ஒரு சிசு ஆசார்யாள் நினைவு கூறும்படி தோன்றியிருக்கலாம். தன்னையே அவ்வாறு கூறியிருக்கலாம். கேரளம் என்ற தனிச்சிறப்பின்றி கேரளமும் திரவிடமாக இருந்தது உண்டு. தன்னை திரவிட சிசு எனப் பெருமையுடன் பெயர் குறிப்பிடாமல் சொல்லியிருக்கலாம். தாயன்புடன் தேவியின் முலைப்பால் பெற்றுப் பேரறிஞர்களானவர் பலர். திருஜ்ஞான ஸம்பந்தர், கர், காளமேகப் புலவர் என்ற வரிசையில் ஆசார்யாளுக்குப் பின் தோன்றியவர்களையும் நாம் நினைவு கூறலாம்.*

*ஸ்ரீ சங்கர விஜயங்களில் ஆசார்யாளின் பால நிலையில் நடந்த வரலாறு - ஆசார்யாளின் தந்தை சிவகுரு தன் இருப்பிடத்திற்கு அருகாமையில் மாணிக்யமங்கலம் என்ற கிராமத்திலிருந்த தன் குல தெய்வமான காத்யாயினியைத் தினமும் பால் கொண்டு சென்று நிவேதனம் செய்து வழிபடுவார். பாலரான ஆசார்யாளும் அவருடன் செல்வார். தேவிக்கு நிவேதனம் செய்த பாலை சிவகுரு பாலகனுக்குத் தர அதை அவர் பருகுவது வழக்கம். ஒரு சமயம் சிவகுருவிற்கு கிராமத்திற்கு வெளியே செல்ல நேர்ந்தது. ஆர்யாம்பாளிடம் தேவியை வழிபடக் கூறிச் சென்றார். அவளும் அவ்வாறே செய்து பாலகனுக்கு நிவேதனம் செய்த பாலைத் தந்தாள். வீட்டிற்கு விலக்கமாகும் நாட்கள் இடையில் நேர்ந்ததும் பாலனே தானே சென்று வழிபடுவதாகக் கூறியதை ஏற்றாள். பாலன் கோவிலுக்குச் சென்று வழிபட்டுத் தாய் தந்த பாலைத் தேவியின் முன் வைத்து அதனைக் குடிக்கும்படி வேண்டினான். அங்கு எந்த மாறுதலுமில்லாதிருப்பதைக் கண்டு, வழிபடத் தகுதியற்றிருப்பதால் தான் தந்த பாலைத் தேவி குடிக்க மறுக்கிறாள் என அது எண்ணி அழுததும் தேவி பரிவுடன் தோன்றி பாலைக் குடித்தாள். பாத்திரம் காலியானதைக் கண்ட பாலன் தனக்குக் குடிக்க பால் ஏன் மீதமாக வைக்கவில்லை என்று விக்கி விக்கி அழுதான். தேவி கணபதிக்கும் குகனுக்கும் மட்டுமே தன் பாலைத் தந்து பழகியவள். இன்று பாலனின் எளிமையைக் கண்டு தன் பால் ஊட்டினாள். அதனால் ப்ரௌட கவியாக ஆசார்யாள் விளங்கினார். திருஜ்ஞான ஸம்பந்தரின் வரலாறும் இத்தகையதே. ஆனால் அவர் ஆசாரியாளுக்குப் பின் தோன்றியதால் இந்த சுலோகம் அவரைக் குறிப்பிடத்தகாது. இவ்வாறு வேறு பல வரலாறுகளைச் சொல்வர்.*

## ஹரக்ரோத ஜ்வாலா

சுலோகம் -76

*மன்மதன் சிவனின் கொழுந்து விட்டெரிகிற நெற்றிக் கண் தீயால் சுட்டெரிக்கப் பெற்று உடல் தணல் நிலையடைந்ததும் எரிச்சல் தாளாமல் ஏதேனும் ஒரு குளத்தில் ழ்க*

நினைத்தான். சிவ கோபத் தீயின் எரிச்சலைத் தணிக்க எந்த நீர் நிலயத்தாலும் இயலாததால் தேவியிடம் அணுகியதும் லோகமாதாவின் ஆழ்ந்த தொப்புள் ஒன்றே கதி என அதில் ழ்கினுன். அதன் சில்லிப்பில் கொதிப்படங்கியதும் அவன் அதிலேயே ஒட்டிக் கொண்டு விட்டான். தீயணைந்ததும் அதன் புகை தொப்புளிலிருந்து வெளியேறி கொடி போன்று மார்பகம் வரை சென்றது. உலகம் அதனை வயிற்றின் மீதுள்ள உரோமவரிசை எனக் கருதுகிறது. கவியின் ஊஹம் அப்படி. தேவியின் மேல் வயிற்றின் நடுவில் அழகிய ரோமாவளி தெரிகிறது. தந்தையின் சிக்ஷையைத் தாங்காத பாலன் தாயின் மடியைச் சரணடைந்து பதுங்குவது போல் மன்மதன் பதுங்கித் தாபமகன்றதை உணர்ந்தான்.

## யதேத் காலிந்தீ

### சுலோகம் -77

தேவியின் மேல் வயிற்றிலுள்ள ரோமாவளி பிறர் கண்களுக்குப் புலப்படாதது. ஆகாசத்திற்கு உருவமோ நிறமோ கிடையாதெனினும் உலகின் கண்களுக்கு நீலமாக பரப்பு மிக்க இடமாகக் காட்சி தருகிறதல்லவா ? அந்த ஆகாசம் போன்றதே ரோமாவளி. ஆகாசம் எதனிடமிருந்தும் விலகாததும் கூட. இடம் தருவதென்ற நிலையுமில்லை. நீக்கமற நிறைந்தது அது. யமுனையின் நீருக்கும் நிறமில்லை. ஆனுல் அதன் நீரின் அடர்த்தி யமுனை நீலநிறமுள்ளது என்று கூறச் செய்தது. ஸ்தூல நிலையிலும் இந்த மாயத்தோற்றம் உண்மைத் தோற்றமாகக் காட்சி தரும். தேவியின் மார்பகம் கிரமமாகப் பருத்ததும் நடுவிலிருந்த இடைவெளி மெள்ள மெள்ளக் குறைந்து இடைவெளியில்லை என்ற நிலைக்கு வந்தது. அந்த இடைவெளியில் குடியிருந்த ஆகாசம் பிதுங்கி வெளிவந்தது. கீழிறங்கி யமுனையின் மெல்லிய நீரோட்டமாகியது. இளைத்துச் சிறுத்த நடு வயிற்றில் ரோமாவளி என்ற பெயரில் மார்பகத்திலிருந்து வெளியான ஆகாயம் யமுனையின் மிகச் சிறு நீரோட்டமாகிப் பள்ளமான தொப்புளினுள் சென்று மறைகிறது.

## ஸ்திரோ கங்காவர்த:

### சுலோகம் -78

தொப்புள் விதவிதமாகக் காட்சி தருகிறது. தாயுடன் சிசுவிற்கு நேர்ந்த தொடர்பின் அடையாளம் அது. விஷ்ணுவின் நாபி கமலத்திலிருந்து தாமரை தோன்றி அதில் பிரும்மாவும் உலகமும் தோன்றியது. இதற்காகவே பிறப்பற்ற விஷ்ணுவிற்குத் தொப்புள். தேவி தானே தாயின் வயிற்றில் தங்கி வெளிவந்த ஸதீ, பார்வதி முதலான தோற்றங்களில் தொப்புளிருக்க வாய்ப்புண்டு. சிவனுேடு இணைந்திருந்த - சிவனிடமிருந்து வேறுபடாத பராசக்திக்குத் தொப்புள் ஏது ? எனில் பெண் வடிவின் லப் பொருளாகத் தன்னைக் காட்டத் தேவி எடுத்த ஸகுணத் தோற்றமாதலால் ஆழ்ந்த தொப்புள் உள்ளது. கங்கையின் பிரவாஹத்தில் நடுவில் தோன்றுகிற சுழல் போல் ஆனுல் கங்கைச் சுழலைப் போல் நிலையற்றதாக இல்லாமல் நிலைத்த சுழலாகக் காட்சி தருகிறது. ஸ்தனமாகிற இரு தாமரை மொக்குகளின் கொடி போன்ற ரோமாவளியின் பாத்தி போன்றும் காட்சி தருகிறது. மன்மதன் ஒரு நெருப்பு போல் எரிப்பான். காமாக்கினி என்பர். அதற்கான குண்டமாகவும் இருக்கக் கூடும். ரதி தனது விளையாட்டிமாக இதனைக் கொண்டிருக்கக் கூடும். ஆழ்ந்த

பள்ளம் மறைவிடமாகக் காட்சி தருகிறது. சிவனது பார்வை இங்கு ஆழப்பதிகிறது. சிவனது கண்கள் தன் விருப்பத்தை நிறைவுறப் பெற்ற ஸித்தி ஸ்தலமாகவும் இருக்கலாம். கண்களுக்கு மட்டுமே இக்காட்சி புலப்பட்டதாகையால் சிவனே இவ்வாறு வியந்து கண்டு தன் கண்கள் இன்று தான் முழுப் பலனை அடைந்தன - ஸித்தி பெற்றன என மகிழ்கிறுர். இதுவே நாபிக்கு நேர்ந்த வெற்றி - விஜயதே, நாப்ப்யாலவால ரோமாலி லதா பல குசத்வயீ. லக்ஷ்ய ரோமலதாதாரதா ஸ முன்னேய மத்த்ய மா.

## நிஸர்க க்ஷீணஸ்ய

### சுலோகம் -79

தேவி பெண்ணினத்திற்கே திலகம். பெண்களின் இடை இயல்பாகச்சிறுத்திருக்கும். நாரீதிலகமானவளுக்கு மேலும் சிறுத்துள்ளது. அதன் மேற்பகுதியில் பருத்த கனத்த மார்பகம். அதன் சுமையை தாங்காமல் உடலின் மார்புப் பகுதி முன் வளைந்துள்து. கனம் தாங்காமல் இடை ஒடிந்து விடக்கூடும். இரு கரைகளும் ஆறு புரண்டோடும் போது ஆற்றின் கரையிலுள்ள மரங்கள் கரை உடைந்து தளர்ந்து வேர் ஊன்ற முடியாமல் சாய்ந்து விழுமாப் போல் இடை ஒடியும் நிலை ஏற்பட்டுள்ளது. தேவி மலைமகளானதால் இது பற்றி அனுபவம் முன்னரே பெற்றிருப்பாள்.

## குசௌ ஸத்யஸ் ஸ்வித்யத்

### சுலோகம் -80

இடுப்பு ஒடிகிற நிலையிலுள்ளதைக் கண்ட மன்மதன் பாதுகாக்க ஏற்பாடு செய்கிறுன். பிராணநாதனின் நினைவு அடிக்கடி நேர மார்பகம் அளவிற்கு மீறி விம்முகிறது. முன் அளவெடுத்துத் தைத்த ரவிக்கை வியர்வையில் நனைந்து தோள் வளையை அழுத்துகிற ஸ்தனபாரம் தாங்காமல் கிழிந்து விடக் கூடும். இடுப்பும் ஒடிந்து விடும். இதனைக் கண்ட மன்மதன் உடன் வள்ளிக் கொடிகளால் ன்று சுற்று இடையை இழுத்துக் கட்டுகிறுன். இடுப்பு நிமிர்ந்து சுமையைத் தாங்குகிறது. அந்தக் கொடிச்சுற்று தான் இடையில் தெரிகிற ன்று சதை மடிப்புகள். ஸ்தனபாரதளன் மத்த்ய பட்ட பந்த வலித்ரயா (ல.ஸ) பிரும்மனின் படைப்பில் இந்த அமைப்பில்லாததால் மன்மதனின் படைப்பு என்று கற்பிக்கிறுர்.

## குருத்வம் விஸ்தாரம்

### சுலோகம் -81

பார்வதியின் திருமணத்தின் போது சீதனமாகப் பலவற்றை மகளுக்குத் தந்தும் மன நிறைவு பெருத இமவான் தனக்கு மட்டுமே இயல்பாக அமைந்த கனத்தையும், பருமனையும் தன் தாழ்வரையிலிருந்து வெட்டி அகற்றிப் பார்வதியிடம் சீதனமாகக் கொடுத்திருக்கிறுன். பூமி இதுகாறும் தான் தான் பருத்தவள், கனத்தவள் எனக் கொண்டிருந்த இறுமாப்பு அகன்று பருமனிலோ கனத்திலோ தான் தேவியை விடக் குறைந்துள்ளதை உணர்கிறுள்.

## கரீந்த்ராணும் சுண்டான்

சுலோகம் -82

தேவி வழிமுறை அறிந்தவள். அவளது தொடை யானையின் துதிக்கையையும் தங்க வாழையின் நடுப்பகுதியையும் வென்றது. அவளது முழங்கால் பரமேசுவரனை வணங்கி வணங்கி உரம் பெற்றது. தொடையின் அழகை காமேசன் மட்டுமே அறிவார். வாழைக் கட்டை வெளியே மழமழப்பும் உள்ளே கடினப்பாங்கும் கொண்டது. யானையின் துதிக்கையின் மேல் தோல் சுரசுரப்புள்ளது. வெளித் தோற்றத்தில் ஒரு புறம் சிறுத்தும் மறுபுறம் தடித்துமிருப்பதால் உவமைப் பொருளான போதும் சில்லிப்பு மிக்க வாழைத் தடியை வெது வெதுப்புள்ள தொடை வென்றது. தோலின் மழமழப்பால் யானை துதிக்கையை வென்றது. காமேச ஜ்ஞாதஸௌபாக்ய மார்த்தவோ ருத்வயான்விதா (ல.ஸ) தொடையின் மென்மையை காமேசனே அறிவார். மாணிக்ய முகுராகார ஜாநுத்வய விராஜிதா (ல.ஸ) வெளியில் மழமழப்புடன் கண்ணாடி போலிருப்பது. உள்ளே கடினமானது.

## பராஜேதும் ருத்ரம்

சுலோகம் 83

மன்மதன் சிவனை வெல்லத் தன் ஐந்து பாணங்கள் போதாதெனக் கருதி அம்பின் எண்ணிக்கையை இரு மடங்காக்கி அதனை தேவியின் இரு கணுக்கால்கள் என்ற இரு அம்புறுத்தூணிகளில் வைத்தான். ஐந்து பாணங்களைக் கொண்டு சிவனை முன்னர் வெல்ல இயலவில்லை. அம்புகளின் நுனிகளில் பொருத்தி இருந்த கூர்மிக்க இரும்பு முனையை அகற்றி, தேவியின் பத்து கால் விரல் நுனிகளில் பொருத்தினான். அம்பின் நுனிகளை வணங்கி நிற்கிற தேவர்களின் ரத்ன கிரீடத்தில் உரசிக் கூராக்கினான். அவை நகங்களல்ல, மன்மதனின் அம்புகளே, சிவனை காமத்தால் மயக்கித் தேவியின் திருவடிகளில் வீழ்த்த மன்மதனின் திட்டமிட்ட செயல் இது.

## ச்ருதீநாம் ர்த்தாநோ

சுலோகம் -84

வேதம், சிவன், விஷ்ணு என்ற வரும் தேவியின் திருவடிகளைத் தலையால் வணங்குகின்றனர். வேதம் தன் தலையாகிய உபநிஷத்தின் தலையலங்காரமாகக் கொண்டாடுகிறது. விஷ்ணு தலை வணங்கும் போது அவரது சூடாமணி ஒளி தேவியின் பாதங்களில் செம்பஞ்சுக் குழம்பு பூசுவதால் ஏற்படுகிற செம்மையைத் தருகிறது. சிவன் வணங்கும் போது அவரது சடையிலுள்ள கங்கை திருவடிகளை அலம்ப நீர்வார்க்கிறாள். வேதம் யம் காமயே தம் உக்ரம் கரோமி என்ற மந்திரத்தில் தேவி தன் அருள் வீச்சால் மென்மையானவனையும் சிவனாக உக்ரனாக்குகிறேன். (தம்ருஷிம் தம்ஸுமே தாம்) அவனை ருஷியாக பேரறிஞனாகச் செய்வேன் என்ற உறுதி மொழியை வெளிப்படுத்தி தேவியின் பேராற்றலை உலகிற்குத் தலை மேல் தூக்கிக் காட்டுகிறது.

## நமோவாகம் ப்ரூமோ

### சுலோகம் -85

பெண்கள் நடமாடுகிற தோட்டத்திலுள்ள அசோக மரம், தான் பூத்துக் காய்க்காத நிலை கண்டு வருந்தி, பெண்களின் காலால் உதை பெற்றால் பூக்கலாம் என்ற வநஸ்பதிசாஸ்திரத்தில் கண்டுள்ளபடி தேவியின் காலால் உதை பெற பூந்தோட்டத்தில் முன் வரிசையில் நிற்க, சிவனும் அந்த உதை பெற விரும்பி வந்தவர் தன் வரிசையின் முன் நிற்கிற அசோக மரத்தைக் கண்டு அஸூயைப்படுகிறார். கண்களுக்கினிய தோற்றத்துடன் செம்பஞ்சுக் குழம்பு பூசிச் சிவந்த தேவியின் இரு திருவடிகளில் நமஸ்கரிக்கிறேன் என்று தெரிவித்து அவளது கவனத்தை ஈர்த்துப் பின் வணங்குவோம்.

## ம்ருஷா க்ருத்வா

### சுலோகம் -86

சிவனும் திருவடிகளில் வணங்கினார். அப்போது நேர்ந்த வேடிக்கை, சிவனுக்குக் கணவனான தான் தன் மனைவியின் திருவடிகளில் விழுவதற்கான காரணம் கிட்டவில்லை. காதலியை அணுகும் போது அவளது பெயரைக் கூப்பிட நினைத்தவன் தவறுதலாக மற்றொரு பெண் பெயரைக் கூறினால், வேறொருவளுடன் தொடர்புள்ளவன் என்று கருதி அவனிடம் கோபப்பட்டு பராமுகமாக இருப்பாள். உண்மையான காதலனெனில் தன் தவற்றைக் கூறி மன்னிப்புக் கோரிக் கால்களில் விழுவான். சிவனும் இந்தச் செயல் முறையைக் கையாண்டார். தவறுதலாகக் கூறுவதுபோல் கங்கே ! என்று கூப்பிட்டுவிட்டுத் தவற்றை உணர்ந்தவராக வேஷம் போட்டு உமையே ! என வணங்கினார். அருகில் இத்தருணத்தை எதிர் பார்த்து நின்ற மன்மதன் வெகுநாட்களாகத் தன்னுள் கொண்டிருந்த மனத்தாபம் நீங்கப் பெற்றான். தன்னை எரித்த சிவன் தன் குறிக்கோளாகிய காம வசப்படுவது என்ற நிலையை அடைந்துவிட்டதை எண்ணி மகிழ்ந்து சிவனுக்குக் கெக்கெலி கொட்டி மகிழ்ந்ததைத் தேவியின் சரணத்திலிருந்து சலங்கை ஒலிகள் அடையாளம் காட்டின. தன் சரணங்களில் விழவிருக்கிற கணவரைக் கண்டு பரபரப்புடன் தேவி ஒதுங்க, கால்களில் கட்டியிருந்த சதங்கைகள் வேகமாக ஒலித்தன. இதுவே மன்மதனின் வெற்றி நாதம். தேவியின் சரண ஸேவையால் மன்மதனுக்குச் சிவனை வெல்கிற ஆற்றல் கிட்டியது. நமக்கும் காமஜயம் செய்து சாந்தமான தேவீ சரணஸேவை கிட்ட இதுவே உதவும்.

## ஹிமாநீ ஹந்தவ்யம்

### சுலோகம் -87

தேவியின் திருவடிகளுக்கும் தாமரைக்கும் இடையே போட்டி. தேவியின் திருவடிகள் பனிமலையில் குடியிருந்து பனித்தடத்தில் உலாவிக் குளிரைத் தாங்கத் தேர்ந்தவை. தாமரையோ பனியில் கருகிவாடும். தேவியின் சரணங்கள் இரவிலும் அதிலும் இரவின் பின்பகுதியில் தியானத்திற் கேற்றவாறு தெளிந்து காணப்படுபவை.

தாமரையோ இரவில் தூங்கும். (டிக் கொள்ளும்). ஸமயாசாரப்படி வழிபடுபவர்களுக்கு லக்ஷ்மியை கோரியதைவிட அதிகமாக வாரி வழங்குகிற சரணங்கள். தாமரையோ லக்ஷ்மியின் வாஸஸ்தானம் மட்டும். அதனுல் லக்ஷ்மியை வழங்க இயலாது. தேவியின் திருவடிகள் தாமரையை வெல்வதில் வியப்பேது ?

## பதம் தே கீர்தீநாம்

### சுலோகம் - 88

கூர்ம ப்ருஷ்ட்ட ஜயிஷ்ணுப்ரபதான்விதா (ல.ஸ) என வாக்தேவிகள் வர்ணித்துள்ளனர். தேவியின் புறங்கால்கள் ஆமை முதுகு போன்றவையாம். நல்லோர் அதனை அவ்வாறு கூறுகின்றனர். அவையே பலவிதப்புகழ்களுக்கும் இருப்பிடம். விபத்து எதற்கும் இடமளிக்காதவை கூட. கால்களின் மென்மையைச் சிறிதும் உணராத சிவன் திருமணத்தின்போது தன் இரு கைகளாலும் தேவியின் திருவடியை மெல்ல மெல்ல கரிசனத்துடன் நகர்த்தி அம்மி மிதிக்கச் செய்தாராம். அது எப்படி அனுமதிக்கப் பெற்றது ? கொடுமையினும் கொடுமை அது.

## நகைர் நாகஸ்த்ரீணாம்

### சுலோகம் - 89

தேவருலகத்துக் கற்பக மரங்கள் தாங்களே விரும்பியதைத் தருபவர் எனக் கொட்டமடிக்கின்றன. அவை தேவருலகில் இருப்பவருக்கு மட்டும் துளிர்களின் நுனியால் கொடுக்கின்றன. துளிர் எடுக்குமளவே அவை தரும். தேவியின் சரணங்களில் தேவருலகத்துப் பெண்கள் அனைவரும் கைகளைக் குவித்து வணங்குகின்றனர். அவர்களது உலகில் உள்ள கற்பக மரங்கள் தர இயலாததைப் பெறவே தேவியிடம் அப்பெண்கள் சரணடைந்து வணங்கி வேண்டுகின்றனர். ஏழை எளியவர்களிடம் தாமே சென்று பரிவுடன் வினவி எப்போதும் அவர்கள் நாடியதைத் தருகிற சரண நகங்கள் கற்பக மரங்களைப் பரிஹஸிக்கின்றனவாம். தம் சக்தியை நிரூபிக்க நகங்கள் தம்மீது தேவப்பெண்களின் குவிந்த கைகள் பிரதிபலிப்பதைச் சான்ருகக் காட்டி பரிகாசம் செய்கின்றன. கற்பக மரங்கள் வழங்குவதைப் புறக்கணித்துத் திருவடிகளைத் தெய்வப் பெண்கள் நாடுவது போல், நாமும் அற்ப சுகத்தைத் தருபவற்றைப் புறக்கணித்துத் தேவியின் சரணங்களை நாடுவோம்.

## ததாநே தீநேப்ப்ய:

### சுலோகம் - 90

தேவியின் திருவடிகள் மந்தாரமெனும் கற்பக மரத்துப் பூங்கொத்து போல் மென்மையும் காந்தியும் அழகும் கொண்டவை. ஏழை எளியவர் தன்னை அண்டித் தனக்கு விருப்பமானவற்றை வேண்டும் போது அவற்றை அவர்கள் விரும்பியபடி தருபவை. பூக்களிலிருந்து பூந்தாது (தேனுக்கு முன் நிலை) வெளிப்படுவது போன்று தன் அழகை

வாரி இறைத்து கொண்டிருப்பது. பூவிலிருந்து மணத்துடன் பூந்தாது வெளிப்படுவது வண்டுகளைத் தன்பால் ஈர்க்கவே, எத்தனையோ வண்டுகள் சுற்றி வந்து அந்தத் தேனைப்பருகும். வண்டிற்கு ஆறுகால்கள் பூவை நன்கு பற்றித் தேனைப்பருக. நான் என்ற இந்த ஜீவனுக்கு ஐந்து ஞானேந்திரியங்களும் மனமுமாகி ஆறு கால்கள் உண்டு. இதற்குத் தேவை வண்டாகித் தேனை மட்டும் பருகும் இயல்பு. தேவி அந்த வண்டாகும் இயல்பைத் தரட்டும்.

நானும் உள்ளத்தாலும் தரித்ரனே. என் அஹங்காரம் என் குறுகிய வட்டத்திலுள்ள எதிர்பார்ப்புகளை நிரப்பினால் நிறைவுகாணும். தேவியின் அருளால் எதிர்பார்ப்பு நிறையும் போது அவளது பராஹங்காரத்தில் என் அஹங்காரம் லயித்து மறையும். அப்போது தேவையுணர்வே இருக்காது. கற்பக விருக்ஷமாகிய தேவியின் திருவடி அண்டியவனுக்குத் தன்னையே வழங்குகிற இயல்பு கொண்டது. இந்த ஜீவனுக்கு ஆறு சரணங்கள் வழங்கியதே தேவியின் அழகையும் பேராளுமையையும் உணர்வதற்காகத் தான். இந்த ஜீவனை வண்டாக்கினால் இவன் அந்தப் பெருநிலையைப் பெறுவான். வண்டைத் தன்பால் ஈர்ப்பதற்குத் தேவையான பூவின் அழகும் மணமும் அதன் பரமஸாரமான தேனும் உன் திருவடிகளில் உள்ளன. வண்டாவது மட்டும்தான் இவனுக்குத் தேவை. தேவையை நிரப்புவது கற்பகத்தின் இயல்பு.

## பதந்யாஸ க்ரீடா

### சுலோகம் - 91

தேவி மிகமிக அழகாக நடக்கிறாள். அவளைத் தொடர்ந்து ராணிபவனத்தில் வளர்க்கப் பெறுகிற ராஜ ஹம்ஸங்கள் தொடர்ந்து நடக்கின்றன. தன்னைப் போஷிப்பவரைச் சூழ்ந்து நிற்பதும் பின் தொடர்ந்து வருவதும் வளர்ப்புப் பிராணிகளின் இயல்பு. இங்கு மற்றொரு ஆர்வமிக்க பணியில் அவை ஈடுபட்டுள்ளன. தேவியின் நடையை தாம் கற்றுக் கொண்டு அப்படி நடக்கவேண்டும் என்ற பேரவா. உலகில் அன்னநடை முன் மாதிரியாகக் கொள்ளப்பெறுகிறது. இங்கே தேவியிடம் அன்னம் நடைப் பயிற்சி பெறுகிறது. அவள் குருவாகிப் போதிக்கிறாள். எத்தனை கற்றும் பயிற்சி முழுமைப் பெறவில்லை. நடைதவறுகிறது. (ஸ்கலனம் ஏற்படுகிறது). அதனால் அவளை விட்டகலுவதில்லை. அவர்களது பார்வை தேவியின் சரணங்களில் நிலைத்துள்ளது. வேறுநோக்கில்லை. தாமரை போன்று அழகிய சரணங்களில் இனிதொலிக்கின்ற சதங்கைகள் கட்டப்பட்டுள்ளன. தேவி நடக்கும்போது. ஒரே அலைவரிசையில் அவை ஒலிக்கின்றன. அன்னங்கள் அதையே கவனித்து அதற்கேற்ப தன் நடையைப் பழக்கிப் பயில்கின்றன. அந்த அழகு அவர்களது கல்வித் திறனுக்கு அப்பாற்பட்டதாயிருப்பதால் வாழ்நாள் முழுதும் பயின்று கொண்டேயிருக்கின்றன. சலிப்படையாமல் தொடர்ந்து சரணங்களாகிய குருவிடமிருந்து பயிற்சிபெறுகின்றன. அதற்குக் காரணம் தேவி சாரு சரிதா - அழகிய நடையுள்ளவள். சரணத்திற்கும் ஓய்வில்லை. சதங்கை ஒலிக்கும் அதைப் பயில்கிற அன்னபட்சிகளுக்கும் ஓய்வில்லை. தேவி எப்போதுமே இவைகளின் அருகில் உள்ளாள்.

## கதாஸ்தே மஞ்சத்வம்

சுலோகம் - 92

அமுதக் கடலின் நடுவே கற்பகவனத்தின் நடுவே கடம்புத் தோட்டத்திலுள்ள சிந்தாமணி பவனத்தில் ஸதாசிவ மஞ்சத்தில் பரமசிவனின் மடியிலுள்ள தேவி மறுபடி காட்சி தருகிறாள், (ச்லோ 8) அழகிய கட்டில், அதன் நான்கு கால்களாக நின்று தாங்குபவர்கள். பிரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசுவரன் என்று படைப்பு முதலியவற்றில் அதிகாரம் பெற்ற நால்வர். ஐந்தாவது அதிகாரியான் ஸதாசிவன் கட்டிலின் மேற் பலகையும் விரிப்பும். விரும்பியபடி வடிவேற்கிற ஆற்றல் பெற்ற இவ்வைவரும் தேவியின் ஆஸனமாக - கட்டிலாக - வடிவெடுத்துள்ளார்கள். பஞ்சப்ரம்ஹாஸன ஸ்த்திதா - பஞ்சப்ரேதமஞ்சாதி சாயினீ (ல.ஸ) அதன் மீது சிவதத்வஸ்வரூபியான பரமசிவன் நிறக்கலவையற்ற தூய வெண்ணிறம் கொண்ட ஆடை. அது ஆடையாகத் தெரியாமல் பேரொளிக் குவியலாக மேல் போர்த்தியிருக்கிறது. தேவியின் செவ்வொளி ஸ்படிகம் போன்ற சிவன் மீது படர்ந்து அவரையும் செந்நிறமுள்ளவராக்கியுள்ளது. சிருங்கார ரஸத்தின் நிறம் சிகப்பு என்பர். அந்த சிருங்காரரஸமே உருவெடுத்தது போன்று அமர்ந்துள்ளார். இந்த பின்னணி எனும் பரபாகம் மீண்டும் மீண்டும் காணச் செய்கிற ஆர்வத்தைத் தொடர்ந்து சுரந்து கொண்டேயிருக்கிறது. காணக்காணப் பரமானந்தம்.

ஸதாசிவன் ப்ரச்சதபடமாக மேல்விரிப்பாக உள்ளார் என்றும் கூறுவர். சிவனுள் சக்தி அருணவர்ணத்தால் பரவி சிவசக்தியைக்யரூபிணியாக உள்ளாள். சிவனும் ஸதாசிவக் கட்டிலும் பிரும்ம விஷ்ணு ருத்ர ஈசுவரக்கால்களும் இவற்றின் மீதமர்ந்துள்ள தேவியே என்ற பாவனை பேரானந்தம் தருகிறது.

## அராளா கேசேஷு

சுலோகம் - 93

வக்ரம் - நேர், மென்மை - கடினம், இளைப்பு - பருமன் என்ற முற்றிலும் மாறுபட்ட நிலையை ஒரே பொருளில் காண்கிறோம். கேசங்கள் சுருள் சுருளாக உள்ளன. அவற்றிற்கு நேர்மை தெரியாதுபோல. புன்சிரிப்பு கவடமின்றி வெளியாவதால் நேர்மை உள்ளது. இதற்கு வஞ்சகவக்ரம் தெரியாது. உள்ளத்தில் சிறு வாகைப்பூ போன்ற மென்மை. அதனைத் தாங்கும் மார்பகம் அம்மி போன்று கடினம். இடை மெலிந்துள்ளதெனில் அதனைத் தாங்குகிற இடுப்பு பருத்தது. சிவனது கருணை உலகைக் காக்கும் பணிக்காக செந்நிறமுள்ள தேவியாகக் காணப்படுகிறது. அருணநிறம் வடிவெடுத்து வந்துள்ளது. அது சிவனது கருணை. கருணையும் அருணையாக வடிவெடுத்துள்ளது.

## களங்க: கஸ்தூரீ

சுலோகம் - 94

தேவியின் முன் ஒரு கிண்ணம் தேவியின் பணிவிடைக்கான பொருள் நிரம்பியதாக வைக்கப்பட்டுள்ளது. உற்றுநோக்கும்போது அது முழு சந்திர மண்டலம். அதனுள்

*கஸ்தூரி வைக்கப்பட்டுள்ளது. வெளிப்பார்வைக்கு அது சந்திரனிடமுள்ள களங்கமாகத் தெரிகிறது. மண்டலமாகிய கிண்ணத்தினுள் நீர் நிரம்பியுள்ளது. அதுவே சந்திர பிம்பமாகக் காட்சி தந்து குளிர்ச்சி தருகிறது. பச்சை கற்பூரத்தை நீரில் கலந்ததும் சந்திரகலை போன்று தெரிகிறது. அந்த கிண்ணத்தில் உள்ள நீர் தூரப் பார்வைக்குக் குளத்து நீர் போல் பச்சையாகத் தெரிகிறது. கிண்ணமும் மரகதக் கிண்ணமாகி விடுகிறது. தேவி அந்த நீரைப் பருகியதும் பிரும்மா உடனுக்குடன் கிண்ணத்தை நிரப்பி விடுகிறார். அதனால் எப்போதும் பூர்ணமாகத் தெரிகிறது. தேவியின் எதிரிலுள்ள சந்திர மண்டலம் மணமிக்க பன்னீர் நிறைந்த கிண்ணமாகத் தெரிகிறது.*

*தேவியைச் சுற்றி 15 நித்யா தேவிகள் உள்ளனர். அவர்கள் அமர்ந்துள்ள பகுதியைச் சந்திர மண்டலமாகப் பாவிப்பர். சந்திரன் ஒவ்வொரு கலையாக வளர்கிற சுக்லபக்ஷத்தில் காமேச்வரி முதல் சித்ரா வரையிலுமாக வளர்ந்தும் கிருஷ்ண பக்ஷத்தில் சித்ரா முதல் காமேச்வரி வரையிலுமாக தேய்ந்தும் பின்னர் எப்போதும் நித்யையாக இருப்பதாகத் தியானிப்பர். பிரும்மா தினமும் வழிபடும் போது ஒவ்வொரு நித்யாவாக அர்பணித்துப் பின் சூன்யமான மண்டலத்தை நித்யா வரிசையால் நிரப்புவார். ஶ்ரீ வித்யை பூஜைக்கான நித்யைகளைக் கொண்டு பிரதமை முதலிய திதிகளைக் குறிப்பிடுவது உண்டு. நித்யையைக் கொண்டு திதியைக் குறிப்பிடுவதால் திதி நித்தியைகள் என்றே பெயர்.*

## புராராதேரந்த: புரமஸி

### சுலோகம் - 95

*முப்புரங்களை ஆண்ட அஸுரர்கள், அவர்களது நகரமக்கள், அவர்கள் வசித்த ன்று நகரங்கள் என அனைத்தையும் மற்ற தேவர்கள் வலிவிழந்திருந்த போது தான் ஒருவனே வேறு சாதனமின்றி சிரிப்பால் சுட்டெரித்தவர் திரிபுராரி. தேவி அவரது அரண்மனையினுள் உள்ள மஹாராணி. அவளைச் சென்று காணத் தகுதி மனவடக்க மிக்க பக்தி. அவள் சஞ்சல மனம் படைத்தவருக்கு எட்டாதவள். 9 ஆவரணங்களின் இடையே தேவி உள்ளாள். ஆவரணங்களுக்கு ன்று பாதுகாப்புச் சுவர்கள். அவற்றின் இடையே உள்ள மதில் வாசலை அணிமாதி ஸித்தி தேவிகள் காக்கிறார்கள். இந்திரன் முதலிய தேவர்கள் கூட அந்த ஸித்தி தேவிகளை வணங்கி வழிபட்டு உள்ளே செல்கிற அனுமதி பெறுகிறார்கள். அந்த அனுமதியே பெரும் சித்தி. உள்ளே சென்று பார்க்கத் தகுதிபெற அணிமாதிகளை முதலில் வழிபட வேண்டும். மனவடக்கமும் பக்தியும் கொண்டவர்களை அந்த யோகினிகள் உள்ளே முறைப்படி கொண்டு சேர்ப்பர்.*

## களத்ரம் வைதாத்ரம்

### சுலோகம் - 96

*தக்ஷனின் மகளாகப் பிறந்த ஸதீ. தன் தந்தை தன் கணவனை அவமதித்ததை தாங்க முடியாமல் யோகாக்னியில் தீய்ந்தவள். நல்ல பதியை அடைய உமையை வழிபடுவர். பதிவிரதைகளுக்குள் மிகச் சிறந்தவள். ஸரஸ்வதியின் அருளையும் லக்ஷ்மியின் அருளையும் பெற்றவர்களைப் பேச்சளவில் வாக்பதி, வாசஸ்பதி - லக்ஷ்மீபதீ,*

ஸரஸ்வதியும் லக்ஷ்மியும் அவன் வீட்டில் நடனமாடுகின்றனர். என்றவாறு கூறுவதுண்டு. தேவியை அவ்வாறு எவரும் கூறுவதில்லை. நல்ல ஸ்த்ரீகள் மருதாணிச் செடியை மார்பால் அணைத்தால் அந்தச் செடி மரமாகிப் பூத்துக் காய்க்கும் என வனஸ்பதி அறிஞர்கள் கூறுவர். மருதாணியுடன் கூட தேவி இந்த உடல் ஒட்டுதலைத் தராதவள். மஹாதேவன் ஒருவரே பதி என்ற உரிமைக்கும் உடல் மீது தொடுவதற்கும் உரிமை பெற்றவர்.

## கிராமாஹுர் தேவீம்

### சுலோகம் - 97

*பரப்பிரும்ம அரசனின் பட்ட மஹிஷி தேவி. பராசக்தியிடம் உலகத் தோற்றத்தின் அதிகாரிகளாகத் தோன்றிய பிரம்மா - ஸரஸ்வதி, விஷ்ணு - லக்ஷ்மி, உமா - சிவன் என்ற ன்று தம்பதியர். தேவியே ஸரஸ்வதி லக்ஷ்மி உமா என்ற ன்று வடிவங்களைப் பெற்றாள். இம்வருக்கும் அப்பால் உள்ள ல நிலை துரீயா. விழிப்பு, கனவு, தூக்கம் என்ற நிலைகளைத் தவிர இம்ன்றின் பாதிப்பு சிறிதுமில்லாத பரவெளி போன்ற நிலை உண்டு. அது துரீயம் எனப்படும். அதில் காணப் பெறுபவள் துரீயா. அதன் பெருமை அறிவுக்குட்படுகிற எல்லையைக் கடந்தது. பரப்பிரும்ஹ சக்தியே மஹாமாயாவாகி உலகத்தின் லப் பொருளாகவும் இயக்குபவளாகவும் உள்ளவள். அவளே உலகைத் தோன்றி வாழ்ந்து மறையச் செய்து தோற்றமும் மறைவும் என்று சுழலச்செய்பவள். சுழலுக்கு உட்படுத்துபவள். (ப்ப்ரமயஸி). இவளே மஹாகாளீ, மஹாஸரஸ்வதீ, மஹாலக்ஷ்மீ என தோன்றியவள் என தேவீ மாஹாத்ம்யம் கூறும். இவள் மஹா மாயை. (அறியாமையை அறிவென்றும் பயமில்லாத நிலையைப் பய நிலை என்றும் காக்காதவரைக் காப்பவரும் என்றும் அழிவதை நித்யமென்றும் கருதச் செய்கிற மாயை அல்ல. இது காண்பவரின் பார்வையை மறைத்துத் தவறுன காட்சியைக் காண வைக்கிற ஏமாற்றம். மஹாமாயாவோ, அறிவிற்கப்பாற்பட்டதன்னை அறிவுக்குட்படுபவளாக, ரூபமும் குணமும் ஏனைய வேறுபடுத்துபவை எவையுமற்ற பூர்ண ரூபத்துடன் குணத்துடன் தானே வகுத்த செயல் முறையைக் கொண்டு ஸ்வதந்திரமாக இயங்குகிற பேராற்றலும் பேருணர்வும் பேரிருக்கையும் கொண்டவளாகத் தானே முன்வந்து காட்டுகிற பராசக்தி. அவள் உலகைச் சுழற்றுகிறுள். ஒரு முளையில் கட்டப்பட்ட பொருள் வேகத்துடன் இயங்கும்போது சுழலாகத் தான் இருக்கும். மஹாமாயை என்ற லத்தில் பிணைக்கப் பெற்றுள்ள உலகம் நடுப்புள்ளியை விட்டகல முடியாமல் வேக இயக்கத்திற்கு இடம் கொடுத்துச் சுழல்கிறது.*

## கதா காலே மாத:

### சுலோகம் - 98

*பெண்கள் தங்கள் உதடுகளுக்கும் சரணங்களுக்கும் ஸெளமங்கல்யச் சின்னமாக அழகுப் பொருளாகச் சாயம் பூசிக்கொள்வர். கால்களுக்கிடும் பூச்சு செம்பஞ்சுக் குழம்பு, கொம்பரக்குக் குழம்பு என்பர். தேவியின் சரணங்களிலிட்ட செந்நிறக் குழம்பு பாத்யம்*

*என்ற உபசாரத்திற்காக கால்களை அலம்புகிற நீரில் கலந்துவிடும். பாதம் கழுவிய நீரைப் பருகுவது வழக்கம். ஆசார்யாள் தன்னை கல்வி பெற வந்த மாணவனுக்கி அந்த நீரைப் பருக விரும்புகிறார். அந்தப் புனித நீர் பிறவி ஊமையையும் கவியாக்கும். ஸரஸ்வதி தன் வாயிலிட்டுச் சுவைத்த தாம்பூலத்தின் சாற்றை ஊமையின் வாயில் துப்பிக் கவியாக்குகிறாள் என்பர். அந்த வாய்ப்பு தனக்குக் கிட்டுமா என ஏங்குகிறார். ஆசார்யாள் பிறவி ஊமையின் தலையில் தன் வலது கைத்தலத்தை வைத்துத் தனது லகுஸ்தவத்தையும் சர்ச்சாஸ்தவத்தையும் சொல்ல அதன் விளைவாகத் தேவியின் பாதநீர் (ஸஹஸ்ராத்திலிருந்து பெருகுகிற அமுத நீர்) சுரந்து அதனைப் பருகிய ஊமை கவியானான் என்பர். அந்த வாய்ப்பு தனக்கு எப்போது என வேண்டுகிறார். காளிதாஸன் முதலானோரின் வாயில் ஸரஸ்வதி - காளி வடிவினளான தேவி இவ்வாறு தாம்பூல ரஸத்தைத் துப்பியதால் அவர்கள் கவியானார்கள் என்பர்.* ***(தெய்வத்தின் குரல்) ஸ்ரீ சரணர்களின் விளக்கமில்லை.***

## ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா

சுலோகம் - 99

*தேவியை வழிபடுபவன் ஸரஸ்வதி - லக்ஷ்மி தேவிகளின் அருளால் பேரறிவும் பெரும் சம்பத்தும் பெறுவர். (இதுகாறும் அத்தகைய பேரறிவும் சம்பத்தும் பெறாத பிரும்மாவும் விஷ்ணுவும் இவனிடம் அசூயைப்படுவர்.) ரதி இவனைக் கண்டதும் இவன் மன்மதனாக இருக்கக் கூடாதா ? என்று ஏங்குவாள். கால்நடை போன்று வெளிப்பொருளின் அடிமையாக நிற்கிற பசுபாசம் நீங்கி நீண்ட ஆயுளைத் தத்துவ உணர்வுடன் கடத்திப் பேரானந்த நிலையை ரஸித்து அனுபவிப்பான். இந்த ஸ்தோத்திரமும் தேவியின் வழிபாடே. அதனால் இதனை எப்போதும் உளமாறக் கூறுவதும் வழிபாடே. இவ்வாறு வழிபடுபவனும் பேரானந்தம் பெறுவான். இதுவும் பலச்ருதியே.*

## ப்ரதீப ஜ்வாலாபி:

சுலோகம் - 100

*ஆசாரியாள் தனது பிரபஞ்சஸாரம் என்ற மந்திர சாஸ்திர நூலில் வாகீச்வரி ஸ்துதி. புவநேச்வரீ ஸ்துதி, சிவஸ்துதி, ஹரிஸ்துதி என நான்கு ஸ்தோத்திரங்களை அவரது மந்திர விதானத்தின் தொடர்பாக எழுதியுள்ளார். அவை இன்றைய ஸ்ரீ சங்கராசார்ய ஸ்தோத்திர மாலா தொகுப்புகளில் இடம் பெறவில்லை. மிக மிக அழகானவை. புவனேச்வரீஸ்துதியில் இந்த ஸௌந்தர்யலஹரியின் கருத்துக்கள் அப்படியே இடம் பெறுகின்றன. அதில் 2வது சுலோகம்.*

स्तुतिर्वाक्यबद्धा, पदात्मैव वाक्यं पदं त्वक्षरात्म अक्षरस्त्वं महेशि ।
ध्रुवं त्वां त्वमेव अक्षरैः त्वन्मयैःस्तोष्यसि त्वन्मयी वाक्प्रवृत्तिर्यतः स्यात् ।

**ஸ்துதி: வாக்யபத்த்தா பதாத்மைவ வாக்யம்**
**பதம் த்வக்ஷராத்ம அக்ஷரஸ்த்வம் மஹேசி ।**
**த்த்ருவம் த்வாம் த்வமேவாக்ஷரை: த்வந்மயை:**
**ஸ்தோஷ்யஸி த்வந்மயீ வாக்யவ்ருத்திர் யத: ஸ்யாத் ॥**

*துதி என்பது வாக்யங்களால் அமைந்தது. பதங்களே வாக்கியமாகின்றன. பதமோ அக்ஷரங்களே. அக்ஷரம் நீயே. அதனுல் நீயே நீயேயான அக்ஷரங்களால் துதிக்க விருக்கிருய். வாக்கை வெளிப்படுத்துகிற ஆற்றலும் (அறிவும்) நீ தானே. இந்த கருத்தை கடைசி சுலோகத்தில் தேவியிடம் அர்பணம் என்ற நோக்கில் விண்ணப்பிக்கிருர். வாக்கின் தாயே ! உன் உரிமைப் பொருளான வாக்கைக் கொண்டே உன் பொருட்டு உன் சக்தியால் வெளியான ஸ்துதி இது. இதை உனக்கு அர்பணம் செய்வது சிறிய கை விளக்கைக் கொண்டு ஸூர்யனுக்கு தீபாராதனை செய்வது போலாகும். விளக்கென்ற பொருளோ திரியோ (சூடமோ) எண்ணெய்யோ உண்மையில் தீபமல்ல. விளக்கை ஆதாரமாகக் கொண்டு திரியையும் எண்ணெயையும் எரித்து அதன் லம் உலகை விளக்குகிற அக்னியல்லவா நீ. ஸூர்யன் பேரொளித் தீபம். ஸூரியன் என்ற ஆதாரத்தின் மீது துலங்குகிற பேரொளியும் நீ தானே ! ஸூரியனே ஒளி வேண்டித் தேவியிடம் வேண்டுகிருன். அந்த ஸூரியனுக்கு நீ வெளிச்சம் போடுகிருயா ? இருட்டறை போன்ற ஆலய கர்ப்ப கிருஹத்திலுள்ள ஈசனின் திருவுருவை தீபம் ஒருக்கால் விளக்கக் கூடும். அதனை ஸூரியனின் எதிரே பயன்படுத்துவதா? சந்திரன் அமுதத்தைத் தம் கிரணங்கள் லம் பொழிகிருன். அவனுக்கு அர்க்கியம் என சந்திர காந்தப் பாறை மீது நிலவுபட்டுக் கசிகிற நீரால் அர்க்க்யம் விடுவதா ? கடலில் நீராடச் சென்று நீராடிய பின் ஸமுத்ரராஜம் தர்பயாமி என கடல் நீரைக் கொண்டே திருப்தி தருவதாக (தர்பணம்) நீரை வாரி இறைப்பதா ? உனது உரிமைப் பொருளான வாக்கை அவ்வாறு உணர்ந்து உன்னிடம் சேர்ப்பிப்பதற்கான என் முயற்சி இது. அம்முயற்சியும் உன் தூண்டுதலால் நீ கூட இருந்து இயக்குவதால் நிறைகிறது.* பரதேவதார்ப்பணமஸ்து.

## ஸமாநீத: பத்மாம்

சுலோகம் - 101

***ஸூரியன் தேவியின் எதிரே நின்ருல் தன்னொளிபட்டு தேவியின் முகம் வாடுமோ என்று பயந்து தன்ஞெளிக் கதிர்களைப் பரவாதபடி தன்னுள்ளே அடக்கி நிலைக் கண்ணாடி ஆனுன். அவனது இதயம் தாமரையாகி சந்திரன் தோன்றும் போது குவிகிற நிலையின் எதிர்பார்ப்பின்றி எப்போதும் மலர்ந்து தேவியின் எதிரே நிற்கிறது. தேவியின் தாமரை போன்ற முகம் இதயத் தாமரையாகிய கண்ணுடியில் பிரதி பலிக்கிறது.***

## ஸமுத்பூதஸ்தூல

சுலோகம் - 102

***உனது பக்தர்கள் உள்ளத்தில் அப்பழுக்கற்றவராகின்றனர். உனது ஸாரூப்பம் பெறுகின்றனர். உன் அருகில் வசிக்கிற பாக்யம் பெறுகின்றனர்.***

## நிதே நித்யஸ்மேரே

சுலோகம் - 103

***பரம்பொருளாக இந்த உலகத்தின் ஆதாரமானவளே ஸகுணவடிவில் தாயாகி சிசுக்களான ஜீவர்களிடம் புன் சிரிப்புடன் அணுகுகிருள். அவரவர் விதி - தகுதிகளுக்கேற்ப***

தனித்தனியே தக்க நேர்வழி காட்டுபவள். அவளை எதுவும் கட்டுப்படுத்த இயலாது. அந்தப் பராசக்தி அடக்கமுள்ளவரின் அலைபாயாத உள்ளத்தினுள் குடியிருப்பவள். வேதங்களாலும் உபநிடதங்களாலும் துதிக்கப் பெறுபவளாயினும் மழலைச் சொற்களால் பேசுகிற - உன்னை முழுவதுமறியாத இவனது துதியையும் நீ ஏற்பாய் என எதிர்பார்க்கிறேன். நீ உளம் குளிரக் கேட்பாய் ! உலகம் இதனை வேதமாக ஏற்று அதுவும் இதனைக் கொண்டு உன்னைத் துதி செய்யும் இதனை (நிகமய) வேதமாக்குவாய் என்பது என் உள்ளக்கிடக்கை. விதியை மாற்றுமல் விதியை அனுகூலமாகக்குகிற கருணையே உன் நீதி. அதனுல் தானே வலியத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்பவரிடத்தில் எளிதில் புலப்படுகிருய். நிர்க்குணமான உனது நிலையை என் போன்றவர் உணர இயலாதென நிரவதிகுணா ஆகிருய் - குணச்சிறப்பைக் காட்ட வெவ்வேறு வடிவங்களை ஏற்கிருய். பாமரனும் எளிதில் புரிந்து கொள்ள பல லீலைகளால் உன் சிறப்புகளை வெளிப்படுத்துகிருய். தேசமோ காலமோ உன் இயல்பைக் குறுக்கிட இயலாது. பேரறிவும் பேருணர்வும் உனது ஸ்வரூபமானதால் உனது பல ர்த்திகளிலும் அவை குன்றுமல் வெளிப்படுகின்றன. ஸூரியன் நமஸ்காரத்தாலும் விஷ்ணு அலங்காரத்தாலும் சிவன் அபிஷேகத்தாலும் சண்டியான நீ ஸ்துதி பாடத்தாலும் உள்ளம் நிறைந்த மகிழ்ச்சி பெறுவீர்கள் எனப் புராணம் கூறும். அதனுல் என் இந்த ஸ்துதியை ஏற்று அதனைப் பக்தர் அனைவரும் துதிப்பதற்கு ஏற்றதாகக் கொள்ளவும் அருள் புரிவாய்.

**ஸ்ரீமாதா ஜயதி**

